வி. என். கியோர்கியெவ்,
வி. என். கொப்தேவ்ஸ்கி,
இ. அ. ருமியான்த்செவ்,
கி. அ. ஷெர்பக்கோவ்

# சோவியத்-இந்திய உறவுகள்

(இராஜதந்திர உறவுகள் நிலைநாட்டப்பட்டதன்
40ஆம் ஆண்டு விழாவிற்கு அர்ப்பணிப்பு)



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ பிரைவேட் லிமிடெட
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: டாக்டர் இரா. பாஸ்கரன்

**В. Н. Георгиев, В. Н. Коптевский,**
**Е. А. Румянцев, Г. А. Щербаков**

СОВЕТСКО-ИНДИЙСКИЕ ОТНОШЕНИЯ

*на тамильском языке*

**V.N. Georgiev, V.N. Koptevsky,**
**E.A. Rumyantsev, G.A. Scherbakov**

SOVIET-INDIAN RELATIONS

*in Tamil*

**வாசகர்களுக்கு**

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும் முன்னேற்றப் பதிப்பகம் மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களை "Progress Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR" என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

C $\frac{0802010100-187}{014(01)-88}$ 328-87

# பொருளடக்கம்

## அத்தியாயம் ஒன்று

# நட்புறவின் ஆரம்பம்

*1947ஆம் ஆண்டு ஏப்ரல் 13ஆம் தேதி சோவியத்-இந்திய உறவுகளின் புகழ்மிகு வரலாற்றில் விசேஷ இடத்தை வகிக்கிறது. பல பத்தாண்டுகள் உருண்டோடுகின்றன, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நட்புறவு மற்றும் ஒத்துழைப்பின் சீரிசைவான வளர்ச்சி புதிய மைல் கற்களை கடந்து வருகிறது. ஆனால் அந்த நாளில் நடந்த சம்பவத்தின் முக்கியத்துவம் சற்றும் மங்கவில்லை: ஆம், அன்றுதான் இராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொண்டதைப் பற்றி சோவியத் யூனியனும் இந்தியாவும் அதிகார பூர்வமாக அறிவித்தன.*

*இதற்கு விசேஷ உட்பொருள் இருந்தது; உலகின் முதல் சோஷலிச அரசும், மிகப்பெரும் ஆசிய நாடுகளில் ஒன்றும் (இது கிட்டத்தட்ட இருநூறு ஆண்டுகள் காலனியாதிக்க நுகத்தடியின் கீழிருந்தது) ஒத்துழைப்பை வளர்ப்பதில் தமக்குள்ள பரஸ்பர நாட்டத்தை ஒருவரை ஒருவர் இராஜதந்திர ரீதியாக அங்கீகரித்ததன் மூலம் ஊர்ஜிதப் படுத்தின.*

*பல நூற்றாண்டுகளாகவே நம்மிரு நாடுகளின் மக்களும் நல்லண்டை உறவுகளையும் பரஸ்பர கலாச்சாரச் செழுமையையும் நாடி வந்துள்ளனர். முதல் ருஷ்ய வரலாற்றுக் குறிப்புகளிலேயே இந்தியாவைப் பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. பழங்காலத்தில் கூறப்பட்டபடி, ''மதிநுட்பம் வாய்ந்த இந்தியாவையும்'' இந்நாட்டு மக்களையும் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம் பண்டைய காலத்திலேயே ருஷ்ய மக்களிடம் தோன்றியது. 15ஆம் நூற்றாண்டின் இரண்டாவது பாதியில், போர்ச்சுகீசியர் வாஸ்கோ டா காமாவிற்கு நீண்ட காலம் முன்னரே, ருஷ்ய மக்களின்*

நட்புத் தூதுவர், ட்வெர் மாகாணத்தைச் சேர்ந்த வர்த்தகர் அபனாசி நிக்கீத்தின் இந்தியாவிற்கு பயணம் செய்தார். இதுதான் அவருடைய பிரபலமான "மூன்று கடல்களைத் தாண்டிய பயணம்" என்றழைக்கப்படுகிறது. இதைப் பற்றிய தன்னுடைய நினைவுக் குறிப்புகளில் இவர், திறமை மிக்க, உழைப்பார்வமுள்ள இந்திய மக்களின் வாழ்க்கையை அழகுபட, அடையாளச் சிறப் போடு விளக்குகிறார், இந்திய மக்களின் பழக்க வழக்கங் களைப் பற்றிக் கூறுகிறார், கலாச்சாரம், வர்த்தகம், கைத்தொழில்களின் வளர்ச்சி பற்றியும் இந்திய சமுதாயத் தின் சமூக உறவுகளைப் பற்றியும் எடுத்துரைக்கிறார்.

18ஆம் நூற்றாண்டின் பிரபல ருஷ்ய அறிவொளியாளரும் விஞ்ஞானியுமாகிய மி. வ. லமனோசவ், இந்தியாவுடன் வர்த்தக உறவுகளை நிலைநாட்ட வேண்டுமென்று பகிரங் கமாகக் கோரினார். 17ஆம் நூற்றாண்டிலேயே ருஷ்யாவின் பெரும் வர்த்தக மையமாகிய ஆஸ்திரகனில் இந்திய வர்த்தகர்களின் ஒரு இருப்பிடம் ஏற்படுத்தப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது. இங்கிருந்து இந்தியப் பொருட் கள் மாஸ்கோவிற்கும் மற்ற ருஷ்ய நகரங்களுக்கும் அனுப்பப்பட்டன. இந்திய வணிகர்களுடன் நன்கு பழகி, சகல வித உதவிகளையும் அவர்களுக்குச் செய்யுமாறு ஆஸ்திரகன் கவர்னர்களுக்கு கட்டளையிடப்பட்டிருந்தது. பின்வரும் சம்பவம் ஆஸ்திரகனில் வாழ்ந்த இந்தியர்களுக்கு ருஷ்யாவின் பாலும் ருஷ்ய மக்களின் பாலும் இருந்த நல்லுறவிற்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். 1812இல் பிரெஞ்சு ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிரான ருஷ்ய மக்களின் தேசபக்த யுத்தத்தின் போது ஆஸ்திரகனில் வாழ்ந்த இந்தியர்கள் ருஷ்யப் பாதுகாப்பு நிதிக்காக 20,000 ரூபிள்களை (இது அக்காலத்தில் ஒரு பெரும் தொகையாகும்) வழங்கினர்.

1788லேயே **பகவத்கீதை** ருஷ்ய மொழியில் வெளிவந்தது. **நளனும் தமயந்தியும்** எனும் படைப்பை கவிஞர் வி. அ. ஷூக்கோவ்ஸ்கி ருஷ்ய மொழியில் மொழிபெயர்த்தார். இது 1844இல் பீட்டர்ஸ்பர்கில் வெளியிடப்பட்டது. மாபெரும் ருஷ்யக் கவி அ. செ. பூஷ்கினும் பண்டைய இந்திய இலக்கியம், தத்துவஞானத்தின் மீது பேரார்வம் காட்டினார். இவருடைய படைப்புகளில் 26 இடங்களில்

இந்தியாவைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக **ருஸ்லானும் லியூத்மீலாவும்** என்ற கவிதையில் அ. செ. புஷ்கின் இந்திய நாட்டுப் பாடல்களின் அம்சங்களைப் பயன்படுத்தியிருக்கின்றார்.

18ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 19ஆம் நூற்றாண்டின் துவக்கத்திலும் இருந்த பிரபல ருஷ்யக் கவிஞர்களும் எழுத்தாளர்களும் வரலாற்று அறிஞர்களும் ருஷ்ய மக்களுக்கு பண்டைய இந்திய இலக்கிய, தத்துவஞானப் படைப்புகளை அறிமுகப்படுத்த பெரிதும் பாடுபட்டனர் என்பது தெரிந்ததே. 1792ஆம் ஆண்டிலேயே பிரபல ருஷ்ய வரலாற்று அறிஞரும் அரசியல் பிரமுகருமாகிய நி. மி. கரம்ஸீன் **மாஸ்கோவ்ஸ்கி ஜூர்னாலில்** (''மாஸ்கோ சஞ்சிகை'') காளிதாசரின் **சகுந்தலையிலிருந்து** 1வது, 4வது பகுதிகளை பிரசுரித்தார். 4வது பகுதியின் மொழிபெயர்ப்பிற்கான முன்னுரையில் நி. மி. கரம்ஸீன் பின்வருமாறு எழுதினார்: ''இக்காவியத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் உயர்ந்த கவியழகையும் மேன்மையான உணர்வுகளையும் பண்பார்ந்த, அற்புதமான, வருணிக்க முடியாத மென்மையையும் கண்டேன். ஹோமாரைப் போன்றே காளிதாசரும் என்னைப் பொறுத்த மட்டில் மகத்தானவர்'' * .

அடக்குமுறை மற்றும் சர்வாதிகாரத்திற்கு எதிராக சமூக மற்றும் தேசிய விடுதலைக்காகப் போராடிய பிரபல ருஷ்ய, இந்திய சமூக நலப் பிரமுகர்களும் அரசியல் வாதிகளும் இரு நாட்டு மக்களும் நெருங்கி வர பெரும் பங்காற்றினர். ருஷ்யாவின் தலைசிறந்த அறிஞர்கள் இந்தியாவில் தேசிய விடுதலை இயக்கத்தின் எழுச்சியை ஆழ்ந்த அன்புடன் உன்னிப்பாக கவனித்து வந்தனர், இந்திய அறிவுத்துறையினர், விழிந்தெழுந்து கொண்டிருந்த மக்கள் திரளினரின் காலனி எதிர்ப்பு மனநிலைகளை நன்கு புரிந்து கொண்டனர். 1857—1859ஆம் ஆண்டுகளின் இந்திய எழுச்சி ருஷ்யாவில் நல்ல எதிரொலியை ஏற்படுத்தியது. ''இந்தியாவைப் பற்றிய பிரச்சினையை விட அதிக முக்கியமான, ஆர்வம் ஏற்படுத்தக் கூடிய, தீவிர பிரச்சினை அரசியல் உலகில் வேறொன்று இன்று இருக்க

---

* டி. இ. பேல்கின், ''அ. செ. புஷ்கினின் படைப்பில் இந்திய அம்சங்கள்''. — **இந்தியா, 1983. ஆண்டு மலர்**, மாஸ்கோ, 1985, பக்கங்கள் 360-61 (ருஷ்ய மொழியில்).

இயலுமா... இந்தியச் செய்திகளுக்காக மிக ஆர்வமாக அனைவரும் காத்திருக்கின்றனர்; 'இந்தியா', 'இந்தியத் தபால்', 'கல்கத்தா செய்தி' போன்ற மந்திரச் சொற்களை முதலில் பத்திரிகைத் தலைப்புகளில் தேடுகின்றனர்'' * என்று **அந்தேசெஸ்த்வென்னியே ஸப்பீஸ்கி** (''தாயகக் குறிப்புகள்'') பத்திரிகை எழுதியது.

ருஷ்ய சமுதாயத்தின் முற்போக்காளர்களும் புரட்சிகர ஜனநாயகப் பிரதிநிதிகளும் இச்சம்பவத்தை இந்திய விடுதலை சகாப்தத்தின் துவக்கமாகக் கருதினர். இந்த எழுச்சி தற்செயலான அதிருப்தி வெடிப்பல்ல, மாறாக, ''வரலாற்று ரீதியான அவசியம்'' என்று ருஷ்யப் புரட்சியாளரும் ஜனநாயகவாதியுமான நி. அ. தப்ரலியூபவ் சரியாகக் கோடிட்டுக் காட்டினார். ''மக்கள் பிரிட்டிஷ் நிர்வாக அமைப்பிலேயே கொடுமையைப் பார்த்ததால்தான் கிளர்ந்தெழுந்தனர்'' ** என்று அவர் எழுதினார்.

1896இல் பரவலான இந்தியப் பிரதேசங்கள் கொடும் பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட போது பட்டினி கிடந்தவர்களுக்கு உதவுவதற்காக ருஷ்யாவில் நிதி திரட்டப்பட்டது.

லேவ் டால்ஸ்டாய் இந்திய மக்கள் மீது பெரும் அன்பு செலுத்தினார். இந்திய தேசிய விடுதலை இயக்கத்தில் புதிய சக்திகளுக்கு ஊக்கமளித்த மகாத்மா காந்தியுடன் இவருக்கு ஆழ்ந்த ஆன்மீகத் தொடர்பு ஏற்பட்டது. லேவ் டால்ஸ்டாய் தன் மீது பெரும் செல்வாக்கு செலுத்தியதாக இந்திய தேசத் தந்தையே கூறினார். யாஸ்னயா பல்யானா எனும் இடத்தில் உள்ள லேவ் டால்ஸ்டாய் நினைவுக் கூடத்தில் உள்ள ஏராளமான இந்திய நூல்களில் மகாத்மா காந்தியின் **இந்திய சுயநிர்வாகம்** எனும் படைப்பும் உள்ளது.. இந்நூலை காந்தியே மாபெரும் ருஷ்ய எழுத்தாளருக்கு அனுப்பினார். காந்தி, தென்னாப்பிரிக்காவில் பணியாற்றிய போது இவருக்கும் டால்ஸ்டாய்க்கும் இடையே கடிதத் தொடர்பு இருந்தது. 1909 அக்டோபர் 1ஆம் தேதி எழுதிய கடிதத்தில் காந்தி தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் ஒடுக்கப்படுவது பற்றி குறிப்பிட்டார். 1909 அக்டோபர் 7ஆம் தேதி அனுப்பிய தன் பதிலில்

---

* **1857—1859இல் இந்திய மக்கள்** எழுச்சி, மாஸ்கோ, 1957, பக்கங்கள் 229—230 (ருஷ்ய மொழியில்).

** அதே நூல், பக்கம் 232.

டால்ஸ்டாய், ஒடுக்குமுறைக்கு எதிராகப் போராடும் இந்தியர்களின் பால் ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்தார். *

டால்ஸ்டாயின் தத்துவஞான, அரசியல் கருத்துகள், மகாத்மா காந்தியின் உலகக் கண்ணோட்டத்தின் மீதும், தேசிய விடுதலைப் போராட்டத்தில் அஹிம்சை எதிர்ப்பு மற்றும் சத்தியாகிரகம் போன்ற முறைகளை தேர்ந்தெடுத்ததன் மீதும் கணிசமான தாக்கம் செலுத்தின என்பது தெரிந்ததே. 1907இல் இந்துவிற்கு ஒரு கடிதம் (தாரகநாத் தாசிற்கு) எனும் தனது பிரபல கடிதத்தில் டால்ஸ்டாய், ஆங்கிலேயர்களை சகல விதங்களிலும் புறக்கணிப்பதை, அதாவது வரிகளைச் செலுத்தாமலிருத்தல், நிர்வாகம் மற்றும் நீதிமன்ற நடவடிக்கைகளில் பங்கேற்காமல் இருத்தல் முதலியவற்றை ஒரு அரசியல் வழியாக முன்மொழிந்தார். ''தீமையை எதிர்க்க வேண்டாம், ஆனால் நீங்களே தீமையில் பங்கேற்காதீர்கள், நிர்வாகம் மற்றும் நீதிமன்றங்களின் பலாத்காரங்களிலும் கையெழுத்துகளைச் சேகரிப்பதிலும் குறிப்பாக இராணுவத்திலும் கலந்து கொள்ளாதீர்கள், உலகில் யாராலுமே உங்களை அடிமைப்படுத்த இயலாது'' ** என்று இந்த மாபெரும் ருஷ்ய எழுத்தாளர் எழுதினார்.

தம் முன் வைத்த லட்சியங்களை அடைவதற்கான போராட்டத்தில் பலத்தைப் பயன்படுத்தாமலிருக்கும் கோட்பாடு டால்ஸ்டாயைப் போன்றே காந்திக்கும் சர்வாம்ச முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. தன் சுயசரிதையில் இந்திய தேசிய விடுதலை இயக்கத் தலைவர் சர்வதேச பூசல்களைத் தீர்ப்பதிலும் இதே கோட்பாட்டைப் பின்பற்றும் அவசியத்தைப் பற்றி எழுதுகிறார். **மகாத்மா காந்தி** எனும் நூலில் அ. கோரெவ் பின்வருமாறு எழுதுகிறார்: ''சமாதானத்தைப் பேணிக் காக்கும் பிரச்சினை ஏதோ சில அரசாங்கங்களின் முன்னுரிமை மட்டுமல்ல. மக்களின் நல்லெண்ணத்தை வெளிப்படுத்துவதன் மூலம், யுத்தத்திற்கு எதிராக மக்கள் நடத்தும் உண்மையான வெகுஜனப்

---

* எல். எஸ். கமயூனவ், **சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே நட்புறவின் தோற்றம் மற்றும் வளர்ச்சியும்**, மாஸ்கோ, 1956, பக்கம் 25 (ருஷ்ய மொழியில்).

** அ. ஷிஃப்மன், **லேவ் டால்ஸ்டாயும் கிழக்கத்திய நாடுகளும்**, மாஸ்கோ, 1969, பக்கம் 242 (ருஷ்ய மொழியில்).

போராட்டங்களின் மூலம் சமாதானத்தைப் பேணிக் காக்கலாம் என்ற முடிவிற்கு காந்தி வருகிறார்'' *. காந்தி, சமாதானத்தைப் பேணிக் காத்து வலுப்படுத்தும் லட்சியத்தை சமூகக் கொடுமையை அகற்றுவதுடனும் காலனியாதிக்க ஒடுக்குமுறைக்கு முடிவு கட்டுவதுடனும் தொடர்புபடுத்துகிறார்.

பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்களுக்கு எதிராக வலுத்து வந்த இந்திய மக்களின் போராட்டத்திற்கு மாபெரும் ருஷ்ய எழுத்தாளர் அ. எம். கோர்க்கி ஆதரவளித்தார். தேசிய விடுதலை பற்றிய கருத்து இந்தியாவில் மேன் மேலும் பரவி வருகிறது என்றும் ''கங்கை ஆற்றின் கரையில் ஆங்கிலேயர் ஆட்சியின் காலம் முடிந்து விட்டது'' ** என்று பிரச்சாரம் செய்யும் குரல்கள் மேன்மேலும் ஒலிக்கின்றன என்றும் கோர்க்கி எழுதினார்.

1905—1907ஆம் ஆண்டுகளின் முதல் ருஷ்யப் புரட்சி இந்தியாவின் மீது பெரும் தாக்கம் செலுத்தியது. வெகுஜனப் போராட்ட வடிவங்களைப் பயன்படுத்துமாறும் மக்கள் திரளினரை இப்போராட்டத்தில் தீவிரமாக ஈடுபடுத்து மாறும் இப்புரட்சி இந்திய தேசபக்தர்களுக்கு ஊக்க மளித்தது. ருஷ்ய பாட்டாளி வர்க்கத்தின் முக்கியப் போராட்ட வடிவங்களில் ஒன்றாக சர்வபொது வேலை நிறுத்தத்தை காந்தியும் பார்த்தார். ''இந்தியாவிற்கும் ருஷ்யாவிற்கும் இடையே பல பொது அம்சங்கள் உள்ளன'' என்றும் ''அடக்குமுறைக்கு எதிரான ருஷ்ய முறையை'' *** இந்தியாவிலும் பயன்படுத்த முடியும் என்றும் இவர் சுட்டிக்காட்டினார்.

1917இல் ருஷ்யாவில் வெற்றி பெற்ற மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியும், உலகிலேயே முதன் முதலாக சோஷலிச அரசு ஏற்படுத்தப்பட்டதும் சோவியத் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையே நிலவும் நட்புறவையும் ஒருமைப்பாட்டையும் வலுப்படுத்திய முக்கியக் காரணிகளாகும். இந்தியாவின் மீதும் இந்திய மக்களின்

---

* அ. கோரெவ், **மகாத்மா காந்தி**, மாஸ்கோ, 1984, பக்கம் 123 (ருஷ்ய மொழியில்).

** எல். எஸ். கமயூனவ், பக்கம் 23.

*** எ. என். கமரோவ், அ. டி. லித்மன், **மோகன்தாஸ் கரம்சந் காந்தியின் உலகக் கண்ணோட்டம்**, மாஸ்கோ, 1969, பக்கம் 71 (ருஷ்ய மொழியில்).

தேசிய விடுதலை இயக்கத்தின் மீதும் மாபெரும் அக்டோபர் புரட்சி செலுத்திய தாக்கத்தை திருமதி இந்திரா காந்தி மிகத் துல்லியமாகக் குறிப்பிட்டார். "எங்கள் தலைவர்கள், மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியை மனிதகுல வரலாற்றிலேயே ஒரு பெரும் சம்பவமாகக் கருதி உற்சாகத் தோடு வரவேற்றனர். இப்புரட்சியின் மகத்தான தலைவர்கள், குறிப்பாக மாபெரும் லெனின் உலகெங்கும் உள்ள மனிதர் களின் முக்கிய பொருளாதார, சமூக சிந்தனைகள் மீது தாக்கம் செலுத்தியதோடு கூட, உண்மையிலேயே இவற்றின் அடிப்படையையே ஆட்டங்காண வைத்தார்கள். இப்புரட்சி எங்கள் விடுதலை இயக்கத்தின் மீது பெரும் செல்வாக்கு செலுத்தியது என்று விளக்கும் அவசியமே இல்லை"*. மனிதகுலத்தின் வரலாற்றில் புதிய சகாப்தத்தை திறந்து விட்ட அக்டோபர் புரட்சியின் தாக்கத்தால் இந்தியாவிலும் மற்ற ஆசிய நாடுகளிலும் தேசிய விடுதலைப் போராட்டத் தின் எழுச்சி துவங்கியது. சோவியத் ருஷ்யாவில் உண் மையான மக்களாட்சி ஏற்படுத்தப்பட்டதும் இங்கு சிக்கலான சமூக-பொருளாதார, தேசிய இன, மற்ற பிரச் சினைகள் தீர்க்கப்பட்டதும் இந்திய தேசிய விடுதலைக்காகப் போராடியவர்களுக்கு ஊக்கமளித்தன, இவர்களுக்குப் புதிய சக்திகளை அளித்தன. ஜவகர்லால் நேரு தன் சுயசரிதையில் பின்வருமாறு எழுதினார்: "சோவியத் ருஷ்யா நம்பற்கரிய இடர்ப்பாடுகளை அகற்றி வெற்றி கண்டு புதிய முறையை நோக்கி பேரடி எடுத்து வைத்துள்ளது. எஞ்சிய உலகம் மந்த நிலையில் இருந்து, ஓரளவு பின்னடைந்த போது சோவியத் நாட்டில் நமது கண்ணெதிரிலேயே புதிய உலகம் கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. மற்ற நாடுகள், கடந்த காலத்தின் மரணகரமான கரங்களால் ஒடுக்கப்பட்டு, கடந்த காலங்களின் பயனற்ற மிச்சசொச்சங்களைப் பேணிக் காப்பதில் தம் சக்திகளை விரயமாக்கிய போது ருஷ்யா, லெனின் சுட்டிக்காட்டிய பாதையில் நடைபோட்டது, எதிர்காலத்தைப் பார்த்தது, நாளைய தினத்தைப் பற்றி மட்டுமே எண்ணியது"**.

எனவே, சோவியத் மக்களும் இந்திய மக்களும் நெருங்கி

---

* *Speech of Smt. Indira Gandhi P. M. at the National Convention of Friends of Soviet Union*, New Delhi, May 27, 1981.

** Jawaharlal Nehru, *An Autobiography*, London, 1953, pp. 361 — 162.

வரும் பாதையில் பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்கள் ஏராளமான தடைகளை எழுப்பினர், சோவியத் எதார்த் தத்தைப் பற்றிய உண்மைகள் பரவ சகல விதங்களிலும் இடையூறு செய்தனர் என்பதில் வியப்பேதுமில்லை. இச்சூழ் நிலையில் இந்திய தேசபக்தர்கள் மிகப்பெரும் இடையூறுகளைப் பொருட்படுத்தாது அக்டோபர் புரட்சிக்குப் பின் முதல் ஆண்டுகளிலேயே சோவியத் நாட்டிற்கு வருகை தந்து, சோஷலிசத்தைக் கட்டும் சோவியத் மக்களுடன் தம் ஒருமைப்பாட்டை தெரிவித்தனர் எனும் அம்சம் பெரிதும் குறிப்பிடத்தக்கது. 1918 நவம்பரில் இந்திய மக்களின் முதல் தூதுக்குழு சோவியத் ருஷ்யாவிற்கு வந்தது. இவர்கள் கொண்டுவந்த வாழ்த்துச் செய்தியில் ''உலகம் முழுவதன் ஜனநாயக நலன்களுக்காக அடையப்பட்ட மாபெரும் வெற்றிக்கு'' வாழ்த்து தெரிவிக்கப்பட்டிருந்தது, ''சோவியத் உழைப்பாளிகள் ஆட்சியைத் தம் கரங்களில் எடுத்துக்கொண்டு பிரகடனப்படுத்திய நல்ல, மனிதாபிமான கோட்பாடுகள்''* குறித்து மகிழ்ச்சி தெரிவிக்கப்பட்டிருந்தது. 1918 நவம்பர் 23இல் இந்த இந்தியத் தூதுக்குழுவை வி. இ. லெனின் சந்தித்தார்.

சோஷலிசப் புரட்சியின் தலைவர் இந்திய விடுதலைப் போராட்ட எழுச்சியை உன்னிப்பாக கவனித்து வந்தார். காலனியாதிக்க கொடுமை ஒழிக்கப்பட்டு இந்திய மக்கள் வெற்றி பெறுவார்களென இவர் உறுதியாக நம்பினார், இந்தியப் பூமியில் காலனியாட்சியாளர்களின் தான்தோன்றித் தனத்தையும் வன்முறையையும் கடுமையாகச் சாடினார். 1919இல் வி. இ. லெனினின் கட்டளைப்படி இவரது செயலாளர், **அமிரிதா பஜார் பாட்ரிகா** என்ற பத்திரிகைக்கு ஒரு கடிதம் அனுப்பினார். இக்கடிதம் ஆங்கிலேய ஆட்சியாளர் களால் கைப்பற்றப்பட்டதால் உரிய விலாசத்தைச் சென்றடையவில்லை. இது 1966இல் தான் பிரசுரிக்கப்பட்டது. 1919 ஏப்ரல் 13இல் அமிர்தசரசில் ஜாலியன்வாலாபாக் எனுமிடத்தில் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் கட்டவிழ்த்து விட்ட இரத்தக் களறியான படுகொலைக்கு இக்கடிதத்தில் வன்மையான கண்டனம் தெரிவிக்கப்பட்டிருந்தது. ''ஜாலியன் வாலாபாக் படுகொலையைப் பற்றி வி. இ. லெனின்

---

* எல். எஸ். கமயூனவ், பக்கம் 27.

உங்கள் பத்திரிகையில் படித்தார். இந்திய சகோதரர்களின் நியாயமான லட்சியங்களுடன் சோவியத் அரசாங்கம் முழு ஒருமைப்பாட்டைத் தெரிவிப்பதாக உங்களுக்கு எழுதும்படி அவர் என்னிடம் கூறினார்.''

வி. இ. லெனின் மகாத்மா காந்தியின் பாலும் பேரார்வம் காட்டினார். இவர்கள் இருவரின் உலகக் கண்ணோட்டங்களும் வேறுபட்டாலும் இவர்களிருவரும் பரஸ்பரம் ஒருவர் மீது ஒருவர் பெரும் மதிப்பு வைத்திருந்தனர். வி. இ. லெனின் காந்தியை தேசிய விடுதலை இயக்கத்தின் மாபெரும் தலைவராக, தீவிர தேசபக்தராகப் பார்த்தார். மகாத்மா காந்தியும் வி. இ. லெனின் மீது பெரும் அன்பு வைத்திருந்தார். ''லெனினைப் போன்ற மகத்தான உள்ளங்களின் தியாகம் எந்த லட்சியத்திற்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ளதோ அது வீணாகாது'' என்று காந்தி எழுதினார்.

தன் முதல் நாட்களிலேயே சோவியத் அரசு சமாதானத்திற்கான போராட்டத்தையும் ஒடுக்கப்படும், சுரண்டப்படும் மக்களுடனான ஒருமைப்பாட்டையும் தன் வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகளாக அறிவித்தது. **ருஷ்யா மற்றும் கிழக்கத்திய நாடுகளின் முஸ்லீம் உழைப்பாளிகளுக்கான மக்கள் கமிசார்கள் கவுன்சிலின் அறைகூவல்** 1917 டிசம்பர் 3இல் ஏற்கப்பட்டது. இதில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது: ''நியாயமான சமாதானத்தை வென்று, தம் விடுதலையைப் பெற ஒடுக்கப்படும் உலக மக்களுக்கு உதவுவது எனும் ஒரே வேட்கைதான் ருஷ்யாவின் உழைக்கும் மக்களின் உள்ளங்களில் பொங்குகிறது'' * .

சுயமான வளர்ச்சி மற்றும் சுதந்திரத்திற்கு மக்களுக்கு உள்ள உரிமைக்கு சோவியத் ருஷ்யா அளித்த தொடர்ச்சியான, உறுதியான ஆதரவு இந்திய விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு ஊக்கமளித்தது, காலனியாட்சியாளர்களின் ஒடுக்குமுறையையும் தான்தோன்றிதனத்தையும் மீறி தேசிய விடுதலை இயக்கத்தை வளர்க்க உதவியது. 1920 மார்ச்சில் இந்தியப் புரட்சி சங்கம் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதில் சோவியத் ருஷ்யாவிற்கு ''அதன் வரலாற்றுப் போராட்டத்திற்கு'' ஆழ்ந்த நன்றி தெரிவிக்கப்பட்டிருந்தது;

---

* **சோவியத் யூனியனின் வெளிநாட்டுக் கொள்கை ஆவணங்கள்**, தொகுதி 1, மாஸ்கோ, 1957, பக்கம் 34 (ருஷ்ய மொழியில்).

இப்போராட்டம் ''ஒடுக்கப்படும் மற்ற மக்களின் விடுதலைப் போராட்டத்திற்கு உதவும்'' என்று கூறப்பட்டிருந்தது. வி. இ. லெனினின் பதில் செய்தியில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது: ''தொழிலாளர், விவசாயிகளின் குடியரசு பிரகடனம் செய்த அந்நிய, உள்நாட்டு முதலாளிகளின் சுரண்டலிலிருந்து ஒடுக்கப்பட்ட தேசங்களின் விடுதலையும் சுய நிர்ணயமும் என்ற கொள்கைகள், சுதந்திரத்துக்காக வீரமிக்க போராட்டத்தை நடத்தி வருகின்ற முற்போக்கான இந்தியர்கள் மத்தியில் உடனடியான ஆதரவை அதிகமான அளவுக்குப் பெற்றன என்பதைத் தெரிந்து கொள்வதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன்.'' *

சோவியத் மக்களும் இந்திய மக்களும் கலந்து பழக காலனியாட்சியாளர்கள் சகலவித இடர்ப்பாடுகளை ஏற்படுத்தினாலும், சோவியத் ருஷ்யாவில் புதிய வாழ்வின் கட்டுமானம், போராடிய இந்தியாவின் தலைசிறந்த அறிஞர்களைக் கவர்ந்தது, அவர்களிடம் மிகப் பெரும் ஆர்வத்தை ஏற்படுத்தியது. 1927ஆம் ஆண்டு மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் பத்தாமாண்டு விழா கொண்டாடப்பட்ட தருவாயில் மோதிலால் நேருவும் ஜவகர்லால் நேருவும் சோவியத் யூனியனுக்கு வருகை தந்தனர். அவர்கள் மாஸ்கோவில் நான்கு நாட்கள் தங்கியிருந்த போது, புரட்சி தின கொண்டாட்டங்களை செஞ்சதுக்கத்தில் கண்டு களித்தனர், வி. இ. லெனின் கல்லறையையும் புரட்சி மியூசியத்தையும் பார்த்தனர், சோவியத் அரசின் தலைவர் எம். இ. கலீனினையும் அயல் விவகாரத் துறை அமைச்சர் ஜி. வி. சிச்சேரினையும் சந்தித்து உரையாடினார்கள். அன்று ஜவகர்லால் நேரு பின்வருமாறு எழுதினார்: ''சோவியத் ஆட்சிக் காலத்தில், மத்திய ஆசியாவின் பின்தங்கிய பகுதிகளில் அடையப்பட்ட பெரும் வெற்றிகளைப் பற்றிய செய்தி என்னைப் பெரிதும் கவர்ந்தது. எனவே இறுதியில் நான் ருஷ்யாவை முழுமனதாக ஆதரித்தேன். சோவியத் யூனியன் நிலவுவதும் இதன் உதாரணமும் இருண்ட, சோகமயமான உலகில் ஒரு ஒளிமயமான,

---

* வி. இ. லெனின், பாட்டாளி வர்க்க சர்வதேசியவாதம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1984, பக்கம் 419.

மகிழ்ச்சிகரமான அம்சமாகும்'' * .

ரவீந்தரநாத் தாகூர் 1930இல் சோவியத் யூனியனுக்கு வந்தார். இது அவர் மனதில் நல்ல, மறக்க இயலா மனப் பதிவுகளை ஏற்படுத்தியது. இவர் எழுதிய ருஷ்யக் கடிதங்கள் ஏகாதிபத்தியம் சோவியத் யூனியனுக்கு எதிராகச் செய்த பொய் பிரச்சாரத்தையும் அவதூறையும் தோலுரித்துக் காட்டின. காலனியாட்சியாளர்கள் இப்படைப்பைத் தடை செய்ததில் வியப்பேதுமில்லை. இதில் தாகூர் ''எவ்வளவு பெரும் சக்தியுடன் ருஷ்யா நோய்நொடிகளையும் கல்வியறி வின்மையையும் எதிர்த்துப் போராடியது, அறியாமையையும் ஏழ்மையையும் ஓரளவு ஒழித்துக் கட்டியது, தாழ்வு நிலையை பெரும் பரப்பிலிருந்து அகற்றியது'' என்று எழுதினார்.

கலாச்சாரத் துறையிலும் கல்வித் துறையிலும் சோவியத் மக்களின் சாதனைகள் மீதும், ஜாரிச ருஷ்யாவின் முந்தைய பின்தங்கிய பிரதேசங்களின் ஏழ்மை நிலையை அகற்றுவதில் ஆற்றப்பட்ட பெரும் பணியின் மீதும் இந்த மாபெரும் எழுத்தாளர் பேரார்வம் காட்டினார். சோவியத் நாட்டில் கல்வி எல்லோருக்கும் கிட்டுகிறது, மக்களின் கலாச்சார மட்டத்தை உயர்த்தி, இவர்களை நூற்றாண்டுகால பின்தங்கிய நிலையிலிருந்து மீட்பதுதான் இதன் நோக்கம் என்று தாகூர் கோடிட்டுக் காட்டினார். இக்கருத்துகள், சோவியத் நாட்டில் சோஷலிசக் கட்டுமான சாதனைகளைக் கண்டு வியந்த ஜவகர்லால் நேருவின் கருத்துகளை பெரிதும் ஒத்திருந்தன. ''நம் முன் சோவியத் யூனியனின் உதாரணம் உள்ளது. இது இருபதே ஆண்டுகளில், உள் நாட்டு யுத்தத்தையும் மற்ற யுத்தங்களையும் பொருட்படுத் தாமல், கடக்கவே முடியாது என்று தோன்றிய இடர்ப்பாடு களை மீறி பிரம்மாண்டமான வெற்றிகளை அடைந் துள்ளது. ஒரு சிலரை கம்யூனிசம் கவர்ந்திழுத்தது, மற்றவர்களைக் கவரவில்லை. ஆனால், கல்வி, கலாச்சாரம், மருத்துவம், உடற்பயிற்சி, விளையாட்டு ஆகிய துறை களிலும் மற்றும் தேசிய பிரச்சினைகளின் தீர்விலும் அடையப்பட்டுள்ள வெற்றிகளைக் கண்டும் பழைய உலகின் இடிபாடுகளின் மீது புதிய உலகைக் கட்டுவதை நோக்கமாகக் கொண்ட அற்புதமான, பிரம்மாண்டமான வெற்றிகளைக்

* Jawaharlal Nehru, *An Autobiography*, London, 1953, p. 362.

கண்டும் எல்லோரும் வியப்படைகின்றனர்'' * என்று ஜவகர்லால் நேரு எழுதினார்.

தமது சோவியத் பயணத்தைப் பற்றிய கருத்துகளை தாகூரும் நேருவும் மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டதும் சமீப காலம் வரை பின்தங்கிய நிலையிலிருந்த, சமூக-பொருளாதார ரீதியாக இந்தியாவுடன் பல பொது அம்சங்களைக் கொண்டுள்ள ருஷ்யாவில் பல பிரச்சினைகள் தீர்க்கப்பட்ட விதத்தை இவர்கள் சிந்தித்துப் பார்த்ததும் சோவியத் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையிலான நட்புறவுகள் வலுப்பட உதவின, இரு நாட்டு மக்களும் ஒருவரையொருவர் நெருங்கி வர உதவின.

சோவியத் மக்கள் பாசிச ஆக்கிரமிப்பிற்கு எதிராகப் போராடிய போது பரவலான இந்திய சமூக-அரசியல் வட்டங்கள் வெளிப்படுத்திய ஆழ்ந்த ஒருமைப்பாடும் அளித்த ஆதரவும் இதற்கான தெட்டத் தெளிவான வெளிப்பாடுகளாகும். நாஜி ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து சோவியத் பூமியை விடுவிப்பதற்காக நடந்த மாபெரும் தேசபக்த யுத்தத்தின் போதுதான், 1941இல் கல்கத்தாவில் ''சோவியத் நண்பர்கள் கழகம்'' தோற்றுவிக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. பல்வேறு வேலைப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களும் இதில் உறுப்பினர்களாயிருந்தனர். மிகக் கடினமான அதே 1941ஆம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரசின் வேலைக் கமிட்டியில் ஒரு தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. இதில் ''தம் தாயகத்தையும் சுதந்திரத்தை யும் பாதுகாத்து நின்ற சோவியத் மக்களின் தன்னலமற்ற தியாகம் மற்றும் வியத்தகு வீரத்திற்கு'' * * நாட்டு தேசிய விடுதலை இயக்கத்திற்குத் தலைமை தாங்கிய கட்சித் தலைவர்கள் இந்திய மக்களின் சார்பாக, அன்பையும் பாராட்டுதலையும் தெரிவித்தனர். நாஜி கொலைபாதகர் கள் மாஸ்கோவை நெருங்கிய கடினமான நேரத்தில், படுத்த படுக்கையாயிருந்த ரவீந்தரநாத் தாகூர் ''கிழக்கத்திய போர்முனையிலிருந்து செய்திகள் உண்டா?'' என்று கவலையோடு விசாரித்தார். காலனியாதிக்க நுகத்தடி யிலிருந்து தன் தாயகம் விடுதலை பெறும் என்பதில்

---

* Jawaharlal Nehru, *Discovery of India*, Delhi, 1952, pp. 394—395.

** K. Neelkant, *Partners in Peace*, New Delhi, 1972, p. 7.

சந்தேகம் கொள்ளாததைப் போன்றே இவர் சோவியத் மக்கள் பாசிசத்தை முறியடித்து வெற்றி பெறுவார்கள் என்பதிலும் அசையாத நம்பிக்கை வைத்திருந்தார்.

ஆங்கிலேய ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டுவதற்கான போராட்டம் முடிவு கட்டத்தை நெருங்கிய போது, இந்திய தேசிய விடுதலை இயக்கத்தின் மிக முக்கியமான தருணத்தில் சோவியத் அரசு இந்தியாவிற்கு நிபந்தனையற்ற ஆதரவு நல்கியது. ஐ. நா. சங்கம் தோற்றுவிக்கப்பட்ட பின் 1946இல் நடைபெற்ற பொது சபையின் முதல் அமர்விலேயே சோவியத் தூதுக்குழுவின் தலைவர் இந்தியா வின் சுதந்திரத்தையும் அரசுரிமையையும் ஆதரித்து உரையாற்றினார், ஐ. நா. சங்க விதிமுறையின்படி இந்தியா விற்கும் பிரிட்டனுக்கும் இடையில் "சம உரிமை" நிலவ வேண்டும் என்று அறிவித்தார்*. "சுதந்திரம் பெற உதவுமாறு இந்தியா கோருகிறது, இதற்குச் செவி மடுக்கா மலிருக்க முடியாது, இந்தியாவின் நியாயமான கோரிக்கை களை அங்கீகரிக்கும் நேரம் வந்து விட்டது"** என்று சோவியத் பிரதிநிதி கோடிட்டுக் காட்டினார்.

இந்தியத் தூதுக்குழுவிற்கு பிரிட்டிஷ் அல்லது அமெரிக்கத் தூதுக்குழுவை விட சோவியத் தூதுக்குழுவுடன் ஒத்துழைப் பது எளிமையானதாக இருந்தது, ஏனெனில் "பெரும் பாலான பிரச்சினைகளை சோவியத் யூனியன் பெரிதும் புரிந்து கொண்டு அணுகியது"*** என்று 1946 டிசம்பரில் ஐ. நா.வில் இந்தியத் தூதுக்குழுவின் தலைவர் அறிவித் தார்.

கிட்டத்தட்ட அதே சமயத்தில், இன்னமும் சரியாகச் சொன்னால் 1946 செப்டெம்பரில் இடைக்கால அரசாங் கத்தின் சார்பாக, அப்போது மத்தியிலிருந்த நிர்வாக கமிட்டியின் உதவித் தலைவராயும் அயல் விவகாரத் துறை அமைச்சராகவும் இருந்த ஜவகர்லால் நேரு வானொலி மூலம் நாட்டு மக்களின் முன் உரையாற்றுங் காலை பின்வருமாறு குறிப்பிட்டார்: "இன்றைய உலகின்

---

* **சோவியத் யூனியனின் வெளிநாட்டுக் கொள்கை. 1946. ஆவணங்கள்,** *மாஸ்கோ, 1952, பக்கம் 417.*

** **அதே நூல்.**

*** **யூ.** *பி.* **நசேன்கோ, ஜவகர்லால் நேருவும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும்,** *மாஸ்கோ, 1975, பக்கம் 35 (ருஷ்ய மொழியில்).*

மாபெரும் நாடாகிய சோவியத் யூனியனுக்கு நமது வாழ்த்துகள். உலக நிகழ்ச்சிப் போக்கிற்கு இந்நாடு பெரும் பொறுப்பு வகிக்கிறது. இந்நாடு ஆசியாவில் நமது அண்டை நாடாகும். பல பொதுவான பிரச்சினைகளை நாம் இந்நாட்டுடன் சேர்ந்து தீர்க்க வேண்டும், பரஸ்பரம் ஒருவருடன் ஒருவர் தொடர்பு கொள்ள வேண்டும்'' *. சோவியத் யூனியன் இந்தியாவின் அருகேயுள்ள உண்மையான நட்பு நாடு, இந்திய மக்களுக்கு கவலை தரும் பிரச்சினை களின் தீர்வில் சோவியத் யூனியன் அக்கறை கொண்டுள்ளது எனும் கருத்து பின்னரும் பன்முறை நேருவின் பேச்சு களிலும் சொற்பொழிவுகளிலும் ஒலித்தது.

இந்தியா சுதந்திரமடைவதற்கு கிட்டத்தட்ட ஓராண்டிற்கு முன் 1946 செப்டெம்பர் 21இல் நேரு அன்றைய சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சர் வி. எம். மோலதவிற்கு ஒரு கடிதம் அனுப்பினார். இரு நாடுகளுக்கும் இடையில் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளலாம் என்றும் பரஸ்பரம் தூதுவர்களை அனுப்பிக் கொள்ளலாம் என்றும் அக்கடிதத்தில் முன்மொழியப் பட்டிருந்தது. இந்த முன்மொழிவை சோவியத் யூனியன் ஏற்றுக்கொள்கிறது என்ற பதில் கடிதம் 1946ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் தேதி மாஸ்கோவிலிருந்து வந்தது.

இது பற்றிய பேச்சுவார்த்தைகளையும் கலந்தாலோசனை களையும் நடத்தும் பொறுப்பை நேரு இரு பெரும் இந்திய ராஜதந்திரிகளாகிய வி. கிருஷ்ண மேனன், கே. பி. எஸ். மேனன் ஆகிய இருவருக்கும் அளித்தார். சோவியத் யூனியனுடனான உறவிற்கு இந்திய அரசின் தலைவர்கள் எவ்வளவு முக்கியத்துவம் அளித்தார்கள் என்பதற்கு இது நல்ல சான்றாகும். சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சரை பாரிசில் சந்தித்த பின் கே. பி. எஸ். மேனன் பின்வருமாறு கூறினார்: ''இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே உறுதியான நட்புப் பாலம் ஏற்பட எவ்விதத் தடையுமில்லை'' **.

1946 நவம்பர் 12ஆம் தேதி, அரசியல் சட்ட நிறுவன அசெம்பிளியில் நேரு ஆற்றிய உரை பற்றிய செய்தி

---

* *Jawaharlal Nehru's Speeches*, Vol. One, 1946—1949, Delhi, 1949, p. 3.

** யூ. பி. நசேன்கோ, ஜவகர்லால் நேருவும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும், மாஸ்கோ, 1975, பக்கம் 35 (ருஷ்ய மொழியில்).

வானொலியில் ஒலிபரப்பப்பட்டது. பாரிசில் வி. கிருஷ்ண மேனனுடன் நடத்திய உரையாடலின் போது சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சர் வி. எம். மோலதவ் இந்தியாவுடன் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள சோவியத் யூனியன் தயார் என்று கூறியதாக நேரு அறிவித்தார்.

சோவியத் யூனியனுடன் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள இந்திய இடைக்கால அரசாங்கம் முதல் நடவடிக்கைகளை மேற்கொள்ளத் துவங்கியதிலிருந்தே பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்கள் சகலவித தடைகளையும் எழுப்பினர். கிரேட் பிரிட்டன் அரசாங்கத்தில் இருந்த இந்திய விவகாரங்கள் பற்றிய துறையின் ஆவணங்களின் அடிப்படையில் சோவியத் ஆராய்ச்சியாளர் ஜி. பி. கரோஷ்கோ இது சம்பந்தமான திட்டவட்டமான ஆதாரங்களைத் தருகிறார்*. பிரிட்டிஷ் உளவுத் துறை இந்திய ராஜதந்திரிகளின் நடவடிக்கைகளையும், சோவியத் தரப்புடன் இவர்களுக்கு இருந்த தொடர்புகளையும் இடையறாது வேவு பார்த்து வந்தது. நேருவின் அரசியல் சட்ட ரீதியான நடவடிக்கைகளைக் களங்கப்படுத்தவும், இடைக்கால அரசாங்கத்தின் மற்ற உறுப்பினர்களை இவற்றிற்கு எதிராக வைக்கவும் காலனியாட்சியினர் முயன்றனர். இவையெல்லாம் ஜவகர்லால் நேருவின் மீதான நிர்ப்பந்தமாக விளங்கின, சோவியத் யூனியனுடன் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்தும் பாதையில் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்குத் தடையாகத் திகழ்ந்தன. சோவியத் யூனியனுடனும் மற்ற அரசுகளுடனும் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளும் விஷயத்தை தன் துறையின் (அதாவது அயல் விவகாரத் துறையின். — ஆ-ர்.) உள்விவகாரமாகக் கருதுவதாக 1946 நவம்பர் 21இல் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்தில் நேரு குறிப்பிட்ட பின்தான்**, தம் நடவடிக்கைகளால் எவ்விதப் பயனும் ஏற்படாது என்று பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் உணர்ந்தனர்.

வெளிப்படையான சீர்குலைவு நடவடிக்கைகளும் இந்

---

* ஜி. பி. கரோஷ்கோ, ''சோவியத்-இந்திய ராஜதந்திர உறவுகளின் வரலாறு'', **ஆசிய, ஆப்பிரிக்க மக்கள்**, № 3, 1982, பக்கங்கள் 31—41 (ருஷ்ய மொழியில்).

** அதே நூல், பக்கம் 35.

தியத் தலைமையின் மீதான நேரடியான நிர்ப்பந்தமும் கிரேட் பிரிட்டனுக்கும் சுதந்திர இந்தியாவிற்கும் இடையி லான உறவுகளைப் பாதிக்கும் என்பதைப் புரிந்து கொண்ட பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள், இந்திய-சோவியத் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதுடன் தொடர்புடைய பிரச்சினைகளின் தீர்வில் இடைக்கால அரசாங்கத்திற்கு சம்பிரதாய ரீதியான உதவியை அளித்த அதே சமயம் திரை மறைவில் எதிர்ப்பு காட்ட ஆரம்பித்தனர். உதார ணமாக, மாஸ்கோவில் உள்ள பிரிட்டிஷ் தூதரகத்திற்கு அயல் விவகாரத் துறை அமைச்சகம் அனுப்பிய ரகசியச் செய்திகள் ஒன்றில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது: ''இந்திய அரசாங்கம் சோவியத் யூனியனுடன் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள விழைகிறது. இந்தியாவில் நிலவரம் தெளிவாகும் வரை இம்முயற்சிகளை இழுத் தடிப்பதில் நாங்கள் (அதாவது அயல் விவகாரத் துறை அமைச்சகம். — ஆ-ர்.) அக்கறை கொண்டுள்ளோம்'' * .

பிரிட்டனில் உள்ள இந்திய விவகாரத் துறை ஆவணங் களில், ராய்டர் செய்தி நிறுவனத்தின் செய்திகள், மாஸ் கோவில் உள்ள பிரிட்டிஷ் தூதரக செய்திப் பிரிவின் குறிப்புகள், சோவியத் யூனியனின் அரசியலின் மீது இந்தியத் தலைமை மற்றும் பரவலான பொது மக்களின் சந் தேகத்தை ஏற்படுத்தும் நோக்கத்தோடு டில்லிக்கு அனுப்பப் பட்ட செய்திகள் முதலியன உள்ளன * * .

இவையெல்லாம் சோவியத்-இந்திய நட்புறவையும் ஒத்துழைப்பையும் எதிர்த்தவர்களுக்கு உரிய பயன்களை அளிக்கவில்லை. 1947 ஏப்ரல் 13ஆம் தேதி இந்திய நேரப்படி இரவு 8 மணிக்கு, மாஸ்கோ நேரப்படி மாலை 5.30க்கு டில்லியிலும் மாஸ்கோவிலும், இரு தரப்புகளுக்கும் இடையிலான உடன்படிக்கைக்கு ஏற்ப சோவியத் யூனியனுக் கும் இந்தியாவிற்கும் இடையே ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்துவதைப் பற்றிய அறிக்கைகள் வெளியாயின.

1947 ஆகஸ்டில், பிரபல அரசியல் பிரமுகரும் ஜவகர்லால் நேருவின் சகோதரியுமான விஜய லட்சுமி பண்டிட் மாஸ்கோவிற்கு இந்தியத் தூதுவராக அனுப்பப்பட்டார். பிரபல சோவியத் ராஜதந்திரி கே. வி. நோவிக்கவ்

---

* அதே நூல்.

** அதே நூல், பக்கம் 36.

இந்தியாவிற்கு முதல் சோவியத் தூதுவராகச் சென்றார்.

சோவியத்-இந்திய ராஜதந்திர உறவுகள் நிலைநாட்டப் பட்டதானது, இந்திய மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்தின் மிக முக்கியமான, கடைசி கட்டத்தில் இந்திய மக்களுடனான சர்வதேச ஒருமைப்பாட்டை விரிவுபடுத்த உதவியது. உலக நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் இடையில் உறவுகளை ஏற்படுத்துவதில் இது கணிசமான பங்காற்றியது, சர்வதேச உறவுகளில் முழு உரிமையுள்ள, தீவிர பங்கேற்பாளனாக இந்தியா பரவலான உலக அரங்கிற்கு வர உதவியது.

சோவியத் மற்றும் இந்திய மக்களின் வாழ்வில் உண் மையான சகாப்த முக்கியத்துவமுடைய இச்சம்பவம், ஜெர்மானிய பாசிசத்தின் மீதும் ஜப்பானிய இராணுவ வெறியின் மீதும் அடையப்பட்ட மகத்தான வெற்றியுடன் நெருக்கமான தொடர்புடையது. சோவியத் மக்களின் வரலாற்று ரீதியான வெற்றி ஒரு புறம் உலக சோஷலிச அமைப்பு தோன்ற வழிகோலியது, மறு புறம் உலகெங்கும் தேசிய விடுதலை இயக்கங்களுக்கு பலத்த உந்து சக்தியாக அமைந்தது, மக்கள் விரோத ஏகாதிபத்திய காலனியாதிக்க முறை தகர்ந்து விழுவதைத் துரிதப்படுத்தியது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி தகர்ந்து வீழ்ந்ததானது, இந்த வரலாற்று நிகழ்ச்சிப் போக்கின் மிக முக்கிய, மிகப் பெரும் வெளிப் பாடுகளில் ஒன்றாகத் திகழ்ந்தது என்று மிகைப்படுத்தலின்றி கூறலாம். சமாதானம், ஒளிமயமான எதிர்காலத்திற்கான போராட்டத்தில் சோஷலிச நாடுகளுக்கும் ஏராளமான விடுதலையடைந்த அரசுகளுக்கும் இடையில் பரவலான ஒத்துழைப்பிற்கான உண்மையான சூழ்நிலைகள் தோன்றின.

1947 மார்ச் 23 முதல் ஏப்ரல் 2 வரை ஜவகர்லால் நேருவின் முன்முயற்சியின்படி டில்லியில், ஆசிய நாடுகளுக்கு இடையிலான உறவுகளைப் பற்றிய மகாநாடு நடைபெற் றது. இதில் சோவியத் தூதுக்குழுவும் கலந்து கொண்டது. இத்தூதுக்குழுவில் மத்திய ஆசிய மற்றும் டிரான்ஸ் காக்கசஸ் பிரதிநிதிகள் இடம் பெற்றிருந்தனர்.

இம்மகாநாட்டில் காலனியாதிக்கத்தின் சகல வடிவங் களும் கண்டனம் செய்யப்பட்டன, முழு உரிமையுடன் ஆசிய நாடுகள் புதிய வாழ்வின் கட்டுமானத்தில் இறங்க வேண்டும் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. "நாங்கள்

சொந்தக் கால்களில் நின்று, நம்முடன் ஒத்துழைக்கத் தயாராயுள்ள அனைவருடனும் ஒத்துழைப்பது என்று உறுதியாக இருக்கின்றோம். யாருடைய கரங்களிலும் நாங்கள் விளையாட்டுப் பொருளாக இருக்க மாட்டோம்''* என்று தன் உரையில் நேரு குறிப்பிட்டார்.

இம்மகாநாடு ஆசிய நாடுகளின் வாழ்வில் ஒரு பெரும் நிகழ்ச்சியாகியது. இந்நாடுகளின் ஒருமைப்பாட்டை பலப் படுத்துவதில் இது கணிசமான பங்காற்றியது, தம் முன் நிற்கும் உடனடி பிரச்சினைகளின் தீர்வில் கூட்டான, ஒத்திசைவான நடவடிக்கைகளின் வாய்ப்பை வெளிக் காட்டியது.

இந்தியாவில் தேசிய ஆட்சி நிலைப்பெற, முக்கிய சர்வதேச பிரச்சினைகளில் இதன் பங்கு அதிகரித்தது. சச்சரவுகளைத் தீர்ப்பதில் இந்தியா தீவிரப் பங்கேற்க ஆரம்பித்தது. 1950இல் அமெரிக்க ஏகாதிபத்தியம் கட்டவிழ்த்து விட்ட கொரிய யுத்தத்தை நிறுத்த இந்திய அரசாங்கம் வைத்த முன்மொழிவுகள் சோவியத் யூனியன் உட்பட சமா தான நாட்டமுடைய பல நாடுகளில் நல்ல எதிரொலிப்பை ஏற்படுத்தின, ஆதரவைப் பெற்றன. 1950 ஜூலை 15ஆம் தேதி சோவியத் அரசாங்கத் தலைவர் இ. வி. ஸ்தா லினுக்கு இந்தியப் பிரதமர் ஜவகர்லால் நேரு தனிப்பட்ட முறையில் அனுப்பிய கடிதத்தில், இப்பிரச்சினையை சமாதான முறையில் தீர்க்க வேண்டியதன் அவசியம் கோடிட்டுக் காட்டப்பட்டிருந்தது, இதற்காக அமெரிக்க ஐக்கிய நாடு, சோவியத் யூனியன், சீன மக்கள் குடியரசு ஆகிய நாடுகளைச் சேர்ந்த பிரதிநிதிகளின் கூட்டத்தைக் கூட்ட வேண்டுமென்று முன்மொழியப்பட்டிருந்தது. இதே போன்ற கடிதம் அமெரிக்க அரசுத் துறைச் செயலாளர் தீன் ஆச்செஸனுக்கும் அனுப்பப்பட்டிருந்தது. அமெரிக்கத் தரப்பு இந்திய முன்மொழிவை ஏற்கவில்லை. சோவியத் அரசாங்கத் தலைவரோ ''உங்களது சமாதான முன் மொழிவை நான் வரவேற்கிறேன்'' என்று குறிப்பிட்டார். நேருவின் முயற்சிகள் வெற்றி பெற ஸ்தாலின் வாழ்த்து தெரி வித்தார். கொரியாவில், நடுநிலை நாடுகளின் மீட்டமைப்புக்

* *Jawaharlal Nehru's Speeches*, Vol. One, 1946—1949, Delhi, 1949, p. 303.

கமிஷனின் தலைமைப் பதவிக்கு இந்தியா முன்மொழியப் பட்ட போது இதை சோவியத் யூனியன் பரிபூரணமாக ஆதரித்தது.

இந்தோசீனாவில் கிட்டத்தட்ட எட்டு ஆண்டுகளாக நடைபெற்ற யுத்தத்தை நிறுத்த இந்தியாவும் மற்ற சமாதான நாடுகளும் மேற்கொண்ட முயற்சிகளை நம் பூமியின் ''பதட்டமான இடங்களில்'' உள்ள நிலவரத்தை சீர்படுத்துவதில் இந்தியாவின் நல்ல செல்வாக்கிற்கான சான்றாக சோவியத் மக்கள் பார்த்தனர். 1954ஆம் ஆண்டு ஜினீவா மகாநாட்டில் இந்தியா அதிகாரப் பூர்வமாகப் பங்கேற்கா விட்டாலும், இதன் பணியுடன் ஒத்துழைத்ததானது, பிரபல ஜினீவா உடன்படிக்கைகளை அடைய சந்தேகத்திற்கிடமின்றி உதவியது. வியட்நாம், லாவோஸ், கம்போடியாவில் (இன்று கம்பூச்சியா) போர் நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றிய உடன்படிக்கை களின் நிறைவேற்றத்தைக் கவனிக்கும் சர்வதேச கமிஷன் களின் தலைவர்களாக இந்தியப் பிரதிநிதிகள் முன் மொழியப்பட்டது இங்கே குறிப்பிடத் தக்கதாகும். சோஷலிச நாடுகள் மற்றும் இளம் விடுதலையடைந்த நாடுகளின் தீவிர கூட்டு முயற்சிகளால் இந்தோசீன பிரச்சினை சமாதானமாகத் தீர்க்கப்பட்டது. இதனால், இந்தோசீன மக்களின் மீது தம் ஆதிக்கத்தைத் தொடர எண்ணிய ஏகாதிபத்தியவாதிகளின் திட்டங்கள் தவிடுபொடியாயின.

இந்தியா சுதந்திரம் அடைந்த உடனேயே, ஆக்கிரமிப்பு இராணுவ-அரசியல் கூட்டுகளின் விஷயத்தில் திட்டவட்டமான நிலையை மேற்கொண்டது. சர்வதேச உறவுகளில் இந்தியா வின் நல்ல செல்வாக்கு ஊர்ஜிதமடைவதில் இது பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாய் விளங்கியது. இக்கூட்டு களில் சேர மறுத்தது, ஆக்கிரமிப்பு கூட்டாகிய சீட் டோவையும்* பாக்தாத் உடன்படிக்கையையும்** சமா

---

* சீட்டோ — தென் கிழக்காசிய இராணுவ-அரசியல் ஒப்பந்த ஸ்தாபனம். அமெரிக்க ஐக்கிய நாட்டின் முன்முயற்சியால் 1955இல் தோற்றுவிக்கப்பட் டது. ஏகாதிபத்தியத்திற்கு எதிரான விடுதலைப் போராட்டத்தில் வியட் நாமிய மக்கள் வெற்றியடைந்த பின் தென் கிழக்காசியாவில் ஜனநாயக மற்றும் சமாதான சக்திகள் வலுவடைந்த போது. 1975இல் சீட்டோவின் தலைமையின் முடிவிற்கேற்ப இது கலைக்கப்பட்டது.

** பாக்தாத் உடன்படிக்கை, அதாவது சென்டோ — மத்திய கிழக்கில்

தானம் மற்றும் பாதுகாப்பிற்கான ஆபத்தாகக் கருதி கண்டித்தது — இவையெல்லாம் ஆசியாவிலும் உலகின் மற்ற பகுதிகளிலும் சமாதான சக்திகளின் நிலைகளை வலுப் படுத்தின.

1954ஆம் ஆண்டு திபெத் சம்பந்தமான இந்திய-சீன உடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த பஞ்சசீலக் கோட் பாடுகளை சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் மேலைய நாடுகளுக்கு மாறாக உடனேயே வரவேற்றன. பிரதேச முழுமையையும் அரசுரிமையையும் பரஸ்பரம் மதித்தல், பரஸ்பரம் ஒருவரையொருவர் தாக்காமல் இருத்தல், ஒருவருடைய உள்விவகாரங்களில் மற்றவர் தலையிடாமல் இருத்தல், சமத்துவம் மற்றும் பரஸ்பர அனுகூலம், சமாதான சகவாழ்வு என்பவையே பஞ்சசீலக் கோட்பாடுகளாகும்.

பஞ்சசீலக் கோட்பாடுகள் (இந்தியா இதை முன்மொழிந்த நாடுகளில் ஒன்றாகும்) பிரபல ''பத்து பாண்டுங் கோட்பாடு களின்'' அடிப்படையாக அமைந்தன. இந்த பாண்டுங் கோட்பாடுகள், வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய அரசுகளின் அரசியல்-சட்ட பரஸ்பர உறவு முறையாகும். 1955இல் பாண்டுங் மகாநாட்டை கூட்டுவதில் சுதந்திர இந்தியா முக்கியப் பங்காற்றியது. இம்மகாநாட்டின் முடிவுகளை சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் வரவேற்றன, இவற்றிற்கு ஆதரவளித்தன. இம்மகாநாட்டை ஏகாதிபத்தியம், காலனியாதிக்கத்திற்கு எதிராயும், தம் சுதந்திரம் மற்றும் அரசுரிமையை ஊர்ஜிதப் படுத்திக் கொள்ளவும் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மக்கள் நடத்தும் போராட்டத்தில் ஒரு முக்கிய மைல்கல்லாக மாஸ்கோவில் மதிப்பிட்டனர்.

இரண்டாவது உலக யுத்தம் முடிந்த உடனேயே ஏகாதிபத்தியவாதிகள் கட்டவிழ்த்து விட்ட ''கெடுபிடி யுத்தத்தை'' அகற்றுவதிலும், சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வதிலும்

---

1955ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாடு மற்றும் கிரேட் பிரிட்டனின் முன்முயற்சிகளுக்கேற்ப தோற்றுவிக்கப்பட்ட இராணுவ-அரசியல் கூட்டு. இப்பிரதேசத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டம் வலுவடைந்த ஒரு சூழ்நிலையில், அதன் உறுப்பு நாடுகளுக்கிடையே முரண்பாடுகள் வலுத்த போது இக்கூட்டு 1970க்களின் கடைசியில் கலைந்தது.

சோவியத் யூனியனும் இந்தியாவும் கொண்டுள்ள அக்கறை, சர்வதேச ஸ்தாபனங்களில், குறிப்பாக ஐ. நா. சங்கத்தில் வெற்றிகரமான சோவியத்-இந்திய ஒத்துழைப்பை முன் நிர்ணயித்தது. ஐ. நா. சங்கப் பொது சபையின் முதல் அமர்விலேயே சோவியத் தூதுக்குழுவும் இந்தியத் தூதுக் குழுவும் பரஸ்பரம் ஒத்துழைத்தன. ஐ. நா. சங்கத்தில் வல்லரசுகளின் ஒருமனக் கோட்பாடு, கிரீஸிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகளை வெளியேற்றுவது, ஐ. நா. சங்கத்தில் உறுப்பினர் நிலை போன்ற பிரச்சினைகளில் சாராம்சத்தில் ஒரே நிலையிலிருந்து இரண்டு தூதுக்குழுக்களும் பேசின.

இந்தியாவின் காலனி சார்பு நிலை ஒழித்துக் கட்டப் பட்டதானது, சோவியத் மக்களும் இந்திய மக்களும் சுதந் திரமாக கலந்து பழகுவதில் இருந்த பெரும் தடைகளை அகற்றியது, மிகப் பல்வேறான மட்டங்களில் பரஸ்பரத் தொடர்புகளையும் உறவுகளையும் ஊக்குவித்தது. 1953இல் இந்திரா காந்தி சோவியத் யூனியனுக்கு வருகை தந்தார். இது தனிப்பட்ட பயணமாக இருந்த போதிலும் (இந்திரா காந்தி சோவியத் யூனியனிலிருந்த இந்தியத் தூதுவர் கே. பி. எஸ். மேனனின் விருந்தினராக வந்தார்) சோவியத்-இந்திய உறவுகளில் இது ஒரு முக்கிய இடத்தை வகித்தது. இதுதான், இந்தியாவின் சுதந்திரத்தை உறுதிப்படுத்துவதிலும் இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவையும் ஒத்துழைப் பையும் வளர்ப்பதிலும் பின்னால் பெரும் பங்காற்றிய இந்தியத் தவப் புதல்வியின் முதல் சோவியத் பயணமாகும். இந்திரா காந்தியே குறிப்பிட்டபடி, புதிய வாழ்வின் கட்டுமானத்தில் சோவியத் மக்களின் தன்னலம் கருதா உழைப்பும் சோவியத் கலாச்சார, விஞ்ஞான சாதனைகளும் அவரிடம் மறக்க இயலா பெரும் மனப்பதிவுகளை ஏற்படுத் தின. ''சலுகையுள்ள ஒரே வர்க்கமாகிய'' குழந்தைகளின் மீது சோவியத் நாட்டில் காட்டப்படும் அக்கறையும் கவனமும் அவரைப் பெரிதும் கவர்ந்தன. அகன்யோக் (''தீச்சுடர்'') என்ற சஞ்சிகைக்கு அளித்த பேட்டியில் இந்திரா காந்தி பின்வருமாறு கூறினார்:

''...உங்கள் நாட்டிற்கு வருபவரை முதலில் கவருவது வாழ்வின் சகல துறைகளிலும் நடைபெறும் கட்டுமான மாகும். உங்கள் நாட்டில் மக்களின் வாழ்க்கை மேல்மேலும் சிறப்பாகி வருவதை உணர முடிகிறது. எங்கும் எல்லா

வற்றிலும் குழந்தைகளைப் பற்றிய அக்கறைக்கு இங்கே முதலிடம் தரப்படுகிறது. இப்படிப்பட்ட ஆரோக்கியமான, மகிழ்ச்சியான குழந்தைகளைப் பார்க்க சந்தோஷமாக உள்ளது, இவர்கள் இப்படி கவலையின்றி வளர்வதும், கேள்விகள் கேட்பதும் மனத்தைக் கவருகின்றன. சோவியத் மக்களை அவர்களது இல்லங்களில் சந்தித்தது எனக்கு பெரும் மகிழ்ச்சியளித்தது. இவர்களின் வீடுகள் தூய்மை யானவை, வசதியானவை, சோவியத் மக்களின் மனதார்ந்த விருந்தோம்பல் என்னை நெகிழ வைத்தது.'' *

பிரபல இந்திய அரசியல் தலைவியின் கூர்மையான, நல்லெண்ணம் மிக்க பார்வையில், சோவியத் ஆட்சிக் காலத்தில் பெண்களின் நிலையில் ஏற்பட்டுள்ள வியத்தகு மாற்றங்கள் தென்பட்டன. ''சோவியத் யூனியனில் தம் உரிமைகளின் நிறைவேற்றத்திற்கான உண்மையான வாய்ப்புகள் பெண்களுக்கு உள்ளன... பெண்கள் தமது உரிமைகளைப் பரவலாக பயன்படுத்துவது குறித்து எனக்கு மகிழ்ச்சி. ஒரு பெண்மணி குறிப்பிட்ட வேலைக்கு முன்மொழியப்படும் போது அவளுக்கு தன்னுறுதி இருப்பதும் மக்களின் நம்பிக்கையை அவள் பெற்றிருப்பதும் மிகவும் முக்கியம்'' * * என்று இந்திரா காந்தி குறிப்பிட்டார்.

இந்த முதல் சோவியத் பயணத்தின் போது இந்திரா காந்தி மாஸ்கோ, லெனின்கிராத், திபிலீசி, சோச்சி, தாஷ்கன்ட், சமர்கன்ட் ஆகிய இடங்களுக்குச் சென்றார். சென்ற இடங்களில் எல்லாம் சோவியத் மக்கள் இவரை மகிழ்வோடு வரவேற்று உபசரித்தனர், இவர்கள் இந்திரா காந்தியை இந்திய மக்களின் பிரதிநிதியாகப் பார்த்தனர், தம் மன உணர்வுகளை இவருடன் தாராளமாகப் பகிர்ந்து கொண்டனர். சோவியத் யூனியனில் சோஷலிச சமுதாயக் கட்டுமான அனுபவத்தையும் இந்திய தேசிய புனரமைப்புக் கடமைகளையும் ஒப்பிட்ட இந்திரா காந்தி பின்வருமாறு குறிப்பிட்டார்: ''இந்தியாவைப் போன்றே அந்த நாட்டிலும் பல மக்களினங்கள் வாழுகின்றன. இந்த மக்களினங்கள் ஒவ்வொன்றிற்கும் அதனதன் தாய்மொழி உள்ளது,

---

* எல். வி. மித்ரோஹின், ''இந்திரா காந்தியின் முதல் சோவியத் பயணம்'', இந்தியா, 1981 — 1982, ஆண்டு மலர், மாஸ்கோ, 1983, பக்கங்கள் 226—227.

* * அதே நூல்.

இவற்றின் கலாச்சார வளர்ச்சி மட்டங்கள் வெவ்வேறானவை. இந்நாட்டில் மக்கள் திரளினர் சிதறுண்டு கிடந்தனர், கல்வியறிவற்றவர்களாயும் மிகவும் ஏழ்மையானவர்களாயும் இருந்தனர், விவசாயம் பின்தங்கியதாயிருந்தது, தொழிற் துறை வளர்ச்சியுறவில்லை. 35 ஆண்டுகளில் இவர்கள் விவசாயத் துறையை நவீனமயப்படுத்தி இயந்திரமயப்படுத் தினர், தொழிற்துறையை ஏற்படுத்தினர், கல்வியறிவின்மையை அகற்றினர். பாரபட்சமில்லா பார்வையாளர் இவற்றை மெய்ப்பிப்பார். உங்களது அரசியல் நம்பிக்கைகள் எப்படிப் பட்டவையாக இருந்த போதிலும் உண்மைகளை அலட்சியப் படுத்தக் கூடாது. நீங்கள் மட்டும் உங்கள் மனதிற்கு பூட்டுப் போட்டு மூடாமலிருந்தால் இவை நிச்சயம் உங்களிடம் மனப்பதிவை ஏற்படுத்தும், உங்களை ஊக்குவிக் கும்.'' *

சமாதானத்தின் மீதான சோவியத் மக்களின் நாட்டமும் சோவியத் மக்களுடைய உழைப்பின் சமாதானப் போக்கும் உண்மையிலேயே இந்திய விருந்தினர் மீது அழிக்க முடியா பெரும் மனப்பதிவை ஏற்படுத்தியது. சோவியத் சமுதாயத் தில் எல்லாமே சமாதானத்திற்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ளன, அங்கு எல்லாமே சமாதாண்த்தின் பேரால் சமைக்கப் படுகின்றன என்றார் இந்திரா காந்தி.

அரசுத் துறை வளர்ச்சியின் அடிப்படையிலான தொழிற்துறைமயப்படுத்தல், காலனியாட்சியாளர்களிடமிருந்து கிடைத்த விவசாய உறவுகளின் கட்டமைப்பை மாற்றியமைத் தல், தேசிய விஞ்ஞானம், தொழில்நுட்பம் மற்றும் கலாச்சாரத்தின் தோற்றம் ஆகியவற்றில் ஏற்பட்ட வெற்றி கள் இந்தியா சுதந்திரமான வளர்ச்சிப் பாதையில் நடை போட வழிகோலின. இது நாட்டின் சுயமான வெளிநாட்டுக் கொள்கையை வலுப்படுத்தவும் இதன் ஏகாதிபத்திய எதிர்ப்பு, காலனி எதிர்ப்புப் போக்கைப் பலப்படுத்தவும் அவசியமான புறவய சூழ்நிலைகளைத் தோற்றுவித்தது. ஏகாதிபத்திய வட்டங்களின் ஆக்கிரமிப்புத் தன்மை அதிகரித்ததும், ஆசியாவை, குறிப்பாக தெற்காசியாவை பலத்தின் அடிப்படையிலான ஆபத்தான அரசியல் வட்டத் திற்குள் இழுக்க முயற்சிகள் செய்யப்பட்டதும் இதை

---

* அதே நூல்.

அவசியமாக்கின. பாகிஸ்தானிற்கு இராணுவ உதவி அளிப்பது பற்றிய பரவலான அமெரிக்கத் திட்டமும் வாஷிங்டனின் முன்முயற்சியோடு தெற்காசியாவில் ஆக்கிரமிப்பு கூட்டு ஸ்தாபனங்களைத் தோற்றுவித்ததும் மேற்கூறியவற்றிற்குச் சான்றுகளாகும்.

''அமெரிக்காவிற்கும் பாகிஸ்தானுக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட இராணுவ உதவி பற்றிய உடன்படிக்கை, துணைக் - கண்டத்தில் போர்த்தந்திர சமன்நிலையைக் குலைத்தது, நிலவரம் சுமூகமடைவதைக் கெடுத்தது, ஆயுதப் போட்டிக்கு வழிகோலியது. நாட்டு வளர்ச்சிக்கு மிக அவசியமான சாதனங்கள் இன்று இந்த ஆயுதப் போட்டிக்கு செல்கின்றன'' என்று பிரபல இந்திய அரசியல் பிரமுகரும் ராஜதந்திரியுமாகிய டி. என். கவுல் குறிப்பிட்டார். இவருடைய மதிப்பீட்டின்படி ''ஐ. பாஸ்டர் டால்லஸின் நிர்ப்பந்தத்திற்கேற்ப **செண்டோ** மற்றும் **சீட்டோ** கூட்டுகள் தோற்றுவிக்கப்பட்டதானது (இதில் பாகிஸ்தான் அங்கம் வகிக்கிறது) வங்காள விரிகுடா, அராபியக் கடல் பகுதியில் 'கெடுபிடி யுத்தத்தைக்' கட்டவிழ்த்து விட்டது''*. டி. என். கவுல் நியாயமாக சுட்டிக்காட்டும்படி, இந்திய வெளிநாட்டுக் கொள்கை மீது அமெரிக்காவிற்கு உள்ள அதிருப்தியும், மேற்கத்திய செல்வாக்கிற்கு உட்பட இந்தியா மறுப்பதும் இதற்கான முக்கியக் காரணங்களில் ஒன்றாகும். இது தவிர, இந்தியா பின்பற்றும் ஆக்கபூர்வமான நடுநிலைக் கொள்கையும் அரசுகளுக்கிடையே இது கடைப்பிடிக்கும் உறவுகளின் கோட்பாடுகளும் — மேற்கே ஒரு சிலர் இவற்றை ''ஒழுக்கக்கேடானவை'' என்று கூட அறிவிக்கின்றனர் — ஏகாதிபத்தியத்தின் மிகப் பிற்போக்கான வட்டங்களால் மேன்மேலும் தாக்கப்பட்டன.

மறைந்த சோவியத் ஆராய்ச்சியாளர் யூரி நசேன்கோ, 50ஆம் ஆண்டுகளின் நடுப்பகுதியிலிருந்து வெளிப்படையாகத் தெரியும் இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் பின்வரும் அம்சங்களை சுட்டிக்காட்டினார். முதலில், காலனி எதிர்ப்பு போக்கு. இது சுதந்திரத்திற்காகவும், காலனி

---

* T. N. Kaul. "Developments in South Asia", *Indo-Soviet Seminar on International Affairs*, New Delhi, December 7—9, 1981, p. 4.

யாதிக்கப் பழமையின் விளைவுகளை ஒழித்துக்கட்டவும் போராடும் மக்களுக்கு தீவிர ஆதரவளிப்பதில் வெளிப் படுகிறது. அடுத்த அம்சம் நிறவெறி எதிர்ப்பு. எல்லா இனங்களின் முழு சமத்துவத்தைக் கோருவதிலும், ஒடுக் கப்பட்ட மக்களினங்களின் எவ்வித பாகுபாட்டையும் அனுமதிக்காதிருப்பதிலும் இது வெளிப்படுகிறது. இறுதியாக, இராணுவக் கூட்டுகளில் சேராமலிருப்பது, சர்வபொது படைக்கலைப்பிற்கான போராட்டம், பேரழிவு ஆயுதங்களை ஒழித்துக்கட்டும் பாதையில் முதல் நடவடிக்கையாக அணு ஆயுத சோதனைகளை நிறுத்தும் முன்மொழிவு ஆகியவற்றைக் குறிப்பிடலாம். எல்லா சர்வதேச பிரச் சினைகளிலும் சுதந்திரமான அணுகுமுறை, இவற்றில் ஒவ்வொன்றின் விஷயத்திலும் சுயமாகச் செயல்படும் உரிமை, சர்வதேச பதட்ட நிலையைக் குறைப்பதற்காக சர்வதேச சச்சரவுகளைத் தீர்ப்பதில் தூதுவராக இருத்தல் ஆகியவை சமாதான விருப்பமுள்ள இந்தியாவின் ஆக்கபூர்வ மான நடுநிலைக் கொள்கையின் பிரிக்க இயலா அங்கங் களாகும்*.

இப்படிப்பட்ட கொள்கைதான் இந்தியாவின் சர்வதேச செல்வாக்கை உயர்த்தியது, உலக அரங்கில் இதன் சுயமான நிலையை வலுவாக்க உதவியது. நவீன உலகின் மிக முக்கிய பிரச்சினைகளின் தீர்விற்கான தேட்டங்களில் இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையிலான ஒத்துழைப்பை வளர்த்து விரிவுபடுத்தவும் சோவியத்-இந்திய உறவுகளின் வளர்ச்சிக்கும் தேவையான சூழ்நிலை களை இது தோற்றுவித்தது. மறு புறம், சோவியத் யூனியனுடனும், உலக சோஷலிசத்துடனும் இந்திய உறவுகள் வலுவடைந்ததானது மொத்தத்தில் நாட்டின் சுதந்திரமும் இதன் சுயமான வெளிநாட்டுக் கொள்கையும் உறுதியடைய வழிகோலின. இளம் தேசிய அரசுகள் சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையைக் கடைப் பிடிக்க, இந்த அரசுகளுக்கும் சோஷலிச நாடுகளுக்கும் இடையில் சம உரிமையுள்ள ஒத்துழைப்பு நிலவுவது முக்கிய நிபந்தனைகளில் ஒன்றாகும் என்பதை உலக அரங்கில் சம்பவங்களின் வளர்ச்சிப் போக்கு காட்டுகிறது. சோஷலிச

* யூ. பி. நசேன்கோ, ஜவகர்லால் நேருவும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும், மாஸ்கோ, 1975, பக்கங்கள் 204–205 (ருஷ்ய மொழியில்).

நாடுகள் இளம் தேசிய அரசுகளின் தேசிய சுதந்திரமும் அரசுரிமையும் உறுதியடைய உதவுகின்றன. 1957இல் மாஸ்கோவில் நடைபெற்ற கம்யூனிஸ்டு மற்றும் தொழிலாளர் கட்சிகளின் கூட்டத்தின் அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டது தற்செயல் அல்ல. ''சோஷலிச அமைப்பு நிலவுவது, இந்த (விடுதலையடைந்த. — ஆ-ர்.) நாடுகளுக்கு சோஷலிச நாடுகள் சம உரிமைகளின் அடிப்படையில் உதவுவது, சமாதானத்திற்காகவும் ஆக்கிரமிப்பிற்கு எதிராயும் நடக்கும் போராட்டத்தில் இவற்றுக்கும் சோஷலிச அரசுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பு ஆகியவை இந்நாடுகளின் மக்கள் தம் தேசிய விடுதலையைக் காக்கவும், சமூக முன்னேற்றப் பாதையில் நடைபோடவும் உதவுகின்றன.'' *

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான உறவுகளின் உதாரணம் இதை மெய்ப்பிக்கிறது. நம் காலத்தின் முக்கிய பிரச்சினைகளின் விஷயத்தில் நம்மிரு நாடுகளின் நிலைகள் ஒத்துப் போகின்றன அல்லது நெருக்கமானவையாக உள்ளன. இந்த உறவுகள் வெற்றிகரமாக வளர இது ஒரு முக்கியக் காரணம். பிரபல இந்திய ராஜதந்திரியும் பின்னால் இந்திய-சோவியத் நட்புறவுக் கழகத் தலைவராயுமிருந்த கே. பி. எஸ். மேனன் பின்வருமாறு எழுதினார்: ''ஏகாதிபத்தியமும் காலனியாதிக்கமும் தான் யுத்தத்தை மூட்டி விடும் பிரதானக் காரணிகளாகும். இவற்றிற்கு எதிராக நிற்பதன் மூலம் சோவியத் யூனியனும் இந்தியாவும் சமாதானத்தைப் பேணிக் காக்க போராடுகின்றன. கூட்டுச் சேராமை பற்றிய காந்தியக் கோட்பாட்டில் வளர்க்கப்பட்ட சுதந்திர இந்தியாவிற்கு சமாதானம் என்பது வெறும் விவேகமான ஒரு பிரச்சினை மட்டுமல்ல, இது செயல்படுவதற்கான கோட்பாடுமாகும். சோவியத் யூனியனும் சமாதானத்தின் அவசியத்தை உயர்வாக மதிப்பிடுகிறது: உண்மையில், புரட்சிக்குப் பின் லெனின் வெளியிட்ட முதல் அரசாணை சமாதான அரசாணையாகும்'' * *.

---

* சமாதானம், ஜனநாயகம், சோஷலிசத்திற்கான போராட்டத்தின் வேலைத்திட்ட ஆவணங்கள், மாஸ்கோ, 1964, பக்கம் 10 (ருஷ்ய மொழியில்).

** K. P. S. Menon, *A Diplomat Speaks*, Delhi, 1974, p. 121.

ஏகாதிபத்தியத்திற்கும் இராணுவ வெறிக்கும் எதிரான போராட்டத்தில் தேசிய விடுதலை சக்திகளுடன் ஒருமைப் பாடு தெரிவிக்கும் லெனினியக் கோட்பாட்டின் வழிநின்று, சமாதானத்தைப் பேணிக் காப்பதில் சோஷலிச நாடு களுக்கும் இளம் தேசிய அரசுகளுக்கும் உள்ள பொது அக்கறையை ஆதாரமாகக் கொண்டு சோவியத் யூனியன் சர்வதேச அரங்கில் இந்தியாவின் சமாதான முயற்சிகளுக்கு இடையறா ஆதரவு அளித்து வந்துள்ளது. 1954இல் படைக்கலைப்பு சம்பந்தமான ஐ. நா. சங்க துணைக் கமிட்டி விரிவுபடுத்தப்பட வேண்டுமென்றும் இதில் இந்தியாவைச் சேர்க்க வேண்டுமென்றும் சோவியத் யூனியன் கோரியது. அணு ஆயுதத்தை தடை செய்ய வேண்டும் என்ற ஜவகர்லால் நேருவின் முன்மொழிவை சோவியத் யூனியன் வரவேற்றது (1946இல் சோவியத் யூனியன் இதே மாதிரியான முன்மொழிவை வெளியிட்டது).

இந்தியப் பிரதமர் ஜவகர்லால் நேரு 1955 ஜூனில் சோவியத் யூனியனுக்கு மேற்கொண்ட அதிகாரபூர்வமான பயணம் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே நட்புறவையும் ஒத்துழைப்பையும் வளர்க்கும் பாதையில் ஒரு பெரும் மைல்கல்லாகத் திகழ்ந்தது. இது சோவியத் மற்றும் இந்தியத் தலைவர்களின் முறையான பரஸ்பர பயணங்களுக்கு வழிகோலியது, பொருளாதார மற்றும் ஆன்மீக வாழ்வின் மிகப் பல்வேறான துறைகளில் இருதரப்பு ஒத்துழைப்பின் தீவிர வளர்ச்சிக்கு உதவியது. அரசியல் ஒத்துழைப்பு பெரும் உந்து சக்தியைப் பெற்றது. வேறுபட்ட சமூக-அரசியல் அமைப்புகளுடைய அரசுகளின் சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளின் உயிரோட்டத்தை இப்பயணம் உலகம் முழுவதற்கும் தெட்டத் தெளிவாகக் காட்டியது.

ஜவகர்லால் நேருவின் இந்தியப் பயணம், சோவியத் மக்களுடனான இவரது ஏராளமான சந்திப்புகள், பெரும் பொதுக் கூட்டங்களில் ஆற்றிய உரைகள் முதலியன சோவியத்-இந்திய நட்புறவின் வரலாற்றில் பொன் னெழுத்துகளால் பொறிக்கத் தக்கவையாகும். இவை சோவியத் மக்களும் இந்திய மக்களும், இரு நாடுகளின் தலைவர்களும் மேலும் ஆழமாக ஒருவரையொருவர் புரிந்து கொள்ள உதவின.

ஜூன் 7 முதல் 23ஆம் தேதி வரை சோவியத் யூனியனில் தன் மகள் இந்திராவுடன் இருந்த நேரு, மாஸ்கோவைத் தவிர வோல்காகிராத் (அன்றைய ஸ்தாலின்கிராத்), கிரீமியா, திபிலீசி, அஷ்ஹாபாத், தாஷ்கன்ட், சமர்கன்ட், அல்மா-ஆத்தா, ருப்த்சோவ்ஸ்க், மக்னித்தாகோர்ஸ்க், ஸ்வெர்த்லோவ்ஸ்க், லெனின்கிராத் நகரங்களுக்குச் சென்றார். அக்காலத்தில் அயல் நாட்டு அரசாங்கத் தலைவர் ஒருவர் சோவியத் யூனியனில் மேற்கொண்ட மிக நீண்ட பயணம் இதுதான். இந்த அம்சமும், குறிப்பாக சென்ற இடங்களில் எல்லாம் நேருவும் இந்திரா காந்தியும் சந்தித்த நெஞ்சார்ந்த விருந்தோம்பலும் சோவியத்-இந்திய நட்புறவுகளை வலுப்படுத்த சோவியத் நாட்டில் எவ்வளவு முக்கியத்துவம் தரப்படுகிறது என்பதற்கும் மாபெரும் இந்திய மக்களின் பால், இந்தியாவின் பால் சோவியத் மக்களுக்கு உள்ள நட்புறவின் ஆழத்திற்கும் சான்று பகர்ந்தன.

ஜவகர்லால் நேருவிற்கும் சோவியத் தலைவர்களுக்கும் இடையில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகளில் இரு நாடுகளுக்கு இடையிலான பொருளாதார ஒத்துழைப்பு பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டன, பரவலான சர்வதேச பிரச்சினைகளைப் பற்றி கருத்துகள் பரிமாறிக் கொள்ளப் பட்டன. 1955ஆம் ஆண்டு ஜூன் 22ஆம் தேதி சோவியத் பிரதமரும் இந்தியப் பிரதமரும் கையொப்பமிட்ட கூட்டறிக் கையில் இவற்றின் விளைவுகள் பிரதிபலித்தன. சமாதான சகவாழ்வு பற்றிய ஐந்து கோட்பாடுகளின் அடிப்படையில் பரஸ்பர உறவுகளை மேலும் வளர்ப்பதில் இரு நாடுகளுக்கும் உள்ள நாட்டம் இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க ஆவணத்தில் வெளிப்பட்டது. ''இந்தக் கோட்பாடுகளுக்கு இன்னமும் பரவலாக ஆதரவு கிடைத்தால் அது சமாதானத்தை வலுப்படுத்தும், மக்களுக்கு இடையிலான பரஸ்பர நம்பிக் கைக்கு உதவி புரியும், சர்வதேச ஒத்துழைப்பின் வளர்ச்சிக்கு பாதையமைக்கும்'' என்று அறிக்கையில் நம்பிக்கை தெரிவிக்கப் பட்டிருந்தது. பான்டுங் மகாநாட்டு முடிவுகள் உலக அமைதியை பலப்படுத்துவதில் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தன என்று சுட்டிக்காட்டிய இரு நாடுகளும் இம்முடிவுகளை உயர்வாக மதிப்பிட்டன. அதே சமயம், ஆயுதப் போட்டி, குறிப்பாக அணு ஆயுதப் போட்டியினால் சமாதான லட்சியத்திற்கு

ஏற்படும் ஆபத்தான விளைவுகள் அறிக்கையில் திட்ட வட்டமாக சுட்டிக்காட்டப்பட்டன. ''சாதாரண மற்றும் அணு ஆயுதங்களைப் பெருக்கும் போக்கு அரசுகளின் மத்தியில் அச்சத்தையும் சந்தேக உணர்வையும் அதிகப் படுத்தியுள்ளது, நல்ல ஆக்கபூர்வமான காரியங்களிலிருந்து, அதாவது மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதி லிருந்து தேசிய செல்வங்களைத் திசைதிருப்ப இட்டுச் சென்றது'' என்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

ஐ. நா. சங்கத்தில் சீன மக்கள் குடியரசிற்கு உரிய நியாயமான இடத்தை தர வேண்டுமென்ற கோரிக்கைக்கு இரு நாடுகளும் ஆதரவளித்தன, இந்தோசீனாவில் சமா தானத்தை ஏற்படுத்த ஜினீவா உடன்படிக்கைகளை நிறை வேற்றுவதுதான் ஒரே வழி என்று இரு நாடுகளும் தீவிரமாக அறைகூவல் விடுத்தன. சர்வதேச உறவுகளில் நியாயம், நீதி மற்றும் சமாதான சூழலை வலுப்படுத்துவதை நோக்க மாகக் கொண்ட சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் தொடர்ச்சியான கொள்கைக்கு இவை சான்று பகர்ந்தன.

இவையெல்லாம், 1955 ஜூன் 22ஆம் தேதி மாஸ்கோவில் நடைபெற்ற இந்திய-சோவியத் நட்புறவுக் கூட்டத்தில் ஜவகர்லால் நேரு ஆற்றிய உரையின் போது கூறியவற்றை ஆணித்தரமாக ஊர்ஜிதப்படுத்தின: ''எமது கருத்தின்படி சமாதானம் என்பது யுத்தத்தில் ஈடுபடாமல், இருப்பது மட்டுமல்ல, இது சர்வதேச உறவுகளின் பாலான நல்ல ஆக்கபூர்வமான அணுகுமுறையாகும். இப்படிப்பட்ட அணுகு முறை எல்லாப் பிரச்சினைகளையும் பேச்சுவார்த்தைகளின் மூலம் தீர்ப்பதால், இன்றைய பதட்ட நிலை தணிவதற்கு இட்டுச் செல்ல வேண்டும், பல்வேறு துறைகளில் அரசுகளுக் கிடையேயான ஒத்துழைப்பு வளர வழிகோல வேண்டும், அதாவது கலாச்சார, விஞ்ஞான தொடர்புகள் வளரவும், வர்த்தகம் விரிவடையவும் கருத்துகள், அனுபவம் மற்றும் செய்தி பரிமாற்றத்திற்கும் துணை புரிய வேண்டும்'' *. சோவியத் யூனியனும் இதே அணுகுமுறையைத்தான் பின்பற்றுகிறது.

ஜவகர்லால் நேருவின் சோவியத் பயணத்தின் பயன்கள்

---

* *Jawaharlal Nehru's Speeches*, Vol. three, March 1953 — August 1957, Delhi, 1958, pp. 303 — 304.

சோவியத் தலைவர்கள் 1955 நவம்பர் — டிசம்பரில் இந்தியா விற்கு பதில் வருகை தந்த போது வலுப்பட்டு மேலும் வளர்ச்சி பெற்றன. மேதகு விருந்தினர்கள் டில்லி, பம்பாய், பெங்களூர், மைசூர், சென்னை, கல்கத்தா, ஜெய்பூர், ஸ்ரீநகர் இன்னும் சில இடங்கள் ஆகியவற்றிற்கு சென்ற னர். சோவியத் தலைவர்கள் தம் உரைகளில் சோவியத்-இந்திய நட்புறவையும் ஒத்துழைப்பையும் வளர்த்து வலுப்படுத்துவதற்கு அளித்த பெரும் முக்கியத்துவம் குறித்து இந்திய மக்கள் திருப்தி தெரிவித்தனர். கொரிய மக்களுக்கு எதிரான ஆக்கிரமிப்பு யுத்தத்தை நிறுத்துவது, இந்தோசீனாவில் பிரச்சினைகளை சமாதானமாகத் தீர்த்தல், ஐ. நா. சங்கத்தில் சீனாவை சேர்த்துக் கொள்ளும் கோரிக்கை, படைக்கலைப்பு, பேரழிவு ஆயுதங்களைத் தடைசெய்தல் ஆகியவற்றிற்கான போராட்டம் போன்ற முக்கிய பிரச் சினைகளில் சமாதான சக்திகளின் கூட்டு முயற்சிகளில் இந்தியாவின் பங்கை சோவியத் அரசாங்கத் தூதுக்குழுவினர் உயர்வாக மதிப்பிட்டனர். இது இந்திய மக்களிடையே ஆழ்ந்த மனப்பதிவை ஏற்படுத்தியது.

சோவியத் தூதுக்குழுவின் இந்தியப் பயணத்தின் போது ஜவகர்லால் நேரு, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நல்லண்டை உறவுகள் ''இரு நாடுகளின் நலன்களுக்கு உகந்தவையாக இருப்பதோடு கூட, மனிதகுலத் தின் முன் நிற்கும் முக்கியப் பிரச்சினைகளின் தீர்விற்கும் குறிப்பாக உலக சமாதானத்தைப் பேணிப் பாதுகாக்கும் பிரச்சினையின் தீர்விற்கும் பெரும் முக்கியத்துவம் வாய்ந் தன''* என்று குறிப்பிட்டார். இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் உள்ள மக்கள் இவ்வார்த்தைகளின் மீது கவனம் செலுத்தினார்கள்.

இதனிடையே மேற்கேயிருந்த குறிப்பிட்ட சில வட்டங் கள், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே நட்புறவும் ஒத்துழைப்பும் வளர்ந்து வருவதானது இந்தியக் குடியரசு பின்பற்றும் ஆக்கபூர்வமான நடுநிலை கொள் கையிலிருந்து அது விலகும் அபாயத்தை ஏற்படுத்துவதாக சித்தரிக்க முற்பட்டன. இந்தியா சோவியத் வெளிநாட்டுக்

---

* ஜவகர்லால் நேரு, **இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை**, மாஸ்கோ, 1965, பக்கம் 173 (ருஷ்ய மொழியில்).

கொள்கையுடன் "இணைந்து விட்டதாகக்" கூட குரல்கள் எழுந்தன. இக்கூற்றுகளுக்கும் உண்மைக்கும் சம்பந்தமே யில்லை. தன் வெளிநாட்டுக் கொள்கையையோ தன் சித்தாந் தத்தையோ யார் மீதும் திணிக்க சோவியத் யூனியன் எப்போதுமே முயன்றதில்லை, இப்போதும் முயலவில்லை. மற்ற நாடுகளின் வெளிநாட்டுக் கொள்கையின் சிறப்பு அம்சங்களையும் தனித்துவத்தையும் மதிப்பது என்பது எப்போதுமே சர்வதேச அரங்கில் சோவியத் அரசின் நடவடிக்கையில் முக்கியக் கோட்பாடுகளில் ஒன்றாக இருந்தது, இப்போதும் இருக்கிறது. நிச்சயமாக இது இராணுவ-அரசியல் கூட்டுகளில் சேராத கோட்பாட்டை இடையறாது பின்பற்றும் இந்தியாவின் பாலான சோவியத் கொள்கைக்கும் பொருந்தும். இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகளை சோவியத் யூனியனில் புரிந்து கொள்கின்றனர், அதே போல், நம்மிரு நாடுகளின் சமூக, அரசியல் அமைப்பு வேறுபட்டதாக இருப்பதால் நம் முன் உள்ள உள்நாட்டு பிரச்சினைகளைத் தீர்ப்பதில் நாம் வேறுவேறு பாதைகளில் செல்வதையும் புரிந்து கொள்கின்றனர். ஒரு சில குறிப்பிட்ட வெளிச் சக்திகள் சில சமயங்களில் இந்தியாவுடன் நட்பு கொள்ள கெஞ்சுகின்றன, மற்ற சில சமயங்களில் இதை வெளிப் படையாக அலட்சியப்படுத்துகின்றன, இந்நாட்டை தம் செல்வாக்கு வட்டத்திற்குள் இழுக்க முயலுகின்றன. ஆனால் சோவியத் யூனியனைப் பொறுத்த மட்டில், உலக அரங்கில் சமாதானக் கொள்கையைப் பின்பற்றும் சுதந்திர இந்தியா, சமாதானத்திற்காகவும் மிரட்டல், நாடு பிடிக்கும் ஆசை, மேலாதிக்கவாதக் கொள்கைக்கு எதிராயும் நடக்கும் போராட்டத்தில் ஒரு முக்கியக் காரணியாகும் என்ற அடிப்படையில் அது செயல்படுகிறது. இந்தியாவின் கூட்டு சேராக் கொள்கையை சோவியத் யூனியன் ஆதரித்தது, இப்போதும் ஆதரிக்கிறது, இந்தியாவை இராணுவ-அரசியல் கூட்டினுள் இழுக்க இது எவ்வித முயற்சியும் செய்யவில்லை.

1955 நவம்பர் — டிசம்பரில் சோவியத் அரசாங்கத் தூதுக்குழு இந்தியாவிற்கு வருகை தந்த போது, இராணுவ உடன்படிக்கைகள் மற்றும் கூட்டுகள் சம்பந்தமான இந்திய நிலைக்கு சோவியத் தரப்பு தன் ஆதரவைத்

தெரிவித்தது. சோவியத் தூதுக்குழுவை கௌரவிக்கும் முகமாக 1955 நவம்பர் 20ஆம் தேதி நடந்த விருந்தில் ஜவகர்லால் நேரு கூறினார்: ''இராணுவ உடன்படிக்கைகள், கூட்டுகள், ஆயுதங்களை சேகரிப்பது ஆகியவற்றின் மூலம் உலக சமாதானத்தையும் பாதுகாப்பையும் அடைய முடியாது என்று நாங்கள் உறுதியாக நம்புகின்றோம். நாங்கள் எந்த ஒரு முகாமையும் எந்த ஒரு இராணுவக் கூட்டையும் சார்ந்திருக்கவில்லை. நாங்கள் இருக்க விரும்பும் ஒரே முகாம் சமாதான, நல்லெண்ண முகாமாகும்... நல்லெண்ணம் மற்றும் ஒத்துழைப்பின் அடிப்படையிலான கூட்டைத்தான் நாங்கள் ஒரே கூட்டாக கருதுகிறோம்''*. இக்கருத்துகளை சோவியத் தலைவர்கள் நன்கு புரிந்து கொண்டு அணுகினர்.

சோவியத் அரசாங்கத் தூதுக்குழு புறப்படும் முன் கூட்டறிக்கை கையெழுத்தானது. 1955 ஜூன் 22ஆம் தேதி வெளியான கூட்டறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த கருத்துநிலைகள் ஊர்ஜிதப்படுத்தப்பட்டதோடு கூட இந்த ஆவணத்தில், ஐ. நா. சங்கத்தில் உறுப்பினர் பிரச்சினை தீர்க்கப்படுகையில் ஒரே மாதிரியான கோட்பாடுகள் பின்பற்றப்பட வேண்டியதன் அவசியத்தின் மீது ஆழ்ந்த நம்பிக்கை தெரிவிக்கப்பட்டிருந்தது; சர்வதேச பதட்ட நிலையைக் குறைக்கும் செயல்முனைப்பான வழிகளில் ஒன்று பொருளாதார, கலாச்சாரத் துறைகளில் பரஸ்பர ஒத்துழைப்பிற்கும், பரஸ்பரம் புரிந்து கொள்ளவும் குறுக்காக நிற்கும் தடைகளை அகற்றுவதாகும் என்று கோடிட்டுக் காட்டப்பட்டிருந்தது.

''அரசுகளின் கூட்டு முயற்சிகள் மட்டுமே சமாதானத்திற்கும் உண்மையான பாதுகாப்பிற்கும் வழிகோலும்'' என்ற கருத்துநிலை சமாதானம் மற்றும் சர்வதேச பாதுகாப்பு லட்சியங்களுக்கு பெரும் உள்ளாற்றலைத் தந்தது.

1955இல் சோவியத் மற்றும் இந்தியத் தலைவர்களின் பரஸ்பரப் பயணங்கள் சோவியத்-இந்திய உறவுகளின் வெற்றிகரமான வளர்ச்சிக்கு கோட்பாட்டு ரீதியாகப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்கின.

---

* அதே நூல்.

இப்பயணங்களின் முக்கியத்துவத்தை பிரபல இந்திய ஆராய்ச்சியாளர் பிமல் பிரசாத் பின்வருமாறு மதிப்பிடு கிறார்: "1955ஆம் ஆண்டு இறுதியில் இந்திய-சோவியத் உறவுகளுக்கு உறுதியான அஸ்திவாரம் இடப்பட்டது தெளிவு. ஏதோ மூன்றாவது நாட்டின் மீதான பகைமையின் அடிப்படையில் இந்த நட்புறவு அமையவில்லை. உலக சமாதானத்தின் மீதான பொது நாட்டம்தான் இதற்கான அடிப்படையாகும். இரண்டு அண்டை நாடுகளும் வெவ்வேறு தத்துவஞானப் போக்குகளைப் பின்பற்றினாலும், இரு நாடுகளின் அரசியல், சமூக அமைப்புகள் வெவ்வேறானவை யாக இருந்தாலும், பூமியில் சமாதானத்தை வலுப் படுத்த, குறிப்பாக தெற்காசியாவை சர்வதேச பதட்ட நிலையிலிருந்து காப்பாற்ற இரு நாடுகளும் ஒத்துழைப்பது பொது நலன்களுக்கு உகந்ததாக இருக்கும் என்ற முடிவிற்கு வந்தன" * .

பரஸ்பரப் பயணங்கள், உலக அரங்கில் இரு நாடுகளின் ஒத்துழைப்பிற்கும், இவற்றின் பரஸ்பர அரசியல் செயலாக் கத்திற்குமான வாய்ப்புகளை விரிவுபடுத்தின. ஆசியாவிலும் மற்ற கண்டங்களிலும் சமாதானத்தை பலப்படுத்தவும், யுத்த அபாயத்திற்கு எதிராயும், படைக்கலைப்பிற்காகவும் சோவியத் யூனியனும் இந்தியாவும் கூட்டாகப் போராடும் வாய்ப்புகள் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்கின. ஏனெனில், நம் பூமியின் இரு பெரும் சமாதான சக்திகள், அதாவது ஒரு மிகப் பெரும் சோஷலிச நாடு மற்றும் மிகப் பெரும் வளர்முக அரசின் நடவடிக்கைகளாக இவை திகழ்ந்தன.

---

* Bimal Prasad, *Indo-Soviet Relations. 1947—1972. A Documentary Study*, Delhi, 1973, p. 60.

# அத்தியாயம் இரண்டு

## பலமடைந்து வரும் ஒத்துழைப்பு

இந்தியா சற்றும் பிறழாது கடைபிடித்து வரும் கூட்டுச் சேரா சமாதான வெளிநாட்டுக் கொள்கையை ''நேருவின் கொள்கை'' என்று உரிமையோடு அழைக்கின்றனர். உண்மையிலேயே, ''சுதந்திர இந்தியாவின் சிற்பி'' இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படைகளை உருவாக்கினார், இது உருவாகும் போக்கின் மீது குறிப்பிட்ட செல்வாக்கு செலுத்தினார். ஏகாதிபத்தியம் மற்றும் நவீன காலனியாதிக்கத்திற்கும் இந்திய அரசிற்கும் இடையிலான முரண்பாடுகள் கூர்மையடைந்த சூழ்நிலைகளில், பழைய மற்றும் புதிய காலனியாதிக்கவாதிகளுக்கு எதிராகச் செயல்படுவது, சுதந்திரம் மற்றும் விடுதலைக்கு எல்லா மக்களினங்களுக்கும் உள்ள உரிமைகளை ஆதரிப்பது, வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய அரசுகளின் சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டை ஆதரிப்பது ஆகியன இந்தியாவின் தேசிய நலன்களுக்கு வகை செய்வதற்கான அவசிய நிபந்தனைகளாகும் என்னும் கருத்து இந்திய ஆளும் வட்டங்களிலும் பரவலான பொதுமக்களாலும் மேன்மேலும் புரிந்து கொள்ளப்பட்டது. நம் காலத்தின் முக்கிய பிரச்சினைகளின் பாலான இந்நாட்டின் ஆக்க பூர்வமான அணுகுமுறையின் காரணங்களும் உலக அரங்கில் இதன் ஆக்கபூர்வமான பங்கு அதிகரித்து வருவதற்கான காரணங்களும் இதில்தான் அடங்கியுள்ளன. ''நேரு கொள்கையின்'' முக்கிய அம்சங்கள் இந்திய நலன்களை மட்டுமின்றி பெரும்பாலான இளம் தேசிய அரசுகளின் நலன்களையும் பிரதிபலிக்கின்றன. இன்று கூட்டுச் சேராக் கொள்கை இன்றைய சர்வதேச உறவுகளின் உலகளாவிய காரணியாக மாறியுள்ளதால் இது மெய்ப்பிக்கப்படுகிறது.

உலக அரங்கில் தம் ஆக்கபூர்வமான பங்கை அதிகப் படுத்த இந்தியாவும் மற்ற வளர்முக நாடுகளும் மேற் கொள்ளும் முயற்சிகளை சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் இடையறாது ஆதரித்து இவற்றிற்கு உதவி வந்துள்ளன. கிழக்கத்திய மக்களினங்கள் காலனி யாதிக்க நுகத்தடியிலிருந்து விடுதலை பெற்ற பின் உலக வாழ்வில் தீவிர பங்கேற்கும், மனிதகுலத்தின் முன் நிற்கும் பிரச்சினைகளின் தீர்வில் பெரும் பங்காற்றும் என்ற வி. இ. லெனினின் கணிப்பு நடைமுறையாகியது. சர்வதேச அரங்கில் சோஷலிச நாடுகளுக்கும் விடுதலையடைந்த நாடுகளுக்கும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையில் ஒத்துழைப்பும் பரஸ்பரச் செயலாக்கமும் வெற்றிகரமாக வளர்ந்து வருவது இதற்கு கணிசமான அளவு துணை புரிந்தது. இன்றைய உலகின் முக்கிய பிரச்சினைகளை, முதலாவதாக உலக சமாதானத்தைக் காத்து, வலுப்படுத்துவது, மக்களின் விடுதலைக்கும் சுதந்திரத்திற்கும் வழிகோலுவது சம்பந்தமான பிரச்சினை களை இரு நாடுகளும் பொது அடிப்படையில் அணுகுவது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். சோவியத் யூனியன் கம்யூ னிஸ்டுக் கட்சியின் 22வது காங்கிரஸ், உலக அரங்கில் இளம் தேசிய அரசுகளின் பங்கு அதிகரித்து வருவதை உயர்வாக மதிப்பிட்டது. ''அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலையடைந்த அல்லது விடுதலையடைந்து கொண்டிருக்கும் ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகள் இன்று சர்வ தேச விவகாரங்களில் தீவிரப் பங்காற்றத் துவங்கியுள்ளன. இந்நாடுகளை நடுநிலைய்ானவை என்று அடிக்கடி அழைக் கின்றனர். ஆனால், இவை இப்போதுள்ள இராணுவ- அரசியல் கூட்டுகளில் இல்லாததால் மட்டுமே இவற்றை இப்படி அழைக்கலாம். இந்நாடுகளில் பெரும்பாலானவை, இன்றைய உலகின் முக்கிய பிரச்சினையாகிய யுத்தமா சமாதானமா எனும் பிரச்சினையில் நடுநிலையை வகிக்க வில்லை. இவை சாதாரணமாக, சமாதானத்திற்காக, யுத்தத்திற்கு எதிராகப் போராடுகின்றன. காலனியாதிக்கத் திலிருந்து விடுதலை பெற்ற நாடுகள் சமாதானத்தின் முக்கியக் காரணியாக, காலனியாதிக்கம் மற்றும் ஏகாதி பத்தியத்திற்கு எதிரான போராட்டக் காரணியாக மாறி வருகின்றன. இவற்றின் நலன்களை கவனத்தில் கொள்ளாமல்

உலக அரசியலின் முக்கிய பிரச்சினைகளை இப்போது தீர்க்கவே முடியாது''* என்று காங்கிரஸ் ஆவணங்களில் சுட்டிக்காட்டப்பட்டது.

எனவே விடுதலையடைந்த அரசுகளையும், உருவாகி வந்த கூட்டுச் சேரா இயக்கத்தையும் ஆதரிப்பதற்காக சோவியத் யூனியன் உலக அரங்கில் தன் உறுதியான நிலைகளையும் சர்வதேச செல்வாக்கையும் பன்முறை பயன்படுத்தியது தற்செயலானது அல்ல. சோவியத் யூனியனின் முன்முயற்சியின் பேரில்தான் 1960இல் ஐ. நா. சங்க பொதுச் சபை, காலனி நாடுகள் மற்றும் மக்களினங்களுக்குச் சுதந்திரம் வழங்குவது பற்றிய பிரகடனத்தை நிறைவேற்றியது. இது எஞ்சியிருந்த காலனியாதிக்கத் தோற்றுவாய்களை ஒழித்துக்கட்டும் போராட்டத்தை தீவிரப்படுத்துவதில் முக்கியப் பங்காற்றியது. 1961ஆம் ஆண்டு பெல்கிரேட் மகாநாட்டில் கூட்டுச் சேரா இயக்கம் தோன்றியதை சோவியத் யூனியன் வரவேற்றது; சமாதானத்தை வலுப் படுத்தவும் காலனியாதிக்கத்தை ஒழித்துக் கட்டவும் உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று இம்மகா நாட்டில் ஒலித்த அறைகூவலுடன் முழு ஒருமைப்பாட்டைத் தெரிவித்தது.

கூட்டுச் சேரா கொள்கையிலிருந்து பிறழ்வதில்லை என்ற இந்தியத் தலைவர்களின் உறுதியை சோவியத் நாட்டின் ஆளும் வட்டங்களும் பொதுமக்களும் நன்கு புரிந்து கொண்டு இதற்கு ஆதரவு நல்கினர். 50ஆம் ஆண்டுகளின் இறுதியிலும் 60ஆம் ஆண்டுகளின் துவக்கத் திலும், இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை மாற்றுவதற்காக குறிப்பிட்ட உள்நாட்டு வட்டங்களும் வெளிநாட்டு சக்திகளும் பெரும் நிர்ப்பந்தம் செலுத்திய சூழ்நிலையில் கூட்டுச் சேரா கொள்கையில் உறுதியாக நிற்க இந்தியத் தலைமைக்கு துணிவும் தொலைநோக்குப் பார்வையும் பெரிதும் தேவைப்பட்டன. கூட்டுச் சேரா கொள்கை ஏதோ நாட்டின் தேசியப் பாதுகாப்பிற்கு உகந்ததாக இல்லை என்றும் இதனால் இது தன் வலு வின்மையை மேன்மேலும் வெளிப்படுத்துவதாயும் கருத்துகள்

---

* சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22வது காங்கிரஸ் ஆவணங்கள், மாஸ்கோ, 1962, பக்கம் 26 (ருஷ்ய மொழியில்).

தோன்றின. இதற்கு மாற்றாக, ஏகாதிபத்திய வல்லரசுகளுடனான இராணுவ-அரசியல் தொடர்புகளை வைத்துக் கொள்ளும் திசையில் இந்தியாவைத் தள்ள முயற்சிக்கப் பட்டது.

இந்தியாவிற்கு கடினமான அந்நாட்களில் கூட்டு சேரா கொள்கை தாக்குதல்களுக்கு உட்படுத்தப்பட்ட போது இந்தியத் தலைமையின் உறுதியான நிலை சரியானது என்பதை வாழ்க்கையே மெய்ப்பித்தது. ''கூட்டு சேரா கொள்கையிலிருந்து சிறிது விலகினாலும் அது இந்தியாவின் நலன்களுக்கும் இதன் விடுதலைக்கும் முழுமைக்கும் பங்கம் விளைவிக்கும். இது உலக சமாதானத்திற்குத் துணை புரியாது'' * என்று ஜவகர்லால் நேரு அன்று கூறியது இன்றைக்கும் பொருந்தி வரும்.

இந்நிலை தன்னிச்சையான, நொடிப் பொழுது முடிவை ஆதாரமாகக் கொண்டிருக்கவில்லை. இது இந்திய தேசிய அரசின் நலன்களின் மொத்தத்தையும் கவனத்தில் கொண்டது, உலக அரங்கிலும் இந்தியாவைச் சுற்றிலும் உள்ள சிக்கலான அரசியல் சூழ்நிலையில் இந்தியாவின் பங்கை நன்கு பார்த்தது. ஆதாரமற்ற, மிக ஆபத்தான முடிவுகளை ஏற்குமாறு டில்லியைத் தூண்டி விட ஒரு சிலர் முயன்ற போது, இந்தியத் தலைமை சர்வதேச உறவுகளில் எதார்த்த உணர்வையும் நிதானத்தையும் வெளிப்படுத்தியது.

இந்தியாவிற்கு விரோதமான வெளிச் சக்திகளுக்கு எதிராயும், நாட்டின் தேசிய அரசுரிமை மற்றும் பிரதேச முழுமையைக் காப்பாற்றவும் இந்திய மக்களும் தலைவர்களும் நடத்திய போராட்டத்திற்கு சோவியத் யூனியன் தொடர்ச்சியான, இடையறாத ஆதரவு அளித்து வந்துள்ளது. சோவியத்-இந்திய உறவுகளின் வரலாற்றில் இதற்கு பல உதாரணங்கள் உள்ளன. நவீன காலனியாதிக்கவாதிகள் மற்றும் ஏகாதிபத்தியவாதிகளின் தந்திரங்களை வெற்றிகரமாக எதிர்த்து நிற்க வல்ல பலமான, ஐக்கியமான, மலர்ச்சியுறும் வல்லரசாக இந்தியாவைக் காண தான் விரும்புவதாக சோவியத் யூனியன் திட்டவட்டமான நடவடிக்கைகளால் பன்முறை மெய்ப்பித்துள்ளது. இந்தியாவின்

---

* ஜவகர்லால் நேரு, இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை, மாஸ்கோ, 1965, பக்கம் 57 (ருஷ்ய மொழியில்).

அரசுரிமையை பலங்குன்றச் செய்யவும் இதன் தேசிய ஒருமைப்பாட்டைக் குலைக்கவும் செய்யப்படும் சகலவித முயற்சிகளையும் சோவியத் யூனியன் எதிர்த்தது, எதிர்த்து வருகிறது.

இந்தியாவின் பாலான அணுகுமுறையில் சோவியத் யூனியன், மற்ற சோஷலிச நாடுகளின் நிலைக்கும் நவீன காலனியாதிக்க, ஏகாதிபத்திய வட்டங்களின் நிலைக்கும் இடையிலுள்ள முக்கிய, அடிப்படை மாறுபாடு இதுதான். சுயமான வளர்ச்சிப் பாதையில் உறுதியாக நடை போடும் இந்தியா போன்ற ஒரு மாபெரும் நாட்டின் சுதந்திரத்தை எப்படியாவது பறிக்க நவீன காலனியாதிக்க, ஏகாதிபத்திய வட்டங்கள் முயலுகின்றன என்று கருதுவது நிலவரத்தை எளிமையாகப் பார்ப்பதற்கு ஒப்பானதாகும். ஆனால் தெற்காசியாவிலும் இதற்கு அப்பாலும் ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்பு நோக்கங்களுக்கு இந்தியா தடையாக இல்லாத வகையில் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை ''திருத்த'' மேற்கே ஒரு சிலர் விரும்புவதில் சந்தேகமில்லை. சமாதானத்திற்குப் பாதுகாப்பாயும் சுதந்திரம், விடு தலைக்கு மக்களுக்குள்ள உரிமைகளுக்கு ஆதரவாயும் இந்தியா போன்ற நாடுகள் எழுப்பும் குரலை (மற்ற கண்டங்களில் இதற்கு செவிமடுக்கின்றனர்) அடக்கினால், மேற்கே உள்ள குறிப்பிட்ட வட்டங்களுக்கு சமாதான சக்திகளின் விஷயத்தில் தம் ஆக்கிரமிப்பு கொள்கையை கடைபிடிப்பது எளிதாய் இருக்கும்.

இந்தியாவின் பாலான கோட்பாட்டு ரீதியாக எதி ரெதிரான இரண்டு அணுகுமுறைகளைப் பிரபல இந்திய ராஜதந்திரியும் சமூக நலப் பிரமுகருமான கே. பி. எஸ். மேனன் குறிப்பிட்டார். தன் நூல்களில் ஒன்றில் இவர் பின்வருமாறு எழுதினார்: ''அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு மாறாக, சோவியத் யூனியன் ஆரம்பத்திலிருந்தே இந் தியாவின் உலக அரசியல் முக்கியத்துவத்தை அங்கீகரித் தது. இது 550 மில்லியன் மக்களைக் கொண்ட ஒரு நாடு (1971ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி. — ஆ-ர்.) மாபெரும் நாகரிகத்தைக் கொண்ட நாடு, தொடர்ச்சியான வெளி நாட்டுக் கொள்கையைப் பின்பற்றும் நாடு, ஏராளமான இயற்கைச் செல்வங்கள் உள்ள நாடு, முக்கியமான ஒரு பிரதேசத்தில் உள்ள நாடு. இந்நாடு ஒரு பெரும் வல்லரசாக

வேண்டும், சோவியத் யூனியன், தன் நலன்களின் அடிப் படையில், இந்தியா ஒரு வல்லரசாகத் திகழ வேண்டுமென விரும்புகிறது. அமெரிக்க ஐக்கிய நாடு மறு புறத்தில், இந்தியாவின் உள்ளாற்றல் மிக்க பூகோள, அரசியல் முக்கியத்துவத்தை அலட்சியப்படுத்துகிறது. அல்லது இது இப்படியும் இருக்கலாம்: இந்த முக்கியத்துவத்தை அமெரிக்கா மிக நன்றாகப் புரிந்து கொள்வதால் இந்த உள்ளாற்றல் எதார்த்தமாக மாறுவதைத் தடுக்க உறுதி பூண்டுள்ளது''*.

இந்தியா சுதந்திரமடைந்தது முதல் இன்று வரை, இந்தியாவிற்கு அத்தியாவசியமான, ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினைகளின் பால், கே. பி. எஸ். மேனன் குறிப்பிடும் இந்த வேறுபட்ட அணுகுமுறைகளை ஏகாதிபத் திய வட்டங்களும் சோவியத் யூனியனும் கடைபிடிப்பது வெறுமனே தற்செயல் அல்ல. இதோ ஒரு சில உதாரணங் கள். ஏகாதிபத்திய வட்டங்கள் இந்தியாவின் மீது தமது நிலைகளை (இவை இந்திய நலன்களுக்கு எதிரானவை, இந்தியாவின் தேசியப் பாதுகாப்பிற்கு ஆபத்தேற்படுத்தக் கூடியவை) திணிக்க ''காஷ்மீர் பிரச்சினை'' என்றழைக்கப் படுவதைப் பயன்படுத்தும் முயற்சிகளை சோவியத் யூனியன் எப்போதுமே எதிர்த்து வந்துள்ளது. 1957இல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமையில் மேற்கத்திய நாடுகள், காஷ்மீரில் ''ஐ. நா. சங்கத்தின் மேற்பார்வையில் பாரபட்ச மற்ற நேர்வாக்கெடுப்பை'' நடத்த வேண்டும், இதற்குத் தயாராவதற்காக ''ஐ. நா. சங்கத்தின் தற்காலிக இராணு வத்தை'' அங்கு அனுப்ப வேண்டும் என்ற ஒரு தீர்மானத்தை பாதுகாப்பு கவுன்சிலில் கொண்டு வர விரும்பிய போது சோவியத் யூனியன் தன் வீட்டோ அதிகாரத்தைப் பயன்படுத்தி இத்தீர்மானம் நிறைவேறாதபடி செய்தது. மேற்கத்திய நாடுகளின் முன்மொழிவு, காஷ்மீர் மக்களின் சித்தத்தையும் பாகிஸ்தான் இராணுவ உடன்படிக்கைகளில் சேர்ந்துள்ளதால் தோன்றிய நிலவரத்தையும் அலட்சியப் படுத்துவதாக இந்தியப் பிரதிநிதி கூறியதை பாதுகாப்பு கவுன்சிலில் இருந்த சோவியத் பிரதிநிதி முழுமையாகப் புரிந்து கொண்டு அணுகினார்.

---

* K. P. S. Menon, *The Indo-Soviet Treaty. Setting and Sequel*, Delhi. 1972, pp. 92—93.

இந்தியப் பரப்பிலிருந்த போர்ச்சுகல் காலனி சம்பந்த மான ஒரு முக்கிய பிரச்சினையிலும் சோவியத் யூனியன் கோட்பாட்டு வழிப்பட்ட நிலையை மேற்கொண்டது. இந்தியாவிற்கு முழுக்க முழுக்க சொந்தமான பரப்பில் போர்ச்சுகல் தன் காலனியை வைத்திருப்பது நாகரிக மக்களினங்களுக்கு வெட்கக் கேடானது என்று 1955இல் தனது இந்தியப் பயணத்தின் போது சோவியத் பிரதமர் குறிப்பிட்டார். கோவா, ''ஒரு காலனியல்ல, போர்ச்சுகலின் பரப்பு'' என்று போர்ச்சுகல் மற்றும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அயல் விவகாரத் துறை அமைச்சர்கள் கூறியது வியத்தகு முறையில் முரண்பாடானதாக இருந்தது.

1961 டிசம்பரில், ஆண்டாண்டு காலமாக இந்தியாவிற்கு சொந்தமான பரப்பை போர்ச்சுகல் நுகத்தடியிலிருந்து விடுவிக்க ஜவகர்லால் நேருவின் அரசாங்கம் சட்டபூர்வ மான நடவடிக்கைகளை மேற்கொண்ட போது இதற்குத் தடையாக நிற்கவும், இந்தியாவை ஆக்கிரமிப்பாளனாக சித்தரிக்கவும் ஏகாதிபத்தியச் சக்திகள் பெரும் முயற்சிகளை மேற்கொண்டன. காலனி எதிர்ப்பு, ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகள், எல்லாவற்றிற்கும் மேலாக சோவியத் யூனியன், இந்திய அரசாங்கத்தின் நடவடிக்கைகளுக்கு நிபந்தனையற்ற ஆதரவு அளித்ததால் இது இயலாததாகியது. சோவியத் பிரதமர் இந்தியப் பிரதமருக்கு அனுப்பிய செய்தியில் கோவா இந்தியாவுடன் இணைக்கப்பட்டதற்கு வரவேற்பு தெரிவிக்கப்பட்டிருந்தது. இது, ''வெட்கக் கேடான காலனி யாதிக்க முறையை முழுமையாகவும் உடனடியாகவும் ஒழித்துக்கட்டுவதற்கான மக்களின் போராட்டத்தில் ஒரு முக்கியப் பங்காக''* மதிப்பிடப்பட்டது. இந்தியாவின் நடவடிக்கைகளைக் கண்டிக்கும் தீர்மானத்தை ஐ. நா. சங்க பாதுகாப்பு சபையில் கொண்டு வர ஏகாதிபத்தியவாதிகள் தீட்டிய திட்டங்களை சோவியத் யூனியன்தான் குலைத்தது என்பது பெரிதும் இயற்கையானது. ''காலனி நாடுகள் மற்றும் மக்களினங்களுக்கு சுதந்திரம் வழங்குவது பற்றிய பிரகடனத்தில்'' கூறப்பட்டுள்ள லட்சியங்களுக்கும் தேசிய விடுதலை மற்றும் காலனி எதிர்ப்பு போராட்ட லட்சியங் களுக்கும் சோவியத் யூனியன் உறுதியான ஆதரவு தருவதை

* பிராவ்தா, டிசம்பர் 19, 1961.

பாதுகாப்பு கவுன்சிலில் சோவியத் யூனியனின் நிலை திட்டவட்டமாக ஊர்ஜிதப்படுத்தியது. யார் உண்மையான நண்பன், மக்களின் தேசிய விடுதலைக்கு நடைமுறையில் யார் ஆதரவு தருகின்றனர், யார் தமது உண்மையான நோக்கங்களை நட்புறவு எனும் போர்வையில் மூடி மறைத்து, வாயளவில் காலனியாதிக்கத்தைக் கண்டித்து விட்டு, நடைமுறையில் இதன் கடைசி மிச்சங்களை ஒழித்துக் கட்டுவதற்கு எப்படியாவது தடையாக நிற்க முயலுகின்றனர் என்பதை இந்திய மக்கள் இன்னுமொரு முறை கண்டுணர்ந்தனர்.

விடுதலை இயக்கங்களுடனான ஒருமைப்பாடு நேருவின் வெளிநாட்டுக் கொள்கையின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாகும். ''காலனியாதிக்கம் நிலவுவது, தீவிர கொந்தளிப்புகளை ஏற்படுத்துவதோடு கூட புதிய யுத்தத்தையும் மூட்டி விடக் கூடும் என்பதில் சந்தேகமில்லை. எனவே உலகம் முழுவதன் நோக்கிலிருந்து, காலனியாதிக்க அமைப்பு முழுமையாக அகற்றப்பட வேண்டியதும், இது தனக்குப் பின் மோசமான நினைவுகளைத் தவிர வேறெந்த சுவடுகளையும் விடக் கூடாது என்பதும் மிக முக்கியம்''* என்று **1961**இல் ஜவகர்லால் நேரு கூறினார். இந்தியத் தலைவரின் இந்த அணுகுமுறை, தேசிய விடுதலைப் போராட்டம் பரவுவதை தடுக்க ஏகாதிபத்தியவாதிகளும் இவர்களின் கூட்டாளிகளும் செய்யும் முயற்சிகளை எதிர்க்கும் விஷயத்தில் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான ஒத்துழைப்பை நன்கு வளர்க்க உதவியது. சோவியத் யூனியன், இந்தியாவின் கூட்டு நடவடிக்கைகள், இளம் தேசிய அரசுகளின் சுதந்திரத்தின் மீதான நவீன காலனியாதிக்க, ஏகாதிபத்திய சக்திகளின் தாக்குதல்களை முறியடிக்க உதவின. **1956**இல் மத்திய கிழக்கில் எகிப்திற்கு எதிரான பிரிட்டிஷ்-பிரெஞ்சு-இஸ்ரேல் ஆக்கிரமிப்பின் போது சோவியத் யூனியனும் இந்தியாவும் பொதுவான நிலைகளில் நின்று குரல் எழுப்பியது குறிப்பிடத்தக்கது. மூன்று நாடுகளின் ஆக்கிரமிப்பை சோவியத் யூனியனும் இந்தியாவும் வன்மையாக கண்டித்து, இது உடனடியாக

---

* ஜவகர்லால் நேரு, இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை, மாஸ்கோ, **1965**, பக்கம் **293**.

நிறுத்தப்பட வேண்டுமென கோரின. எகிப்தின் மீதான தாக்குதலை ''இதுவரை நடந்தவற்றிலேயே மிகவும் வெட்கங்கெட்ட ஆக்கிரமிப்பு'' * என்று ஜவகர்லால் நேரு மதிப்பிட்டார். ஐ. நா. சங்கத்தில் சோவியத் யூனியன், இந்தியா, மற்ற சமாதான நாடுகளின் ஆக்கபூர்வமான நடவடிக்கைகளின் பயனாய், ஆக்கிரமிப்பை நிறுத்தக் கோரும் போராட்டத்திற்கு ஆதரவாக உலக மக்கள் கருத்து திரட்டப்பட்டது. ஆக்கிரமிப்பாளர்களைத் தடுத்து நிறுத்துவதில் இது முக்கியப் பங்காற்றியது. சோவியத் பிரதமர் அமெரிக்க ஐக்கிய நாடு, பிரிட்டன், பிரான்ஸ், இஸ்ரேல் அரசாங்கங்களின் தலைவர்களுக்கு அனுப்பிய செய்திகள் இவர்களின் மயக்கங்களைத் தெளிவு படுத்தின. எகிப்திற்கு எதிரான ஆக்கிரமிப்பை நிறுத்தவும் மூன்றாவது உலக யுத்தத்தை தவிர்க்கவும், ஐ. நா. சங்கத்தின் மற்ற உறுப்பு நாடுகளின் இராணுவங்களோடு தன் இரா ணுவத்தையும் சேர்த்துப் பயன்படுத்துமாறு சோவியத் யூனியன் ஐ. நா. சங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ளதாக அச்செய்திகளில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்த ஐ. நா. படையில் சேருவதென இந்தியாவும் முடிவு செய்தது.

எகிப்திற்கு எதிரான ஆக்கிரமிப்பின் போது சோவியத் யூனியனும் இந்தியாவும் மேற்கொண்ட உறுதியான நிலையின் அடிப்படையில், பின்னால் மத்திய கிழக்கு பிரச்சினையின் நியாயமான தீர்விற்காக அரபு மக்கள் நடத்தும் போராட்டத்திற்கு சோஷலிச நாடுகள் மற்றும் கூட்டுச் சேரா இயக்கம் அளித்து வரும் ஆதரவு வளர்ந்து வலுவடைந்தது.

சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் பரஸ்பர அரசியல் செயலாக்கம், 1962இல் லாவோஸ் பூமியில் சமாதானத்தை புனர் நாட்டுவதிலும் (இதை ஏகாதிபத்திய வாதிகள் உறுதியாக எதிர்த்து நின்றனர்), 1964இல் காங்கோவில் ஏகாதிபத்திய இராணுவ ஆக்கிரமிப்பை அகற்றுவதிலும் கணிசமான பங்காற்றியது.

சர்வதேச அரங்கில் சோவியத் யூனியன், இந்தியாவின்

* யூ. பி. நசேன்கோ, ஜவகர்லால் நேருவும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும், மாஸ்கோ, 1975, பக்கம் 246 (ருஷ்ய மொழியில்).

கூட்டு நடவடிக்கைகள் நம்மிரு நாடுகளுக்கும் இடையிலான பரஸ்பர இணக்கத்தையும் நம்பிக்கையையும் வலுப்படுத்தின, பதட்ட நிலையும் சச்சரவுச் சூழலும் தோன்றிய போதெல்லாம் பொது அணுகுமுறையை விரைவாகக் கண்டுபிடிக்க உதவின.

சோவியத்-இந்திய உறவுகளின் உயர்வான மன ஒற்றுமையும் நம்பிக்கையும்தான் (இவை தெற்காசியாவிலும் மற்ற இடங்களிலும் உள்ள நிலவரம் பற்றிய பொதுவான அல்லது நெருங்கிய கருத்து நிலைகளின் அடிப்படையிலானவை) 1971இல் கிழக்கு வங்க மக்களின் விடுதலைப் போராட்டத்தை ஒடுக்கி தெற்காசிய துணைக் கண்டம் முழுவதையும் நிரந்தர சச்சரவு அரங்காக மாற்றுவதை நோக்கமாகக் கொண்ட வெளிச் சக்திகளின் திட்டங்களைக் குலைத்தன என்று கூறுவது மிகையாகாது. துணைக் கண்டத்தில் நிலவரத்தை சீர்படுத்த கிழக்கு வங்க மக்களின் நியாயமான கோரிக்கைகளையும் உரிமைகளையும் நிறைவேற்ற வேண்டியது அவசியம் என்றும் எந்த ஒரு வெளிச் சக்தியின் தலையீட்டையும் அனுமதிக்க கூடாதென்றும் சோவியத் யூனியனும் இந்தியாவும் ஒரே மாதிரி கருதின. 1971 அக்டோபர் 15ஆம் தேதி டாஸ் செய்தி நிறுவனம் வெளியிட்ட அறிக்கையில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது: ''பதட்ட நிலையைத் தணிப்பது என்பது, கிழக்கு பாகிஸ்தான் மக்களின் பிரிக்க இயலா உரிமைகளையும் சட்டபூர்வமான நலன்களையும் கணக்கில் கொண்டு கிழக்கு பாகிஸ்தானின் பிரச்சினையைத் தீர்ப்பதைப் பொறுத்துள்ளது''*.

அன்றைய பாகிஸ்தான் தலைவர்கள் இந்த உரிமைகளையும் நலன்களையும் அலட்சியப்படுத்தியதும், மிகவும் கடுமையான ஒரு பூசலை ஆயுத வழியால் அடக்க அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளும் (இதில் இவர்களுக்கு ஏகாதிபத்தியச் சக்திகளின் ஆதரவு இருந்தது) தேசிய விடுதலை இயக்கம் கிழக்கு பாகிஸ்தானில் இன்னும் எழுச்சி பெறவும், வங்கதேசம் என்ற நாடு உருவாகவும் தான் இட்டுச் சென்றன என்பது தெரிந்ததே. இதை ஏகாதிபத்திய வட்டங்களும் இவற்றின் கூட்டாளிகளும் எப்படி எதிர்கொண்டனர், கிழக்கு வங்க மக்களின் நியாயமான போராட்டத்திற்கு ஆதரவு நல்கிய இந்தியாவின

---

* பிராவ்தா, அக்டோபர் 16, 1971.

விஷயத்தில் இவர்கள் எப்படி நடந்து கொண்டனர் என் பதும் நன்கு தெரிந்ததே.

அமெரிக்கப் பத்திரிகைகளின் செய்திகளின்படி, அப்போது அமெரிக்க ஜனாதிபதிக்கு தேசிய பாதுகாப்பு பற்றிய விவகாரங்களில் துணைவராக இருந்த ஹென்ரி கிஸ்ஸின் ஜெர், ''இந்தியாவின் விஷயத்தில் போதுமான அளவு கடுமையாக நடந்து கொள்ளாததால் ஒவ்வொரு அரை மணி நேரமும் தான் ஜனதிபதியின் முன் நரக வேதனையை அனுபவித்ததாக''* ஒப்புக்கொண்டார். ஆனால் ஏகாதி பத்திய சக்திகளின் தரப்பிலிருந்து கடுமையும் நிர்ப்பந்தமும் மிரட்டலும் அளவிற்கதிகமாகவே வந்தன. இந்தியத் துணைக் கண்ட நெருக்கடியின் உச்ச கட்டத்தில் இந்தியா விற்கு அளித்து வந்த பொருளாதார உதவியை அமெரிக்கா நிறுத்தியது. இது தவிர, இந்தியாவை அச்சுறுத்தும் பொருட்டு, ''என்டர்பிரைஸ்'' என்ற அணு ஆயுத விமானந் தாங்கி கப்பலின் தலைமையில் அமெரிக்க ஏழாவது கப்பற்படையின் கப்பல்கள் வங்காள விரிகுடாவில் இந்தியக் கரைகளுக்கு அனுப்பப்பட்டன.

ஆனால் வங்கதேசம் பிறப்பதை தடுத்து, இந்தியாவை அச்சுறுத்தி ''தண்டிக்க'' சமாதான விரோத, சுதந்திர விரோத சக்திகள் செய்த முயற்சிகள் பலிக்கவில்லை. கிழக்கு வங்க மக்களின் தேசிய விடுதலை இயக்கத்துடனும் இந்தியாவுடனும் சோஷலிச நாடுகளும் சோவியத் யூனி யனும் காட்டிய ஒருமைப்பாடு இதில் முக்கியப் பங்காற்றி யது. ஐ. நா. சங்கத்திலும் இதற்கு வெளியிலும் சோவியத் யூனியன் மேற்கொண்ட கோட்பாட்டு வழிப்பட்ட நிலை, இந்தியாவிற்கு எதிராக ஏகாதிபத்தியவாதிகளும் இவர்களின் கூட்டாளிகளும் மேற்கொண்ட ராஜதந்திர, இராணுவ-அரசியல் நடவடிக்கைகளை முறியடிப்பதில் தீர்மானகர மான பங்காற்றியது. ''வங்கதேச நெருக்கடி சமயம் பூராவும் சோவியத் யூனியன் இந்தியாவின் அருகே மலை போல் நின்றது. ஐ. நா. சங்கத்திலும் சோவியத் யூனியனின் உதவி பெரிதும் கணிசமானதாயிருந்தது. சோவியத் யூனியன் பாதுகாப்பு கவுன்சிலில் அமெரிக்க தீர்மானத்திற்கு எதிராக

---

* Bimal Prasad, *Indo-Soviet Relations. 1917—1972*, New Delhi, 1973, p. 383.

எவ்வித ஊசலாட்டமும் இன்றி தன் வீட்டோ அதி காரத்தைப் பயன்படுத்தியது''* என்று கே. பி. எஸ். மேனன் குறிப்பிட்டார்.

இந்தியத் துணைக் கண்டத்தில் நெருக்கடியைத் தீர்க்க முயன்ற போது சோவியத் யூனியனோ இந்தியாவோ ஒருதலைப்பட்ட அனுகூலங்களைப் பெற முயலவில்லை, இரு நாடுகளும் சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளுக்கு விசுவாசமாகவே இருந்தன. இவற்றுக்கு குறுகிய ஆதாய நோக்கங்கள் இருக்கவில்லை; நியாயம், நிலையான சமா தானம், தெற்காசிய நாடுகளுக்கு இடையே நல்லண்டை உறவுகள் ஆகியவற்றை நிலைநாட்டவே இவை விரும்பின. இந்திய அயல் விவகாரத் துறை அமைச்சரின் சோவியத் பயணத்தின் இறுதியில் 1972 ஏப்ரல் 5இல் வெளியான கூட்டு சோவியத்-இந்திய அறிக்கையில் இது விசேஷமாகக் கோடிட்டுக் காட்டப்பட்டிருந்தது. ''இன்றைய அரசியல் யதார்த்தத்தைக் கணக்கில் கொண்டு துணைக் கண்டத்தில் நிலவரம் சீர்படுத்தப்பட்டால் அது பிரதேச மக்களின் ஜீவாதார நலன்களுக்கு உகந்ததாக இருக்கும், நீண்டகால சமாதானத்திற்கு வழிகோலி அதை பலப்படுத்தும் என்று சோவியத் யூனியனும் இந்தியாவும் நம்புகின்றன. துணைக் கண்டத்தை சமாதானம், நட்புறவு, நல்லண்டை உறவு மண்டலமாக மாற்ற இயன்ற அனைத்தையும் செய்வது அவசியமென இரு தரப்புகளும் கருதுகின்றன'' என்று அறிக்கையில் கூறப்பட்டிருந்தது.**

மிகப் பல்வேறான துறைகளில் சோவியத்-இந்திய உறவுகளின் சீரிசைவான வளர்ச்சி, இரு நாடுகளுக்கும் இடையிலான மன ஒற்றுமை வலுவடைந்தது ஆகியவை சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் கையெழுத் தாக அடிப்படைகளை உருவாக்கின. இந்த ஒப்பந்தம் 1971 ஆகஸ்டு 9ஆம் தேதி கையெழுத்தானது. இந்த ஒப்பந்தம், இரு தரப்பு உறவுகளிலும் சர்வதேச விஷ யங்களிலும் சோவியத் யூனியனும் இந்தியாவும் கடைபிடிக்

---

* K. P. S. Menon, *The Indo-Soviet Treaty. Setting and Sequel*, Delhi, 1972, p. 110.

** Bimal Prasad, *Indo-Soviet Relations. 1917—1972*, New Delhi, 1973, p. 476.

கும் பரஸ்பர அனுகூலமுள்ள, நல்ல பயனுள்ள ஒத்துழைப்பின் வளமான அனுபவத்திற்கு நிலையான அரசியல் மற்றும் சட்ட அடிப்படையை வழங்கியது.

இந்தியத் துணைக் கண்டத்தில் நிலவரம் மிகவும் கடுமையான போது இந்த ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. இது முக்கியமான ஒரு பங்கை ஆற்றியது, ஆக்கிரமிப்புச் சக்திகளின் பாதையில் ஒரு உறுதியான தடையாக நின்றது, தெற்காசியத் துணைக் கண்டம் ஆபத்தான பூசல்களின் பிறப்பிடமாக மாறுவதை தவிர்த்தது. 1971ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின் முக்கியத்துவம் முழுவதையும் இக்காலகட்ட சிறப்பியல்புகளை மட்டும் வைத்து மதிப்பிடுவது சரியாகாது. ''இந்திய-சோவியத் ஒப்பந்தத்தை, சோவியத் யூனியனின் பாலான எங்கள் (அதாவது இந்திய. — ஆ-ர்.) கொள்கையின் வெளிப்பாடாக மதிப்பிட வேண்டும்'' * என்று கே.பி.எஸ். மேனன் கூறியது முற்றிலும் சரி. இந்த ஒப்பந்தம் சோவியத்-இந்திய உறவுகளின் வளர்ச்சி முழுவதன் தர்க்க ரீதியான விளைபயன், சோவியத்-இந்திய நட்புறவை கட்டும் பாதையில் சோவியத் மற்றும் இந்திய மக்களின் பல்லாண்டு முயற்சிகளின் பலன் ஆகும். அதே சமயம் இது சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பன்முக உறவுகளை மேற்கொண்டு வளர்த்து வலுப்படுத்தும் ஒரு பயன்மிகு கருவியுமாகும். சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நட்புறவும் ஒத்துழைப்பும் இரு நாடுகளின் தேசிய நலன்களாலும் நிர்ணயிக்கப்படும் நிலையான, நீண்டகால காரணிகளின் அடிப்படையில் அமைந்துள்ளதை ஆணித்தரமாக மெய்ப்பிக்கின்றது.

சோவியத்-இந்திய ஒப்பந்தம் தனது உயர்வான நோக்கங்களை முழுமையாக மெய்ப்பிப்பதையும் இருநாடுகளின் நட்புறவு, ஒத்துழைப்பை வலுப்படுத்தும் லட்சியத்திற்கு இது சேவை புரிகிறது என்பதையும் காலம் தெட்டத் தெளிவாக ஊர்ஜிதப்படுத்தியுள்ளது. ஆசியாவிலும் உலகம் பூராவும் சமாதானத்தை வலுப்படுத்துவதற்கான முக்கியக் காரணியாக இது திகழ்வதை சம்பவங்கள் கண்கூடாக காட்டின.

இரு அரசுகளின் கோட்பாட்டு ரீதியான, அடிப்படை

* K. P. S. Menon, *The Indo-Soviet Treaty. Setting and Sequel*. Delhi, 1972, p. 50

வெளிநாட்டுக் கொள்கை லட்சியங்கள் இந்த ஒப்பந்தத்தில் பிரதிபலிப்பது இதன் சிறப்பியல்பாகும். பரஸ்பரம் சுதந்திரம், அரசுரிமை, பிரதேச முழுமையை மதித்தல், உள்விவகாரங் களில் தலையிடாதிருத்தல், சமத்துவம், பரஸ்பர அனுகூலம் ஆகியவற்றின் அடிப்படையில் அரசுகளுக்கு இடையேயான உறவுகளை வளர்த்தல், ஆசியாவிலும் உலகின் மற்ற பகுதிகளிலும் சமாதானத்தைப் பலப்படுத்துதல், படைக் கலைப்பிற்கு உதவுதல், வெட்கக் கேடான காலனியாதிக்க முறையையும் நிறவெறியையும் ஒழித்துக் கட்டுதல், சமத் துவம் மற்றும் நியாயத்தின் அடிப்படையில் அரசுகளுக் கிடையில் பரவலான ஒத்துழைப்பை வளர்த்தல் ஆகிய அம் சங்கள் இவற்றிலடங்கும்.

சர்வதேச அரங்கில் பரஸ்பர செயலாக்கத்தை வளர்த்து வலுப்படுத்த இரு அரசுகளும் கொண்டுள்ள உறுதியோடு கூட இந்த ஒப்பந்தத்தில் இதற்கான வழிகளும் பாதைகளும் மற்றும் அரசியல் ஒத்துழைப்பு முறையும் திட்டவட்டமாக சுட்டிக் காட்டப்பட்டுள்ளன என்னும் அம்சம் கவனிக்கத் தக்கது. ''அரசுத் தலைவர்களின் சந்திப்புகள், கருத்துப் பரிமாற்றங்கள், இரண்டு அரசாங்கங்களின் அதிகார பூர்வ மான தூதுக்குழுக்கள், விசேஷ பிரதிநிதிகளின் பயணங் கள், ராஜதந்திர வழிகள் ஆகியவற்றின் மூலம் இரண்டு அரசுகளின் நலன்கள் சம்பந்தப்பட்ட முக்கிய சர்வதேச விவகாரங்கள் குறித்து இரு தரப்புகளும் முறையாகத் தொடர்பு கொள்ள வேண்டும்'' என்று ஷரத்து V கூறுகிறது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நட்புறவுகளின் மேற்கொண்ட வளர்ச்சி முக்கிய சர்வதேச பிரச்சினைகளின் தீர்வில் இவற்றின் ஒத்துழைப்பு முறை எவ்வளவு பயன் மிக்கது என்று காட்டியது. சாராம் சத்தில், இந்தியாவிலிருந்து சோவியத் யூனியனுக்கும் சோவியத் யூனியனிலிருந்து இந்தியாவிற்கும் உயர்மட்ட தலைவர்கள் வரும் போதும், அரசு முறையில் அதிகார பூர்வமான இந்திய பிரதிநிதிகளுக்கும் சோவியத் பிரதிநிதி களுக்கும் இடையில் சந்திப்புகள் நடைபெறும் போதும் முக்கிய சர்வதேச பிரச்சினைகள் விவாதிக்கப்படுகின்றன. இரு அரசுகளுக்கும் இடையிலான தொடர்புகளின் போது எந்த ஒரு சர்வதேச பிரச்சினையும் — அது அணு ஆயுத

சோதனைகளை நிறுத்துவதன் அவசியம் பற்றிய பிரச்சினை யாக இருந்தாலும் அல்லது கடல் உரிமை பற்றிய உடன்பாட்டை எல்லா நாடுகளும் சற்றும் பிறழாது பின்பற்றுவது பற்றிய பிரச்சினையாக இருந்தாலும் – இரு நாடுகளின் கவனத்திலிருந்து தப்பியதே கிடையாது.

சர்வதேச அரங்கில் இரு தரப்பு ஒத்துழைப்பை மதிப் பிடும் போது, சோவியத்-இந்திய ஒப்பந்தம், இதில் கூறப் பட்டுள்ள நல் லட்சியங்களை அடைவதற்கான கூட்டு முயற்சிகளை பலப்படுத்தியது என்று நிச்சயமாகக் கூற முடியும்.

புதுப் புது கிளைகள் தோன்றி வளரும் ஒரு மாபெரும் மரத்தைப் போல் உள்ள சோவியத்-இந்திய ஒப்பந்தத் திற்குப் பின் பல புதிய உடன்படிக்கைகள் செய்து கொள்ளப்பட்டுள்ளன. இது முற்றிலும் நியதியானது, ஏனெனில் இந்த ஒப்பந்தம், மனித நடவடிக்கையின் கிட்டத் தட்ட எல்லா துறைகளிலும் இரு தரப்பு தொடர்புகளின் வளர்ச்சிக்கு வழிகோலுகிறது.

பரஸ்பர தேசியப் பாதுகாப்பிற்காக இரு தரப்புகளும் ஒத்திசைவான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்ற அம்சம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை சம்பவங்கள் மெய்ப்பிக்கின்றன. சோவியத் யூனியன் மீதோ இந்தியா மீதோ யாராவது தாக்குதல் தொடுத் தாலோ, தாக்குதல் தொடுப்பதாக அச்சுறுத்தினாலோ ''இந்த அபாயத்தை அகற்றுவதற்காகவும், தம் நாடு களின் பாதுகாப்பிற்கும் சமாதானத்திற்கும் வகை செய்யும் பொருட்டு உரிய பயன்மிகு நடவடிக்கைகளை எடுப் பதற்காகவும் இரு தரப்புகளும் உடனடி கலந்தாலோசனை களில் இறங்கும்'' என்று ஷரத்து IX கூறுகிறது. இந்த ஒப்பந்தம் கையெழுத்தாகி நாட்கள் செல்லச் செல்ல சமா தானத்தைப் பலப்படுத்தும் காரணி என்ற வகையில் இதன் பெரும் முக்கியத்துவமும் இதன் சமாதானத் தன்மையும் மேன்மேலும் தெட்டத் தெளிவாகத் தெரிகின்றன.

சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் தேசிய நலன்களுக்கு நம்பகரமாக வகை செய்யும் சோவியத்-இந்திய ஒப்பந்தம் எந்த ஒரு மூன்றாவது நாட்டிற்கும் எதிரானதல்ல. இந்த ஒப்பந்தத்தைப் பற்றிய விமரிசனத்தில் **ஹிந்துஸ்தான் டைம்ஸ்** பத்திரிகை இக்கருத்தை அழகாக

வெளிப்படுத்தியது: ''இந்திய-சோவியத் நட்புறவு யாரையும் அச்சுறுத்தவில்லை, இது எந்த ஒரு அபாயத்தையும் ஏற்படுத்தவில்லை'' * .

மற்ற நாடுகளுடன் சமாதான உறவுகளை வளர்ப்பதில் சோவியத் நாட்டிற்கும் இந்தியாவிற்கும் உள்ள சுதந்திரத்தை ஒப்பந்தம் சிறிது கூட மட்டுப்படுத்தவில்லை. இன்றைய உலகின் மிகக் கடினமான பிரச்சினைகளுக்குத் தீர்வுகளைத் தேடுவதில் பயன்மிகு வகையில் பரஸ்பரம் ஒத்துழைப்பதற்கு இடையூறாக இல்லாத வகையில் சோவியத் யூனியனும் இந்தியாவும் வேறுபட்ட வெளிநாட்டுக் கொள்கை கருத்தமைப்புகளைப் பின்பற்றுவதை இந்த ஒப்பந்தம் அலட்சியப்படுத்தவில்லை. சோவியத்-இந்திய ஒப்பந்தத்தில், இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கைக்கும் சர்வதேச அரங்கில் சோவியத் யூனியனின் கொள்கைக்கும் உயர்வான மதிப்பீடு அளிக்கப்பட்டிருந்தது. ஒப்பந்தத்தின் தனி ஷரத்து ஒன்றில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: ''சோவியத் சோஷலிசக் குடியரசுகளின் யூனியன் இந்தியாவின் கூட்டுச் சேரா கொள்கையை மதிக்கிறது, உலக சமாதானம், பாதுகாப்பை பேணிக் காப்பதிலும் உலகில் பதட்டநிலையைக் குறைப்பதிலும் இக்கொள்கை ஒரு முக்கியக் காரணி என்று மீண்டும் ஊர்ஜிதப்படுத்துகிறது''. மறு புறம், ''எல்லா மக்களுக்கும் இடையிலான நட்புறவையும் ஒத்துழைப்பையும் வலுப்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட சமாதானக் கொள்கையை சோவியத் சோஷலிசக் குடியரசுகளின் யூனியன் பின்பற்றுவதை இந்தியா மதிக்கிறது'' ** என்றும் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சோவியத்-இந்திய ஒப்பந்தம் ஏதோ ''சர்வதேச அரங்கில் இந்தியாவின் சுதந்திரத்தை மட்டுப்படுத்துவதாயும், கூட்டுச் சேரா நாடு என்ற இதன் அந்தஸ்திற்குப் பங்கமேற்படுத்துவதாயும்'' இந்த ஒப்பந்தத்தின் விரோதிகள் கூறிய ''ஆருடங்கள்'' பொய்யானவை என்பதை இரு நாடுகளும் இந்த ஒப்பந்தத்தை சற்றும் பிறழாமல் பின்பற்றி வருவது காட்டியது. வாழ்க்கை வேறு மாதிரியான விஷயங்களை முன்வைத்தது. சமாதானம், நட்புறவு மற்றும்

---

* *Hindustan Times*, December 18, 1971.

** இஸ்வேஸ்தியா, ஆகஸ்ட் *10, 1971.*

ஒத்துழைப்பு ஒப்பந்தம் எனும் உறுதியான அஸ்திவாரத்தின் அடிப்படையில் வலுப்பட்டு வரும் சோவியத்-இந்திய ஒத்துழைப்பு, இந்தியாவின் சமாதான வெளிநாட்டுக் கொள்கை மேலும் தீவிரமடையவும் கூட்டுச் சேரா இயக்கத்தில் இதன் செல்வாக்கு பலப்படவும் உதவுகிறது. *1983*இல் இந்தியா இந்த இயக்கத்தின் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது இச்செல்வாக்கின் வளர்ச்சிக்கு ஒரு நல்ல சான்று. கூட்டுச் சேரா நாடுகளின் மத்தியில் இந்தியாவின் உயர்ந்த செல்வாக்கை அங்கீகரித்து, இதனுடன் உள்ள ஒத்துழைப்பை விரிவுபடுத்தும் கூட்டுச் சேரா இயக்க நாடுகள், சோவியத்-இந்திய ஒப்பந்தம் கூட்டுச் சேரா நாடு என்ற வகையில் இந்தியாவின் நிலையை எவ்விதத் திலும் பாதிக்கவில்லை என்று முழுமையாகப் புரிந்து கொள்கின்றன.

இந்த வரலாற்றுச் சிறப்புள்ள ஆவணத்தின் தயாரிப்பில் தனிப்பட்ட முறையில் பங்கேற்ற இந்திரா காந்தி இந்த ஒப்பந்தத்தைப் பற்றியும் இதன் முக்கியத்துவம் குறித்தும் பின்வரும் துல்லியமான மதிப்பீட்டை தந்தார்: ''நம் மக்கள் சோவியத் யூனியனை நண்பனாகப் பார்க்கின்றனர். எனவேதான் இந்த ஒப்பந்தத்திற்கு நாட்டில் இவ்வளவு பரவலான ஆமோதிப்பு கிட்டியுள்ளது. கூட்டுச் சேரும் அரசியலிலிருந்து தள்ளி நிற்கும் நாம் வேறுபட்ட திசை யமைவுகளையுடைய நாடுகளுடன் நட்பு கொள்ள விழை கின்றோம். சமாதான சகவாழ்வும் சச்சரவுகளைத் தீர்க்கும் சாதனம் என்ற வகையில் யுத்தங்கள் கூடாது என்ற நம்பிக்கையும்தான் நம் கொள்கையின் அடிப்படை கோட் பாடுகளாகும்'' என்று இவர் *1971* ஆகஸ்டு *26*இல் உலக சமாதான கவுன்சிலின் தலைவர் ரமேஷ் சந்திராவிற்கு அளித்த பேட்டியில் குறிப்பிட்டார். ''-நமது கூட்டுச் சேரா கொள்கைக்கு சோவியத் யூனியன் நிபந்தனையற்ற ஆதரவை யும் மதிப்பையும் தெரிவித்துள்ளது. இதைப் பற்றிய கருத்து ஒப்பந்தத்தில் சேர்க்கப்பட்டது... கூட்டுச் சேரா நாடு என்ற வகையில் நம் நிலைக்கு இந்த ஒப்பந்தம் பங்கம் ஏற்படுத்தவில்லை. கூட்டுச் சேரா நாடுகளின் தேசிய நலன்களை இராணுவ அதிசாகச அபாயத்திலிருந்து காக்க வேண்டும். மேலாதிக்கவாதம் அல்லது மோதலைத் தவிர்த்து நீண்ட சமாதானத்திற்கு வகை செய்யும் ஒரு

வழியில் பாதுகாப்பை அடைய வேண்டும். இந்திய-சோவியத் சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் இப்படிப்பட்டது தான்'' *. 1971 அக்டோபர் 9ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் ஆரம்பக் கூட்டத்தில் உரையாற்றுங் காலை இந்திரா காந்தி, இந்தியா ''தன் தேசிய நலன் களுக்கு உகந்தவையாக கருதும்'' வழிகளை ஏற்கும் சுதந் திரத்தை ஒப்பந்தம் மட்டுப்படுத்தவில்லை என்று கூறினார். ''சுயமாக முடிவு செய்யவும் செயல்படவும் உள்ள உரிமையை இந்தியா என்றுமே விட்டுக் கொடுக்காது, ஏனெனில் இது தேசிய அரசுரிமையையே தியாகம் செய்வதற்கு ஒப்பா கும்'' ** என்று இவர் கோடிட்டுக் காட்டினார்.

இந்த ஒப்பந்தத்திற்கு சோவியத் யூனியனிலும் உயர்ந்த மதிப்பும் சர்வபொது ஆதரவும் கிட்டின. 1971 ஆகஸ்டு 11இல் சுப்ரீம் சோவியத்தின் யூனியன் சோவியத் மற்றும் தேசிய இனங்கள் சோவியத்தின் அயல் விவகாரக் கமிஷன் களின் கூட்டுக் கூட்டத்தில் உரையாற்றுங்காலை, அப்போது சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சரின் முதல் துணையமைச்சராக இருந்த வி. வி. குஸ்னெத்சோவ் பின் வருமாறு கூறினார்: ''இன்றைய உலகின் இரு பெரும் அரசுகளாகிய சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலுள்ள நெஞ்சார்ந்த நட்புறவு, நல்லண்டை உறவு கள், பயன்மிகு ஒத்துழைப்பிற்கு இந்த ஒப்பந்தம் ஒப்பந்த வடிவத்தைத் தந்து இவற்றை பலப்படுத்துகிறது. 'மூன்றா வது' நாடுகளுடன் தமக்குள்ள உறவுகளைப் பாதிக்கும் முறையில் தமது நட்புறவை வலுப்படுத்தி, ஒத்துழைப்பை வளர்க்கப் போவதில்லையென சோவியத் யூனியனும் இந் தியாவும் உறுதியோடு அறிவித்துள்ளன. சோவியத்-இந்திய ஒப்பந்தம், சர்வதேச உறவுகளில் முக்கிய ஸ்திரப்படுத் தும் காரணியாகும், இது யுத்தத்திற்கு எதிரான சமாதான ஒப்பந்தமாகத் திகழும்'' ***.

இந்த ஒப்பந்தம் தன் சாரம் முழுவதன் மூலமாக இராணுவ அதிசாகசங்களை விரும்புவர்களுக்கு எதிராக உள்ளது, பரஸ்பர நம்பிக்கை, சமத்துவம், சமாதான

---

* K. Neelkant, *Partners in Peace. A Study of Indo-Soviet Relations*, Delhi, 1972, pp. 119—120.

** *Ibid.*

*** பிராவ்தா, ஆகஸ்ட் 12, 1971.

ஒத்துழைப்பின் அடிப்படையில் சர்வதேச உறவுகளை அமைத்துக் கொள்வதுதான் ஒரே நியாயமான, எதிர்காலப் பாதை என்று உலகம் முழுவதற்கும் காட்டியது என்று சோவியத் சமூக-அரசியல் வட்டங்களில் கருதுகின்றனர்.

சோவியத்-இந்திய ஒப்பந்தம் பற்றி இரு நாடுகளின் பிரபல அரசு, அரசியல் தலைவர்கள் கூறிய கருத்துகளும் தந்த மதிப்பீடுகளும் சரியானவை என்று பின்னர் நடந்த நிகழ்ச்சிகள் மெய்ப்பித்தன. தெற்கு ஆசியாவிலும் உலகின் மற்ற பகுதிகளிலும் சாதாரண சூழ்நிலையிலும் கொந்தளிப்பான சமயங்களிலும், இந்த சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் இதில் பிரகடனப்படுத்தப்பட்டுள்ள லட்சியங்களுக்கு மிகவும் ஏற்ற வகையில் செயல்படுகிறது. இது நம் காலத்தின் அடிப்படை சர்வதேச ஆவணங்களில் உரிமையோடு முக்கிய இடத்தை வகிக்கிறது.

அ. அ. குரோமிகோவின் வார்த்தைகளில் சொன்னால் — சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சர் என்ற முறையில் இவரது கையெழுத்து இந்த ஒப்பந்தத்தில் உள்ளது — ''சோவியத் யூனியனின் விஷயத்திலும் சரி, இந்தியாவின் விஷயத்திலும் சரி, இந்த ஒப்பந்தத்தைக் கவனத்தில் கொள்ளாமல் யாராலும் தம் கொள்கையை தீட்ட முடியாது'' * .

இன்றைய இந்தியத் தலைமையும் சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் நிரந்தர முக்கியத்துவத்தைப் பன்முறை குறிப்பிட்டது. 1985 மே மாதம் தனது சோவியத் பயணத்தின் போது கிரெம்ளினில் பேசுங்காலை இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி, ''1971ஆம் ஆண்டின் சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் நமது ஆழ்ந்த பரஸ்பர மதிப்பை பிரதிபலிக்கிறது, சமாதான லட்சியத்திற்கு சேவை புரிகிறது'' * * என்று குறிப்பிட்டார்.

சோவியத்-இந்திய உறவுகளை பரவலாக வளர்க்கும் கொள்கையை சோவியத் யூனியன் தொடர்ச்சியாகப் பின்பற்றுகிறது. இந்தியக் குடியரசுடனான நெருங்கிய அரசியல், பொருளாதார ஒத்துழைப்பு என்பது நமது நிரந்தரக் கொள்கையாகும் என்று சோவியத் யூனியன்

---

* பிராவ்தா, ஆகஸ்ட் 10, 1971.

* * பிராவ்தா, மே 22, 1985.

கம்யூனிஸ்டுக் கட்சியின் 25வது காங்கிரசில் கோடிட்டுக் காட்டப்பட்டது. சோவியத் மற்றும் இந்திய உயர்மட்ட தலைவர்கள் திட்டமிட்டு, முறையாக பரஸ்பரம் விஜயம் செய்கின்றனர். 1973இல் சோவியத் உயர்மட்ட தூதுக்குழு இந்தியாவிற்கு விஜயம் செய்தது. இது இரு நாடுகளின் வாழ்வில் ஒரு முக்கிய சம்பவமாகும். இப்பயணத்தின் போது கையெழுத்தான கூட்டு பிரகடனத்தில் இரு தரப்பு உறவு களின் வெற்றிகரமான வளர்ச்சி குறித்து இரு தரப்புகளும் ஆழ்ந்த திருப்தி தெரிவித்தன. இப்பிரகடனமும் மொத்தத்தில் பயண முடிவுகளும் நம்மிரு நாடுகளின் மேற்கொண்ட ஒத் துழைப்பிற்கான பாதைகளையும் திசையமைவுகளையும் நிர்ணயித்ததோடு கூட சோவியத்-இந்திய உறவுகள் மேலும் உயர்வான மட்டத்திற்கு வளரவும் வழிகோலின. 1976 ஜூலையில் இந்திரா காந்தி சோவியத் நாட்டிற்கு வருகை தந்தார். இது இந்த உறவுகளின் வளர்ச்சியில் புதிய பங் காக அமைந்தது. சோவியத் தலைவர்களுக்கும் இந்திரா காந்திக்கும் இடையே நட்பு, நம்பிக்கைச் சூழலில், இரு தரப்பு உறவுகள் மற்றும் சர்வதேச பிரச்சினைகள் குறித்து பயன்மிகு காரிய ரீதியான விவாதங்கள் நடைபெற்றன. இவ்விவாதங்கள், இரு தரப்புகளும் இன்னமும் அதிகமாக பரஸ்பரம் புரிந்து கொள்ள உதவின, சர்வதேச அரங்கில் இவற்றின் பரஸ்பர செயலாக்கம் வலுப்பட வழிகோலின. ஏகாதிபத்தியத்தின் மிகுந்த ஆக்கிரமிப்பு குணமுள்ள வட்டங் கள் சர்வதேச உறவுகளில் பதட்ட நிலைத் தணிவிலிருந்து பதட்ட நிலையை ஆபத்தாக அதிகப்படுத்துவதை நோக்கி தயாராகி வந்த ஒரு சூழ்நிலையில் இது கோட்பாட்டு ரீதியான முக்கியத்துவத்தைப் பெற்றது.

சோவியத்—இந்திய உறவுகள் அரசியல் நிலவரத்திற்கு அப்பாற்பட்டவை எனும் அம்சம், இந்தியாவில் ஜனதா கட்சி ஆட்சியிலிருந்த காலகட்டத்தில் (1977 — 1979) நன்கு வெளிப்பட்டது. சோவியத் அயல் விவகாரத் துறை அமைச் சருக்கு இந்தியாவிற்கு வரும்படி அழைப்பு விடுத்தது புதிய அரசாங்கத்தின் முதல் வெளிநாட்டு கொள்கை நடவடிக்கை களில் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. 1977 ஏப்ரலில் அ. அ. குரோமிகோவின் இந்தியப் பயணத்தின் போது, சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு பற்றிய சோவியத்-இந்திய ஒப்பந்தத்தின் அடிப்படையில் இரு நாடுகளுக்கும்

இடையில் உள்ள ஒத்துழைப்பை வளர்த்து, வலுப்படுத்த தயாரென இரு தரப்புகளும் அறிவித்தன. 1977இலும் 1979இலும் இரு நாட்டு உயர்மட்ட தலைவர்களும் மேற் கொண்ட பரஸ்பர விஜயங்களின் போதும் இவ்விஜயங்களின் போது இரு தரப்பு உறவுகள் தொடர்பான பல்வேறு துறைகளிலும் கையெழுத்தான உடன்படிக்கைகளிலும் மேற் கூறிய அம்சம் மேலும் ஊர்ஜிதப்பட்டது.

அதே சமயம் ஜனதா அரசாங்கம் இந்தியாவின் வெளி நாட்டுக் கொள்கையில் குறிப்பிட்ட சில திருத்தங்களைச் செய்தது. இந்தியப் பத்திரிகைகளின் கருத்துப்படி இவை நாட்டு முற்போக்கு வட்டங்களின் மத்தியில் கவலையை ஏற்படுத்தின. கூட்டுச் சேரா கொள்கையைப் பின்பற்றும் போது ஏகாதிபத்திய வல்லரசுகளிடமிருந்தும் சோஷலிச நாடுகளிடமிருந்தும் ''சம அளவில் விலகி நிற்கும்'' கோட் பாட்டை பின்பற்றுவதன் அவசியம் பற்றிய கருத்து ஆளும் கூட்டணியின் செல்வாக்கு மிக்க வட்டங்களின் மத்தியில் பரவியது, ஆனால் இந்தியாவில் இதைப் பலவாறாக மதிப்பிட்டனர். சாராம்சத்தில் இது கூட்டுச் சேரா கொள் கையின் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போக்கை மழுங்கடிப்பதை குறித்தது.

ஜனதா அரசாங்கம் கம்பூச்சிய மக்கள் குடியரசை அங்கீகரிக்காததை முற்போக்கு இந்திய சமூக நலப் பிரமுகர் களும் அரசியல் வட்டங்களும் கண்டித்தனர். ஜனதா அரசாங்கத்தினுள் கூட்டணியின் முக்கிய கட்சிகளுக்கிடையே கூர்மையடைந்து வந்த போராட்டம், சீரிசைவான, ஆக்க பூர்வமான வெளிநாட்டுக் கொள்கையை நடத்துவதை புறவய ரீதியாக சிக்கலாக்கியது, வெளிநாட்டுக் கொள் கையை செயல்படுத்தும் முறையையே பாதித்தது எனும் அம்சம் பெரிதும் குறிப்பிடத்தக்கது.

எனவே 1980ஆம் ஆண்டு நடந்த நாடாளுமன்ற இடைத் தேர்தலில், தீவிரமான, முக்கியமாக தொடர்ச்சியான கூட்டுச் சேரா கொள்கை, வெளிநாட்டுக் கொள்கையில் ''நேருவின் பாரம்பரியத்தைக்'' காத்து, வலுப்படுத்துதல் எனும் கோஷங்கள் ஜனதாவிற்கு எதிராய் நின்ற முக்கிய கட்சியாகிய காங்கிரஸ் (இ) கட்சியின் வேலைத்திட்ட ஆவணங்களில் முக்கிய இடத்தை வகித்ததில் வியப்பேது மில்லை. ''உண்மையான கூட்டுச் சேராமை'' என்ற கொள்கை

இந்தியாவை ''நவீன காலனியாதிக்க, பொருளாதார ஏகாதிபத்திய சக்திகளின் அருகே இட்டுச் சென்றுள்ளது, கடினமான நேரங்களில் எல்லாம் எப்போதும் நம்முடனிருந்த பல நண்பர்களின் ஆதரவையும் ஒருமைப்பாட்டையும் நாம் இழக்கச் செய்துள்ளது''* என்று காங்கிரஸ் (இ) கட்சியின் தேர்தல் அறிக்கையில் கூறப்பட்டிருந்தது. தான் ஆட்சிக்கு வந்தால், தனது அரசாங்கம் கம்பூச்சிய மக்கள் குடியரசுடன் ராஜதந்திர உறவுகளை நிலைநாட்டும் என்று இக்கட்சியின் தேர்தல் அறிக்கை கூறியது.

1980ஆம் ஆண்டு தேர்தல்களில் காங்கிரஸ் (இ) கட்சியின் வெற்றி, நேரு பாரம்பரியத்தின் அடிப்படையிலான இந்திய வெளிநாட்டுக் கொள்கையைத் தீவிரப்படுத்துவதில் ஒரு முக்கியக் காரணியாக விளங்கியது. கூட்டுச் சேரா நாடுகளின் ஒற்றுமைக்காகவும் இந்த இயக்கத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைப் பேணிக் காக்கவும் நடைபெறும் போராட்டத்தில் இந்தியாவின் பங்கை அதிகரிப்பதற்கான அரசியல் முன்தேவைகள் புனர்நாட்டப்பட்டன. 1980 ஜனவரியில் பிரதமர் பதவியை ஏற்ற பின் நிகழ்த்திய முதல் உரைகளில் ஒன்றில் இந்திரா காந்தி, ஜவகர்லால் நேருவால் உருவாக்கப்பட்ட கூட்டுச் சேரா கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு இந்தியா விசுவாசமாய் இருக்குமென ஊர்ஜிதப்படுத்தினார், சமாதானத்தை பலப்படுத்தவும் எல்லா நாடுகளுடனும் தொடர்புகளை வளர்க்கவும் சகல விதங்களிலும் உதவ இந்தியா தயாரென அறிவித்தார்.

''சம அளவில் விலகி நிற்பது'' எனும் கோஷத்தை வைத்து வித்தை காட்டி வந்தவர்களின், ''நேரு கொள்கையை'' வெளிப்படையாகவும் திரைமறைவிலும் எதிர்த்தவர்களின் திட்டங்களை நிராகரித்த இந்திரா காந்தி பின்வருமாறு சுட்டிக் காட்டினார்: ''கூட்டுச் சேராமையை, வல்லரசுகளிடமிருந்து சம அளவில் விலகி நிற்பது என்று சித்தரிக்கச் செய்யப்படும் முயற்சிகள் செல்லாதவையாகும். மாறாக, கூட்டுச் சேராமை என்பது ஒரு ஆக்கபூர்வமான கருத்தமைப்பாகும். சமாதானத்தை பலப்படுத்தி, எந்தப் பிரச்சினைகள் குறித்து நமக்கு உறுதியான நம்பிக்கைகள்

* *National Herald*. December 2, 1979.

உள்ளனவோ அந்தப் பிரச்சினைகளில் திட்டவட்டமான நிலையை மேற்கொள்ள சகலவித வாய்ப்புகளையும் பயன் படுத்த வேண்டும் என்று இதற்குப் பொருளாகும்''*.

இந்திரா அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கை யின் சிறப்பு அம்சங்களில் ஒன்று இந்தியாவுடன் நட்பு கொண்டுள்ள அரசுகளுடன் உள்ள தொடர்புகளை வளர்த்ததாகும். இந்திரா அரசாங்கம் கம்பூச்சிய மக்கள் குடியரசை ராஜதந்திர ரீதியாக அங்கீகரித்ததும், ''ஆப்கானிய மக்களின் ஜனநாயக உரிமைகளைக் காப்பாற்றுவது'' எனும் பெயரால் இந்தியாவை சோவியத் யூனியனுக்கு எதிரான இராணுவ-அரசியல் நடவடிக்கைகளினுள் இழுக்கச் செய்யப்பட்ட முயற்சிகளை உறுதியாக நிராகரித்ததும் இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் இருந்த சமாதான சக்திகளிடையே பரவலான வரவேற்பை பெற்றன. கூட்டுச் சேரா இயக்கத்தில் இந்தியாவின் பங்கு கணிசமாக அதிகரித்தது. இயக்கத்தை பிளவுபடுத்தி, இன்றைய உலகின் முக்கிய பிரச்சினைகளின் தீர்விற்கான போராட்டத்திலிருந்து உறுப்பு நாடுகளின் கவனத்தை திசை திருப்ப ஏகாதிபத்திய சக்திகளும் இதன் கூட்டாளிகளும் செய்யும் முயற்சிகள் வலுத்து வரும் போது இது பெரும் முக்கியத்துவம் வாய்ந்த தாக விளங்கியது. டில்லியில் 1981 பிப்ரவரியில் கூட்டுச் சேரா அரசுகளின் அயல் விவகாரத் துறை அமைச்சகர் களின் மகாநாடும் 1983 மார்ச்சில் கூட்டுச் சேரா நாடுகளின் அரசு, அரசாங்கத் தலைவர்களின் 7வது மகாநாடும் நடை பெற்றதானது கூட்டுச் சேரா இயக்க அரசுகளின் மத்தியில் இந்தியாவின் செல்வாக்கு வளர்ந்து வருவதற்கு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இந்தியாவின் உண்மையான நண்பன் என்ற வகையில் சோவியத் யூனியன் சமாதான நாட்டமுள்ள, சுதந்திர இந்தியாவின் வெற்றிகளைக் கண்டு மனதார மகிழ்கிறது, இந்த மாபெரும் கூட்டுச் சேரா வல்லரசுடன் உள்ள ஒத்துழைப்பை பலப்படுத்துவதில் சமாதானம், மக்களின் பாதுகாப்பு, சுதந்திரத்திற்கான போராட்டத்தில் புதிய சாதனைகளுக்கான அடிப்படையைக் காணுகிறது.

---

* *Speech of Smt. Indira Gandhi, Prime Minister, at the National Convention of Friends of Soviet Union*, New Delhi, May 27, 1981.

## அத்தியாயம் மூன்று

# பூமியில் சமாதானமும் பாதுகாப்பும் ஓங்குவதற்காக

சோவியத்-இந்திய உறவுகளை சோஷலிச நாடுகளுக்கும் விடுதலையடைந்த நாடுகளுக்கும் இடையிலான உறவுகளுக்கு உதாரணமாகக் குறிப்பிடுகின்றனர். இந்த உறவுகள் மிகவும் பரவலானவை, நிலையானவை, மாற்றங்களால் பாதிக்கப் படாதவை. எனவே ''சமாதான நாட்டமுள்ள, சுதந்திர இந்தியாவுடனான பரஸ்பரச் செயலாக்கம் எதிர்காலத்திலும் சோவியத் சமாதானக் கொள்கையின் முக்கியத் திசை யமைவுகளில் ஒன்றாக இருக்கும்''* என்று சோவியத் யூனி யன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26வது காங்கிரசில் கோடிட்டுக் காட்டப்பட்டது நியதியானது.

தேசிய விடுதலை சக்திகளுடன் உள்ள ஒருமைப்பாட்டை வலுப்படுத்த வேண்டுமென்ற சோவியத் அரசின் தொடர்ச்சி யான கொள்கை இதில் உருக் கொண்டுள்ளது. ''இந்தியா வுடன் உள்ள எங்களது தொடர்புகள், ஏகாதிபத்திய ஒடுக்குமுறைக்கு எதிராயும் சுதந்திரத்தை பலப்படுத்து வதற்காகவும் சமூக மலர்ச்சிக்காகவும் மக்கள் நடத்தும் போராட்டத்திற்கு சோவியத் யூனியன் அளிக்கும் கோட்பாட்டு வழிப்பட்ட, இடையறா ஆதரவை பிரதிபலிக்கிறது. இந்தக் கொள்கையை மாபெரும் லெனின் எங்களுக்கு விட்டுச் சென்றார், நாங்கள் இதை புனிதத்தோடு பாதுகாப்போம்''** என்று இதன் தொடர்பாக பி. டி. ஐ. செய்தி நிறுவனத்திற்கு அளித்த பேட்டியில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் பொதுச் செயலாளர் மி. செ. கர்பச் சோவ் அறிவித்தார்.

---

* **சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26வது காங்கிரஸ். ஆவணங் கள்**, *மாஸ்கோ, 1981, பக்கங்கள் 13—14 (ருஷ்ய மொழியில்).*

** **பிராவ்தா**, *மே 20, 1985.*

வேறுபட்ட சமூக-அரசியல் அமைப்புகளைக் கொண்டுள்ளதால் பல பிரச்சினைகளில் சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் கருத்து நிலைகள் ஒத்துப் போகாதது இயல்பே. ஆனால், உலக சமாதானத்தையும் சர்வதேச பாதுகாப்பையும் பலப்படுத்தவும் ஆக்கிரமிப்பு, இராணுவ வெறி, காலனியாதிக்க, நவீன காலனியாதிக்க சக்திகளுக்குப் பதிலடி தரவும் தம் முயற்சிகளை ஒன்றிணைப்பதில் இது தடையாக இல்லை என்று இரு நாடுகளுக்கும் இடையிலான ராஜதந்திர உறவுகளின் நாற்பதாண்டு அனுபவம் ஆணித் தரமாக மெய்ப்பிக்கிறது.

அனுபவம் காட்டும்படி, இரு நாடுகளுக்கும் இடையில் நட்புறவையும் ஒத்துழைப்பையும் வளர்த்து வலுப்படுத்துவது என்பது தன் முக்கியத்துவத்தில் இரு தரப்பு உறவுகளின் வரம்புகளைக் கடந்து செல்கிறது. சர்வதேச உறவுகள் முறை முழுவதிலும் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான ஒத்துழைப்பின் பங்கு பெரிய அளவில், இடையறாது அதிகரித்து வருகிறது என்று கூற எல்லா அடிப்படையும் உள்ளது. உலகின் முதல் சோஷலிச அரசின் வெளிநாட்டுக் கொள்கையும், மிகப் பெரும் கூட்டுச் சேரா நாடும் கூட்டுச் சேரா இயக்கத்தின் பொதுவாக அங்கீகரிக்கப்பட்ட, செல்வாக்குள்ள தலைவனுமாகிய இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும் சமாதான நோக்கத்தைக் கொண்டிருப்பதும், நம் காலத்தின் முக்கிய பிரச்சினைகளை இவை ஆக்கபூர்வமாக அணுகுவதும் இப்பங்கு அதிகரிக்க காரணங்களாகும். ஏகாதிபத்திய வட்டங்களின் ஆக்கிரமிப்புக் கொள்கையினால் உலகில் இன்று பதட்ட நிலை மிகவும் கடுமையாகியுள்ள ஒரு சூழ்நிலையில் இந்த ஒத்துழைப்பை சகல விதங்களிலும் பலப்படுத்துவது மிக முக்கியமானது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான அரசியல் பரஸ்பரச் செயலாக்க வடிவங்கள் பல்வேறு விதமானவை. பரஸ்பரச் செய்திகளின் பரிமாற்றங்கள், இரு நாடுகளின் அரசு, அரசாங்கத் தலைவர்களின் பரஸ்பர விஜயங்கள், அயல் விவகாரத் துறை அமைச்சகங்களுக்கு இடையிலான கலந்தாலோசனைகள், ஐ. நா. சங்கத்திலும் மற்ற சர்வதேச ஸ்தாபனங்களிலும் சோவியத் மற்றும் இந்தியப் பிரதிநிதிகளின் ஒத்துழைப்பு முதலியன இவற்றி

லடங்கும். ஐ. நா. சங்க பொதுச் சபை அமர்வுகளின் போதும், படைக்கலைப்பு பற்றிய மகாநாட்டிலும், இந்துப் பெருங்கடல் சம்பந்தமான ஐ. நா. சங்க விசேஷக் கமிட்டி யிலும், ஐ. நா. சங்க பொருளாதார, சமூக கவுன்சிலிலும் இன்னும் பல சர்வதேச ஸ்தாபனங்களிலும் சோவியத் தூதுக் குழுவும் இந்தியத் தூதுக் குழுவும் நெருக்கமான, பலன்மிகு தொடர்புகளைக் கொண்டுள்ளன.

கடந்த பத்தாண்டில் கிட்டத்தட்ட ஒவ்வொரு ஆண்டும் அரசு அல்லது அரசாங்கத் தலைவர்களின் மட்டத்திலோ, அயல் விவகாரத் துறை அமைச்சர்களின் மட்டத்திலோ சோவியத்-இந்திய சந்திப்புகள் நடைபெற்றுள்ளன.

குறிப்பாக, இரு நாடுகளுக்கு இடையிலான நிலையான உயர்மட்ட தொடர்புகளுக்கு பெரும் முக்கியத்துவம் உண்டு.

1980ஆம் ஆண்டு டிசம்பர் 8 முதல் 11 வரை சோவி யத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் பொதுச் செயலாளரும் சோவியத் ஜனாதிபதியாகவுமிருந்த லி. இ. பிரேஷ்னெவ் இந்தியாவிற்கு விஜயம் செய்தார். இப் பயணத்தின் போது கூட்டு சோவியத்-இந்தியப் பிரகடனம் கையெழுத்தானது. இதில் உலக நிலவரம் சிக்கலடைந்துள்ளது குறித்து கவலை தெரிவிக்கப்பட்டிருந்தது, ''சர்வதேச பதட்ட நிலைத் தணிவை வளர்த்து வலுப்படுத்துவதன்'' முக்கியத்துவம் குறிப்பிடப்பட்டிருந்தது, ஆயுதப் போட்டியை நிறுத்துவதற்கான போராட்டத்தில் ஒத்துழைக்கும் உறுதி ஊர்ஜிதப்படுத்தப்பட்டிருந்தது.

சோவியத் யூனியன் மற்றும் இந்திய மக்களின் அபிலாஷை களையும் சித்தத்தையும் வெளிப்படுத்திய இரு நாட்டுத் தலைவர்களும் சமாதானம், சர்வதேச பாதுகாப்பு, தேசிய சுதந்திரம், ஐ. நா. சங்க விதிமுறைகளில் கூறப்பட்டுள்ள உயர்வான லட்சியங்கள் ஆகியவற்றிற்காகவும் ஏகாதிபத் தியம், காலனியாதிக்கம், நவீன காலனியாதிக்கம், நிறவெறி, இனப் பாகுபாடு ஆகியவற்றின் சகலவித வெளிப்பாடு களுக்கு எதிராயும் அயராது போராடுவோமென பிரகடனத் தில் உறுதி கூறினார்கள்.

பாரசீக வளைகுடா பிரதேசத்தில் சமாதானமான, அமைதியான நிலவரத்தை ஏற்படுத்துவதற்காக இப்பயணத் தின் போது சோவியத் அரசுத் தலைவர் வெளியிட்ட முன்மொழிவுகளுக்கு ஆசிய நாடுகளில் பரவலான வரவேற்பு

இருந்தது. இங்கே இராணுவத் தளங்களை ஏற்படுத்தக் கூடாது, அணு ஆயுதத்தையோ வேறெந்த பேரழிவு ஆயுதத்தையோ இங்கு வைக்கக் கூடாது, பலத்தைப் பயன்படுத்தக் கூடாது, இவ்வாறு பயன்படுத்தப் போவதாக பிரதேச நாடுகளை அச்சுறுத்தக் கூடாது, இவற்றின் உள்விவகாரங்களில் தலையிடக் கூடாது, இவை தேர்ந்தெடுத்த கூட்டுச்சேரா நிலையை மதிக்க வேண்டும், அணு ஆயுத வல்லரசுகள் பங்கேற்கும் இராணுவக் கூட்டுகளின் உள்ளே இவற்றை இழுக்கக் கூடாது, தம் இயற்கைச் செல்வங்களைப் பயன்படுத்த இவற்றிற்கு உள்ள சுய உரிமையை மதிக்க வேண்டும், வர்த்தகப் பரிமாற்றத்திற்கும் மற்ற நாடுகளுடன் இணைக்கும் கடல் வழிகளைப் பயன்படுத்தவும் இடையூறாக இருக்கக் கூடாது ஆகியவற்றைப் பற்றி குறிப்பிடப்பட்டது.

இப்படிப்பட்ட அணுகுமுறை, நம் பூமியின் கொந்தளிப்பு மிக்க இடங்களில் ஒன்றில் நிலையான, நியாயமான சமாதானத்திற்கு வழிகோலும். இது, பாரசீக வளைகுடா பிரதேசத்தின் விஷயத்தில் சமாதான விரோத சக்திகள் பின்பற்றும் ஆக்கிரமிப்பு, மிரட்டல் கொள்கைக்கு முற்றிலும் மாறானது.

பிரபல சர்வதேச நிபுணரும் ராஜதந்திரியுமான ஏ. கே. தாமோதரன், மேற்கூறிய ஆக்கிரமிப்புக் கொள்கை இந்தியாவிற்கும் மற்ற சமாதான நாடுகளுக்கும் ஆபத்தானது என்றும் இப்படிப்பட்ட சூழ்நிலையில் பாரசீக வளைகுடா பிரதேசத்தில் நிலவரத்தை சீர்படுத்த செயல்முனைப்பான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் சுட்டிக் காட்டுகிறார். 1981 டிசம்பர் 7—9இல் சர்வதேச பிரச்சினைகள் குறித்து டில்லியில் நடைபெற்ற இந்திய-சோவியத் கருத்தரங்கில் உரையாற்றுங்காலை இவர் பின்வருமாறு கூறினார்: “நமக்கு நல்லது செய்ய விரும்பாத நாடுகள், எரிசக்தி நெருக்கடியோடு எவ்வித சம்பந்தமும் இல்லாத கருத்துகளின் அடிப்படையில், பிரதேசத்தை இராணுவ மயப் படுத்துதல் எனும் முற்றிலும் தேவையில்லாத் திட்டத்தை நிறைவேற்ற இப்பிரச்சினையை ஒரு சாக்காகப் பயன் படுத்துகின்றன. பாகிஸ்தானுக்கு நவீன அமெரிக்க ஆயுதங் களின் சப்ளை பெரிதும் அதிகரித்ததால் தெற்காசிய துணைக் கண்டத்திலும் இது நேரடியான விளைவுகளை ஏற்படுத்தியது. மேலைய வல்லரசுகள் இப்பிரதேசம் பூராவும்

வெறிபிடித்த வகையில் தளங்களைத் தேடியலைவதானது சோவியத் யூனியனுக்கு புதிய அபாயத்தை ஏற்படுத்தக் கூடும், ஏனெனில் இதன் எல்லைகளுக்கு நேரடியாக அருகிலுள்ள பிரதேசத்தில் இது நடக்கிறது''*. ''இந்த தீய விளைவுகளின் காரணமாகத்தான் நாம் (அதாவது இந்தியாவும் சோவியத் யூனியனும். —ஆ-ர்.) நிலவரத்தை ஸ்திரப்படுத்தவும் முடிந்தால் பிரதேசத்தை இராணுவக் கலைப்பிற்கு உள்ளாக்கவும் பாரசீக வளைகுடா பிரதேசத்திற்கு உத்திரவாதமான பாதுகாப்பை ஏற்படுத்தவும் ராஜதந்திர நடவடிக்கைகளை அதிகப்படுத்துவதில் சமமான அளவு அக்கறை கொண்டுள்ளோம்''** என்ற முடிவிற்கு ஏ. கே. தாமோதரன் வருகிறார்.

1982 செப்டெம்பரில் சோவியத் யூனியனுக்கு இந்திரா காந்தி அதிகார பூர்வமான, நட்பு ரீதியான பயணம் மேற்கொண்டார். சோவியத்-இந்திய உறவுகளின் வளர்ச்சியில் இது நல்ல பங்காற்றியது. நல்லெண்ணத்தை வெளிப்படுத்தி, பரஸ்பர நலன்களை நடைமுறையில் கணக்கில் கொண்டால், வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய அரசுகளுக்கு இடையிலான ஒத்துழைப்பு எப்படி பயன்மிக்கதாயும் உறுதியானதாயும் இருக்கும் என்பதற்கு சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நட்புறவின் வளர்ச்சி நல்ல ஒரு எடுத்துக்காட்டாகும் என்று சோவியத் தரப்பில் மீண்டுமொரு முறை கோடிட்டுக் காட்டப்பட்டது. இப்பயணத்தின் போது கையெழுத்தான கூட்டு சோவியத்-இந்திய பிரகடனத்தில், ''இரு நாடுகளின் நலன்களுக்காகவும் உலக அமைதிக்காகவும், சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு பற்றிய ஒப்பந்தத்தால் ஊர்ஜிதப்படுத்தப்பட்ட நட்புறவுகளை அயராது வளர்த்து வலுப்படுத்த''*** சோவியத் யூனியனும் இந்தியாவும் உறுதி பூண்டுள்ளதாக குறிப்பிடப்பட்டது.

இந்திரா காந்தியின் சோவியத் பயணம், நம் இரு

---

* A. K. Damodaran, "The Situation in South-West Asia. Arab-Israeli Dispute and Demand for Energy Source Materials from Gulf Area, Indian Ocean". *Indo-Soviet Seminar on International Affairs*, New Delhi, December 7—9, 1981, p. 11.

** *Ibid.*, p. 12.

*** பிராவ்தா, செப்டெம்பர் 22, 1982.

நாடுகளுக்கும் இடையிலான அரசியல் ஒத்துழைப்பை வளர்த்து விரிவாக்குவதன் கோட்பாட்டு ரீதியான முக்கியத் துவத்தை இன்னுமொரு முறை மெய்ப்பித்தது.

முறையாக நடக்கும் சோவியத்-இந்திய உயர்மட்ட சந்திப்புகள், இரு நாடுகளுக்கும் இடையிலான பன்முக உறவுகளின் முக்கியமான, பிரிக்க இயலா அங்கமாகும். இது ஒரு நிலைபெற்ற பாரம்பரியமாக மாறியுள்ள அம்சம், இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவு, ஒத்துழைப்பின் வளர்ச்சியின் சீரிசைவான தன்மைக்கு சான்று பகர்கிறது. அதே சமயம் சோவியத், இந்தியத் தலைவர்களுக்கு இடையிலான ஒவ்வொரு சந்திப்பும் சோவியத்-இந்திய உறவுகளின் ஸ்திர நிலையை அதிகப்படுத்தவும் இந்த உறவுகள் முழுவதையும் முன்னுக்கு இட்டுச் செல்லவும் உதவுகிறது. இச்சந்திப்புகளின் போது இதுவரை செய்த வேலைகள் பரிசீலிக்கப் படுகின்றன, இரு தரப்பு தொடர்புகள் மற்றும் பரஸ்பர அக்கறையுள்ள முக்கிய சர்வதேச பிரச்சினைகள் குறித்து கருத்துகள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. சாதாரணமாக, பயணங்களின் இறுதியில் முக்கிய உடன்படிக்கைகளும் கூட்டறிக்கைகளும் கையெழுத்தாகின்றன. இவை ஒத்துழைப்பின் எதிர்காலத் திசைகளையும் வடிவங்களையும் நிர்ணயிக்கின்றன.

மனமார்ந்த பரஸ்பர நட்புறவு, நம் நாடுகளின் சமாதான விருப்பம், மனித குலத்தின் எதிர்காலத்திற்கு தாம் எவ்வளவு பொறுப்பு வாய்ந்தவர்கள் என்பதைப் பற்றிய ஆழ்ந்த உணர்வு முதலியன 1985 மே 21 – 26இல் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி சோவியத் யூனியனுக்கு வருகை தந்த போது நன்கு வெளிப்பட்டன. சோவியத் பூமியில் ராஜீவ் காந்திக்கு அளிக்கப்பட்ட மிகவும் அன்பான, மனமார்ந்த வரவேற்பு, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான தொடர்புகளின் நிலையான வளர்ச்சிக்கு இரு அரசுகளுக்கு இடையிலான உறவுகளின் உறுதி மட்டுமின்றி இந்திய மக்களின் பால் சோவியத் மக்களின் மனதின் அடியாழத்தில் வேரூன்றியுள்ள நட்புறவும் பரிவும் காரணங்களாகும் என்று தெட்டத் தெளிவாக மெய்ப்பித்தது. இந்தியப் பிரதமர் தான் பதவியேற்ற பின் மேற்கொண்ட முதல் வெளிநாட்டுப் பயணம் சோவியத் பயணம் தான். சோவியத் யூனியனுடன் உள்ள நட்புறவுகளை

வளர்த்து வலுப்படுத்த இந்தியத் தலைமை எவ்வளவு முக்கியத்துவம் தருகிறது என்பதற்கான அறிகுறியாக பல விமரிசகர்கள் இந்த அம்சத்தை மதிப்பிட்டனர். இந்த உறவுகளை வளர்த்து வலுப்படுத்துவது என்பது இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் முக்கிய அடிப்படை திசை யமைவுகளில் ஒன்றாகும். பிரதமர் ராஜீவ் காந்தி தன் முதல் வேலைத்திட்ட உரைகளில் ஒன்றில் சோவியத்-இந்திய உறவுகளின் முக்கியத்துவம் குறித்து பின்வருமாறு குறிப்பிட் டார்: ''சோவியத் யூனியனுடனான உறவுகளை நாங்கள் உயர்வாக மதிக்கின்றோம். இந்த உறவுகள் பரவலானவை, காலத்தால் சோதிக்கப்பட்டவை, இவை பரஸ்பர ஒத் துழைப்பு, நட்புறவு, மிகவும் அவசியமான சந்தர்ப்பங்களில் ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த ஆதரவு ஆகியவற்றின் அடிப்படையிலானவை'' * .

ராஜீவ் காந்தி சோவியத் யூனியனுக்கு மேற்கொண்ட அதிகாரப் பூர்வமான, நட்பு ரீதியான விஜயம், இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவையும் ஒத்துழைப் பையும் வலுப்படுத்துவது, ஆசியாவிலும் உலகின் மற்ற பகுதிகளிலும் சமாதானத்தையும் பாதுகாப்பையும் பலப் படுத்துவதற்கான பொது முயற்சிகளில் முக்கியப் பங் காற்றுகிறது என்பதை மீண்டும் நன்கு பறைசாற்றியது.

அணு ஆயுதப் பேரழிவைத் தடுப்பதிலும், ஆயுதப் போட் டியை, குறிப்பாக அணு ஆயுதப் போட்டியை நிறுத்துவதிலும் இதை விண்வெளிக்கு எடுத்துச் செல்லாமல் இருப்பதிலும் (இதனால் மனிதகுல நாகரிகம் முழுமைக்குமே சீர்செய்ய முடியாத தீய விளைவுகள் ஏற்படும்) சோவியத் யூனியனும் இந்தியாவும் ஆழ்ந்த அக்கறை கொண்டுள்ளன. பிரதமர் ராஜீவ் காந்தியின் பயணத்தின் போது கிரெம்ளினில் உரையாற்றுங்காலை சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் பொதுச் செயலாளர் மி. செ. கர்பச் சோவ், விண்வெளியை இராணுவமயமாக்காது இருக்கும் பிரச்சினை எல்லா மக்களின் பிரச்சினையாகும் என்று குறிப்பிட்டார். ''காலம் கடந்து விடும் முன், சாந்தப்படுத் தும் அறிக்கைகளின் போர்வையில், திருத்தவே முடியாத நிலவரம் ஏற்படும் முன் இந்தப் புதிய அபாயத்திற்கு எதி

---

* *Indian and Foreign Review*, November 30, 1984, p 13

ராக எல்லா சமாதான அரசுகளும் தம் குரலை எழுப்ப வேண்டுமென எங்களுக்குத் தோன்றுகிறது''* என்று சோவியத் தலைவர் கோடிட்டுக் காட்டினார்.

1985 ஜனவரியில் டில்லியில் நடைபெற்ற ஆறு நாட்டு தலைவர்களின் கூட்டத்தில் கலந்து கொண்ட அர்ஜென்டீனா, கிரீஸ், ஸ்வீடன், டான்சானியா, இந்தியா மற்றும் மெக்சிக்கோ ஆகிய நாடுகளின் அரசு, அரசாங்கத் தலைவர்கள் ஆயுதப் போட்டிக்கு எதிராயும் விண்வெளியை இராணுவமயப்படுத்துவதற்கு எதிராயும் செயல்முனைப்பான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமெனக் கோரினர். இதில் இந்தியா முக்கியப் பங்காற்றியது. டில்லியில் ஏற்கப்பட்ட பிரகடனத்தின் முக்கியக் கருத்துநிலைகள் சோவியத் சமாதான முன்முயற்சிகளை ஒத்திருக்கின்றன. ''அணு ஆயுதங்கள் மற்றும் இவற்றை ஏந்திச் செல்லும் சாதனங்களின் சோதனை, உற்பத்தி மற்றும் இவற்றைக் கொண்டு வந்து வைப்பதை முழுமையாகக் கைவிடுமாறு நாங்கள் விடுத்த அறைகூவலை ஊர்ஜிதப்படுத்துகின்றோம்... விண்வெளிப் பரப்பிற்கு ஆயுதப் போட்டியை எடுத்துச் செல்லாமலிருப்பது, சோதனைகளைத் தடை செய்வது பற்றிய சர்வாம்ச ஒப்பந்தம் செய்து கொள்வது எனும் இரண்டு திட்டவட்டமான நடவடிக்கைகளின் மீது விசேஷ கவனம் செலுத்தப்பட வேண்டும்''** என்று பிரகடனத்தில் கூறப்பட்டுள்ளது.

''விண்வெளிப் பரப்பிற்கு ஆயுதப் போட்டியை எடுத்துச் செல்லாமலிருப்பது'' பற்றி ஐ. நா. சங்க பொதுச் சபையின் 40வது அமர்வில் ஏற்கப்பட்ட தீர்மானத்தை தயாரிப்பதில் மற்ற கூட்டுச் சேரா நாடுகளுடன் சேர்ந்து இந்தியாவும் பெரும் பங்காற்றியது. விண்வெளி ஆராய்ச்சியும் இதைப் பயன்படுத்துவதும் எல்லா மக்களின் முன்னேற்றத்திற்கும் மனிதகுலத்தின் முன் உள்ள உலகளாவிய பிரச்சினைகளின் (பொருளாதாரப் பின்தங்கலை அகற்றும் பிரச்சினை உட்பட) தீர்விற்கும் அதிகபட்சம் பயன் தர வேண்டும் என்று நம்மிரு நாடுகளும் பெரிதும் விரும்புகின்றன. விண்வெளியை ஆபத்தான இராணுவ அபாயத்திலிருந்து காப்பாற்றுவது

---

* பிராவ்தா, மே 22, 1985.

** *India News*, Embassy of India, Moscow, January 29, 1985, pp. 2—3.

என்றால் நாளைய தினத்தில், அமைதியான எதிர்காலத்தில் மக்களுக்கு உள்ள நம்பிக்கையைப் பலப்படுத்துவதாகும் — இதுதான் சோவியத் யூனியன், இந்தியா, மற்ற எல்லா உண்மையான சமாதான சக்திகளின் உறுதியான கருத்தாகும்.

ஆயுதப் போட்டியை உறுதியோடு எதிர்க்கும் சோவியத் யூனியனும் இந்தியாவும் சர்வதேச நிலவரத்தை பதட்ட நிலைத் தணிவை நோக்கித் திருப்ப முற்றிலுமாக பாடுபடுகின்றன என்பதை வேறு சில உண்மைகளும் நன்கு மெய்ப்பிக்கின்றன. தான் முதலாவதாக அணு ஆயுதத்தைப் பயன்படுத்துவதில்லை என்ற சோவியத் யூனியனின் அறிக்கையை இந்தியா வரவேற்றது. அணு ஆயுதத்தைப் பயன்படுத்துவது அல்லது பயன்படுத்துவதாக அச்சுறுத்துவது என்பதை முழுமையாக, இறுதியாக ஒழித்துக் கட்டும் பாதையில் இது ஒரு முக்கிய நடவடிக்கை என்று இந்தியா இதை மதிப்பிட்டது. அணு ஆயுதம் வைத்திருக்கும் எல்லா அரசுகளும் இப்படிப்பட்ட உறுதிமொழியை மேற்கொண்டால் அது உலக நிலவரத்தை சீர்படுத்துவதில் பெரும் பங்காற்றும். சர்வதேச வாழ்வின் மற்ற கடுமையான பிரச்சினைகளை ஆராய்வதற்கு உறுதியான அடித்தளம் கிடைத்திருக்கும்.

அணு ஆயுதம் வைத்திருக்கும் எல்லா வல்லரசுகளின் பங்கேற்போடு, அணு ஆயுதத்தைப் பயன்படுத்துவதை தடை செய்யும் உடன்பாட்டை உருவாக்குவதற்கான பேச்சுவார்த்தைகளில் இறங்கலாம் என்ற இந்திய முன்மொழிவை சோவியத் யூனியன் ஆதரிக்கிறது.

சோவியத் யூனியனும் இந்தியாவும் கூறும் முன்மொழிவுகள் உண்மையான ஆக்க பூர்வமான செயல் திட்டமாகும். இதைச் செயல்படுத்தினால் அது அணு ஆயுத அபாயத்தை அகற்ற உதவும். உலகந்தழுவிய அளவில் அணு ஆயுதங்களை முடக்கி பின் அணு ஆயுதப் படைத்தளவாடங்களை கணிசமான அளவு குறைப்பது பற்றிய இரு நாடுகளின் முன்மொழிவு இதைத்தான் நோக்கமாகக் கொண்டதாகும். இந்த முன்மொழிவு 1985 மே 27ஆம் தேதி வெளியான சோவியத்-இந்திய கூட்டறிக்கையில் கூறப்பட்டிருந்தது. சகலவித அணு ஆயுத சோதனைகளையும் உடனடியாக நிறுத்தி, அணு ஆயுத சோதனை

களை முழுமையாக தடை செய்யும் ஒப்பந்தத்தை தாமத மின்றி செய்து கொண்டால் (இதற்காகத்தான் சோவியத் யூனியனும் இந்தியாவும் பாடுபடுகின்றன) உலக அமைதிக் கும் பாதுகாப்பிற்கும் நல்ல ஆதாயம் ஏற்படாதா என்ன? எந்த நாடுகள் அணு ஆயுதத்தை தயாரிப்பதை கைவிட்டு, இதை வாங்காமல், இதைத் தம் நாடுகளின் பரப்பில் வைக்காமல் இருக்கின்றனவோ அந்த நாடுகளுக்கு எதிராக சோவியத் யூனியன் அணு ஆயுதத்தை என்றுமே பயன்படுத் தாது என்ற சோவியத் உறுதிமொழியில் மக்களை அணு ஆயுத யுத்தத்திலிருந்து காப்பாற்றும் நாட்டம் ஊடுருவி யுள்ளது. இந்த உறுதிமொழிக்கு சர்வதேச உடன்படிக்கையின் வடிவத்தைத் தர சோவியத் யூனியன் தயார்.

நம் காலத்தின் மிக முக்கிய பிரச்சினையாகிய அணு ஆயுதப் பேரழிவைத் தடுக்கும் பிரச்சினையில் சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் செயல்முனைப்பான நடவடிக் கையில், சர்வதேச நிலவரத்தைப் பற்றிய ஆழ்ந்த கருத்து பிரதிபலிக்கிறது. இன்று, விண்வெளிப் பரப்பைக் கூட ஏகாதிபத்திய வட்டங்கள் அணு ஆயுதப் பூசலின் அரங்காக மாற்றும் போது, சமாதானத்தைப் பேணிக் காப்பதை விட, மனிதனின் முதல் உரிமையாகிய வாழும் உரிமைக்கு வகை செய்வதை விட வேறு முக்கிய, அதிக பொறுப்புள்ள கடமை கிடையாது. ''இன்று சமாதானம் இல்லாவிடில் நாளை வாழ்க்கையே இருக்காது''* என்று ஐ. நா. சங்கத் தில் உரையாற்றுங்காலை இந்திரா காந்தி சிறப்பாகக் குறிப்பிட்டார். ஏனெனில் இப்பிரச்சினை இன்றைய தலை முறைகளை மட்டுமின்றி அடுத்து வரும் தலைமுறைகளையும், மனித நாகரிகத்தின் எதிர்காலத்தையும் பொறுத்தது.

சமாதானத்தை பலப்படுத்துவதிலும் சுமையான ஆயுதப் போட்டியை நிறுத்துவதிலும் நம்மிரு அரசுகளும் உண்மை யான அக்கறை கொண்டுள்ளதற்கு வேறொரு காரணமும் உண்டு. அதாவது இப்போட்டியை நிறுத்துவதால் கிடைக்கும் நிதிகளை சமூக-பொருளாதார வளர்ச்சிக்கும் பட்டினி மற்றும் நோய்நொடிகளைத் தீர்ப்பதற்கும், உலகில் (குறிப் பாக வளர்முக நாடுகளில்) வறுமை மற்றும் கல்வியறிவின் மையை அகற்றவும் பயன்படுத்தலாம். இந்த ஆயுதப் போட்

* *India News*, Embassy of India, Moscow, December 5, 1983

டிக்காக உண்மையிலேயே பிரம்மாண்டமான தொகைகள் செலவாகின்றன: உலகில் ஆண்டு இராணுவச் செலவீனங்கள் கிட்டத்தட்ட வளர்முக அரசுகளின் மொத்த வெளிக் கடனுக்கு (இது டிரில்லியன் டாலர்களுக்கும் கூடுதலானது) சமமாகும். ஒவ்வொரு நிமிடமும் உலகில் இராணுவத் தேவைகளுக்காக 15 லட்சம் டாலர்களுக்கும் கூடுதலாகச் செலவாகிறது.

ஐ. நா. சங்கத்திலும் மற்ற சர்வதேச ஸ்தாபனங்களிலும் சோவியத்-இந்திய ஒத்துழைப்பு அதிகரித்து வருவதற்கு சோவியத் யூனியனில் பெரும் முக்கியத்துவம் தருகின்றனர்.

உதாரணமாக, 1983இல் நடைபெற்ற ஐ. நா. சங்கப் பொதுச் சபையின் 38வது அமர்வில், சோவியத் யூனியனின் முக்கிய முன்மொழிவுகளையும் சோவியத் யூனியன், மற்ற சோஷலிச நாடுகளின் திட்ட நகல்களுக்கேற்ப நிறை வேற்றப்பட்ட பெரும்பலான தீர்மானங்களையும் இந்தியா ஆதரித்தது. அணு ஆயுத யுத்தத்தை மனித மனசாட்சிக்கும் பகுத்தறிவிற்கும் விரோதமானதாக, மக்களினங்களுக்கு எதிரான மிகக் கொடிய குற்றமாக அறிவித்து கண்டிக்கும் தீர்மானத்திற்கு (இதை சோவியத் யூனியனும் மற்ற சில நாடுகளும் முன்மொழிந்தன) ஆதரவாக இந்தியா வாக் களித்தது. தன் பங்கிற்கு சோவியத் யூனியன், இந்தியாவின் முன்முயற்சிக்கேற்ப அல்லது அதன் பங்கேற்போடு உருவாக்கப் பட்டு முன்வைக்கப்பட்ட படைக்கலைப்பு சம்பந்தமான பத்து தீர்மானங்களுக்கும் ஆதரவளித்தது.

1984இல் நடந்த ஐ. நா. சங்கப் பொதுச் சபையின் 39வது அமர்வில் சோவியத் யூனியன் ''அணு ஆயுத யுத் தத்தின் பருவநிலை விளைவுகள்: 'அணு ஆயுதப் பனிக் காலம்' '', ''அணு ஆயுத யுத்தத்தை தவிர்த்தல்'', ''அணு ஆயுதங்களை முடக்குதல்'' ''அணு ஆயுதத்தைப் பயன்படுத்து வதைத் தடை செய்யும் உடன்பாடு'' முதலிய தீர்மானங் களுக்கு (இவற்றை இந்தியா தானாகவோ, மற்ற நாடு களுடன் சேர்ந்தோ முன்மொழிந்தது) ஆதரவளித்தது. சோவியத் நாடு தனியாகவோ, மற்ற நாடுகளுடன் சேர்ந் தோ முன்மொழிந்து இந்தியா ஆதரித்த தீர்மானங்களில், ''புதிய பேரழிவு ஆயுதங்களையும் புதிய இத்தகைய ஆயுத முறைகளையும் உருவாக்குவதையும் உற்பத்தி செய்வதையும் தடை செய்யும் தீர்மானம்'' குறிப்பிடத்தக்கதாகும்.

சமாதானத்திற்கான போராட்டத்தில் நாடுகளின் அளவுகள், அரசியல் முறைகள் எப்படியிருந்தாலும் எல்லா சமாதான அரசுகளின் ஒருமைப்பாடும் ஒத்துழைப்பும் முன் எப்போதும் விட இன்று அதிகமாகத் தேவைப்படுகின்றன.

இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் பேரழிவு ஆயுதங்களை முழுமையாக ஒழித்துக் கட்டுவது பற்றி சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் பொதுச் செயலாளர் மி. செ. கார்பச்சோவ் 1986 ஜனவரி 15இல் தன் அறிக்கையில் முன்வைத்த செயல்திட்டம் சமாதான சக்திகளின் போராட்டத்தில் ஒரு பெரும் மைல் கல்லாகும். தன் முக்கியத்துவத்திலும் அளவிலும் வரலாற்றுச் சிறப்புடைய இந்தச் செயல்திட்டத்தை நிறைவேற்றினால் அது மனிதகுலத்தின் . முன் மிகப்பெரும் வாய்ப்புகளை ஏற்படுத்தும். இதனால் வளர்முக நாடுகளும் பெரும் ஆதாயமடையும் என்பதில் சந்தேகமில்லை. சமாதானத்திலும் நம்பகரமான பாதுகாப்பிலும் இந்நாடுகள் மற்றவற்றிற்கு சற்றும் குறையா அக்கறை கொண்டிருப்பது மட்டும் இதற்கு காரணமல்ல. இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் பேரழிவு ஆயுதங்களை ஒழித்து கட்டும் சர்வாம்ச செயல்திட்டத்தின் நிறைவேற்றம், வளர்முக நாடுகளின் முன் நிற்கும் சமூக-பொருளாதார வளர்ச்சிக் கடமைகளின் நிறைவேற்றத்திற்கு அவசியமான பிரம்மாண்டமான மூல ஊற்றுகளுக்கு வழிகோலும்.

சோவியத் யூனியன் தான் முன்வைத்துள்ள செயல்திட்டத்தை, பல ஆண்டுகளுக்கு தன் வெளிநாட்டுக் கொள்கையின் மைய, தீர்மானகரமான போக்காகக் கருதி இதை நிறைவேற்ற அயராது பாடுபடும்.

1986 பிப்ரவரி 25 முதல் மார்ச் 6 வரை மாஸ்கோவில் நடைபெற்ற சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 27வது காங்கிரசில் இதைப் பற்றி திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டது. இன்றைய மற்றும் எதிர்கால சந்ததியினருக்கான உறுதியான, நம்பகரமான சமாதானத்திற்காகப் போராடுமாறு, எல்லா மக்களுக்கும் அரசுகளுக்கும் இக்காங்கிரஸ் அறைகூவல் விடுத்தது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 27வது காங்கிரஸ் சுட்டிக் காட்டிய சமாதானப் பாதையை இந்திய மக்கள் உட்பட சமாதானத்தை விரும்பும் உலக மக்கள் அனைவரும் மனதார வரவேற்றனர். யாருக்கெல்லாம் சமாதனம் முக்கியமோ அவர்களின்

உறுதியான முயற்சிகள் மட்டுமே பதட்ட நிலைத் தணிவை அடையவும் பதட்ட நிலையின் பிறப்பிடங்களை அகற்றவும் புதிய பதட்ட நிலைப் பிறப்பிடங்கள் தோன்றாது தடுக்கவும் உதவும். எல்லா அரசுகளும் — சிறிய, பெரிய, வளர்ச்சி யடைந்த, வளர்முக — யதார்த்தமான தீர்வுகளைத் தேடுவதில் பங்கேற்க வேண்டும், இத்தீர்வுகள் ஆயுதப் போட்டியை நிறுத்தி உலகில் பதட்ட நிலையைக் குறைக்கும் என்ற உறுதியான நம்பிக்கையின் அடிப்படையில்தான் சோவியத் யூனியனும் இந்தியாவும் சர்வதேச அரங்கில் செயல்படு கின்றன. ஐ. நா. சங்கப் பொதுச் சபையின் அமர்வுகளில் சோவியத் யூனியனும் இந்தியாவும் சமாதானம், படைக் கலைப்பிற்கான போராட்டத்தின் செயல்வன்மையை அதிகப் படுத்துவதை நோக்கமாகக் கொண்ட பல உலக நடவடிக்கை களுக்கு இடையறா ஆதரவளிக்கின்றன.

சோவியத்-இந்திய உறவுகள் வலுவடைந்து வருவதன் பெரும் சர்வதேச முக்கியத்துவத்தின் ''இரகசியம்'' பின்வரும் அம்சத்தில் அடங்கியுள்ளது: இரு நாடுகளும் தமது உதா ரணத்தின் மூலம் சர்வதேச உறவுகளில் சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகள் நிலை பெறவும் நாடுகளுக்கும் இடை யிலான சமாதானமான, பரஸ்பர அனுகூலமுள்ள ஒத் துழைப்பு வளரவும் உதவுகின்றன என்பதுதான் இந்த ''இரகசியம்'' ஆகும். நம் பூமியின் நிலவரம் எவ்வளவு சிக்கலானதாயும் பதட்டமானதாயும் இருந்தாலும், பலத்தை பயன்படுத்தாமல், இவ்வாறு பயன்படுத்துவதாக அச்சுறுத் தாமல், அரசியல் வழிகளில், பேச்சுவார்த்தைகளின் மூலம் தீர்க்கப்பட முடியாத பிரச்சினைகளே கிடையாதென சோவியத் யூனியனும் இந்தியாவும் உறுதியாக நம்புகின்றன. இந்த நோக்கில், ஐ. நா. சங்கப் பொதுச் சபையின் 39 அமர் வில் இந்தியத் தூதுக்குழுவின் தலைவர் ஆர். என். மிர்தா வின் உரை குறிப்பிடத்தக்கது. ''பிறர் விவகாரங்களில் தலையிடுதல் மற்றும் ஆக்கிரமித்தல், பலத்தைப் பயன் படுத்துதல் அல்லது அவ்வாறு பயன்படுத்துவதாக அச்சுறுத்து தல் அல்லது ஒரு வாழ்க்கை முறை அல்லது நிர்வாக அமைப்பைத் திணிப்பது முதலியவற்றின் அடிப்படையிலான நிலையற்ற கொள்கையைக் கொண்டு சமாதானம், ஸ்திர நிலை, முன்னேற்றத்தை அடைய முடியாது'' என்று இவர் குறிப்பிட்டார். இந்த கருத்துநிலை, பிரதமர் ராஜீவ் காந்தி

யின் சோவியத் பயணத்திற்குப் பின் வெளியான கூட்டு சோவியத்-இந்திய அறிக்கையில் நன்கு ஊர்ஜிதப்படுத்தப் பட்டது. ''சுயமான அரசுகளின் உள்விவகாரங்களில் இராணுவ மற்றும் சகலவித வெளித் தலையீடுகளையும் நிறுத்துதல், பொறுமையைக் கடைப்பிடித்தல், இராணுவ நடமாட்டத்தை அகற்றுதல், குறிப்பாக இராணுவத் தளங்களை அகற்று தல் முதலியன ஆசியாவிலும் உலகின் மற்றப் பகுதி களிலும் சமாதானத்தையும் ஸ்திர நிலையையும் வலுப் படுத்துவதற்கான முக்கிய முன்தேவைகளாகும்'' * என்று அக்கூட்டறிக்கையில் கூறப்பட்டிருந்தது. ''அரசு பயங்கர வாதக் கொள்கையையும் மற்ற சுயமான அரசுகளின் சமூக-அரசியல் அமைப்பைக் குலைப்பதை நோக்கமாகக் கொண்ட சகலவித நடவடிக்கைகளையும் அனுமதிக்கக் கூடாது'' என்பது பற்றிய தீர்மானத்தை ஐ. நா. சங்கத்தில் சோவியத் யூனியன் கொண்டு வந்த போது இதற்கு ஆதரவளித்த நாடுகளில் இந்தியாவும் இருந்தது தற்செயலானதல்ல.

சோஷலிசத்திற்கு எதிரான ''சிலுவைப் போரை'' அறிவித்துள்ள மிகப் பிற்போக்கான ஏகாதிபத்திய வட்டங் கள் இதன் கூர்மையை, ஏகாதிபத்தியவாதிகளின் அளவு முறைகளுக்கும் வரையளவுகளுக்கும் பொருந்தி வராத பாதையைத் தேர்ந்தெடுத்துள்ள வளர்முக நாடுகளுக்கு எதிராக அடிக்கடி திருப்பும் ஒரு சூழ்நிலையில் கூட்டான, ஒத்திசைவான முயற்சிகளின் முக்கியத்துவம் அதிகரிக்கிறது. ஆப்கானிஸ்தான் மற்றும் நிக்கராகுவா நாடுகளுக்கு எதிராக நடத்தப்படும் பிரகடனப்படுத்தப்படாத யுத்தங்களிலும் சால்வடோர், மற்ற மத்திய அமெரிக்க, கரிபியன் கட லோர நாடுகளின் உள்விவகாரங்களில் தலையிடுவதிலும் இது வெளிப்படுகிறது. ஏகாதிபத்திய அரசு பயங்கரவாதக் கொள்கையின் தீய விளைவுகள் மத்திய கிழக்கிலும் பாரசீக வளைகுடா பகுதியிலும் நன்கு தெரிகின்றன. இக்கொள்கை அடிப்படை சர்வதேச பழக்க வழக்க வரையளவுகளையும் ஒழுக்கத்தையும் மீறுகிறது, இது அரசுகளுக்கு இடையிலான உறவுகளின் சமாதான தன்மையையும் பரஸ்பர நம்பிக் கையையும் அழித்து விடக் கூடும், இது உலகில் நிலவரத்தை மேலும் சிக்கலாக்குகிறது. பல பதட்ட நிலை பிறப்பிடங்கள்

---

* பிராவ்தா, மே 27, 1985.

தோன்ற இதுதான் காரணமேயன்றி பொய்யான ''வல்லரசு களின் போட்டி'' காரணமல்ல.

ஐ. நா. சங்க பாதுகாப்பு கவுன்சிலின் ஒவ்வொரு நிரந்தர உறுப்பு நாடும் ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க கண்டங்களிலுள்ள நாடுகளின் உள் விவகாரங்களில் தலை யிடுவதில்லையென்றும் பலத்தைப் பயன்படுத்துவதில்லை யென்றும் அவ்வாறு பயன்படுத்தப் போவதாக அச்சுறுத்து வதில்லையென்றும் இந்நாடுகளை இராணுவக் கூட்டுகளி னுள் இழுப்பதில்லையென்றும் உறுதிமொழி மேற் கொள்ளலாம் என்று சோவியத் யூனியன் முன்மொழிந்தது. இந்த முன்மொழிவு இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி 1985 மே மாதம் சோவியத் யூனியனுக்கு வருகை தந்த போது அறிவிக்கப்பட்டது. ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்காவில் உள்ள பல்வேறு பிரதேசங்களில் நிலவும் பதட்ட நிலையைத் தணிப்பதை நோக்கமாகக் கொண்ட ஒரு பெரும் முன்மொழிவாக உலக மக்கள் இதை மதிப்பிட்ட னர். சோவியத் யூனியன் தன் வெளிநாட்டுக் கொள்கையில் இக்கோட்பாடுகளை இடையறாது பின்பற்றுகிறது, ஐ. நா. சங்க பாதுகாப்பு கவுன்சிலின் உறுப்பு நாடு என்ற வகையிலும் இந்த உறுதிமொழியை ஏற்க சோவியத் நாடு தயார்.

இந்த முன்மொழிவு 1982ஆம் ஆண்டு இந்திரா காந்தி சோவியத் யூனியனுக்கு மேற்கொண்ட பயணத்தின் போது வெளியிடப்பட்ட மற்ற முன்மொழிவை மேலும் செழுமைப் படுத்தி தர்க்க ரீதியாக வளர்த்தது. நேட்டோ மற்றும் வார்சா ஒப்பந்த ஸ்தாபனத்தின் தலைமை உறுப்புகள் தமது நடவடிக்கைத் துறைகளை ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்காவிற்குப் பரப்புவதில்லையென உறுதிமொழி மேற் கொள்ளலாம் என்று 1982இல் சோவியத் யூனியன் முன் மொழிந்தது. வார்சா ஒப்பந்த ஸ்தாபனத்தின் உறுப்பு நாடுகள் 1983 ஜனவரியில் பிராகில் நடைபெற்ற அரசியல் கலந்தாலோசனைக் கமிட்டியின் கூட்டத்தில், தமது கூட்டணியின் செயல் மண்டலத்தை விஸ்தரிக்கும் நோக்கம் தமக்கில்லையென அறிவித்தன; அதே போல் நேட்டோ உறுப்பு நாடுகளும் தம் கூட்டின் செயல் மண்டலத்தை உலகின் எப்பகுதிக்கும், குறிப்பாக பாரசீக வளைகுடா பகுதிக்குப் பரப்ப வேண்டாமென அறைகூவல் விடுத்தன. ஆனால் இதற்கு மேற்கத்திய இராணுவ-அரசியல் கூட்டின்

தலைவர்கள் சரிவர செவிமடுக்கவில்லை என்பது தெரிந்ததே.

ஆசியாவின் மிகப் பெரும் நாடுகளில் ஒன்றாகிய இந்தியா வின் வெளிநாட்டுக் கொள்கையிலும் சோவியத் நாட்டின் (இதன் பெரும் பரப்பு ஆசியாவில் உள்ளது, இதன் மக்களில் பெரும் பகுதியினர் ஆசியாவில் வாழுகின்றனர்) வெளி நாட்டுக் கொள்கையிலும் ''ஆசியப் போக்கிற்கு'' பாரம் பரியமாகவே முக்கிய இடம் உள்ளது. உலகளாவிய பிரச் சினைகளின் ஒரு உட்பகுதி என்ற வகையில் ஆசிய பிரச் சினைகள் இந்தியா மற்றும் சோவியத் யூனியனின் தேசியப் பாதுகாப்புடன் பெருமளவு தொடர்பு கொண்டிருப்பது புரியக் கூடியதே. நிச்சயமாக, இன்றைய உலகில் ஆசியாவின் பெரும் பங்கை இரு நாடுகளும் புரிந்து கொள்வதும் முக்கியமானது. சமாதானம், நல்லண்டை உறவுகள் மற்றும் ஒத்துழைப்புச் சக்திகளுக்கும் மிகப் பிற்போக்கான ஏகாதிபத்திய வட்டங்கள், இவற்றின் கூட்டாளிகளுக்கும் இடையிலான கடும் போராட்டக் களமாக இன்று ஆசியா மாறியுள்ள போது இப்பங்கு இன்று குறிப்பாக அதிகரித்துள்ளது. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் உலகில் சுமார் 240 ஆயுத மோதல்கள் நடந்துள்ளன, இதில் 200 மோதல்கள் ஆசியாவில் நடந்துள்ளன என்று கூறுவதே போதுமானது. இவற்றில் மிகப் பெரும்பான் மையானவற்றில் ஏகாதிபத்தியச் சக்திகள் மிகத் தீவிரமாகப் பங்கேற்றன.

உலக மக்கள் தொகையில் பாதிக்கும் மேற்பட்டோர் வாழும் ஆசியாவில் உள்ள நிலவரத்தைப் பொறுத்துதான் பூமியெங்கும் உள்ள நிலவரம் அமையும் என்பதைப் புரிந்து கொள்வது எளிது.

ஏகாதிபத்தியவாதிகளின் ஆதரவோடு செயல்படும் இஸ் ரேலின் ஆக்கிரமிப்பு நோக்குடைய நாடு பிடிக்கும் கொள் கையின் விளைவாய் மத்திய கிழக்கில் பதட்ட நிலை நிலவுவதானது சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் பெரும் கவலையைத் தருகிறது. மத்திய கிழக்கு பிரச் சினையின் ஆரம்பத்திலிருந்தே இந்தியா அரபு மக்களின் தரப்பில் உறுதியாக நிற்கிறது. ''ஏகாதிபத்தியவாதிகள் மற்றும் நவீன ஏகாதிபத்தியவாதிகளின் நடவடிக்கைகளுக்கு எதிரான அரபு மக்களின் போராட்டம் நியாயமானது என்று இந்தியா உறுதியாக நம்புவதுதான் அரபு மக்களை இந்தியா

ஆதரிப்பதற்கான அடிப்படை''* என்று National Herald பத்திரிகை குறிப்பிட்டது. லெபனானுக்கும் மற்ற அரபு நாடு களுக்கும் எதிரான இஸ்ரேலின் ஆக்கிரமிப்பு நடவடிக்கை களை இந்தியா கண்டிக்கிறது, கேம்ப்-டேவிட் ஒப்பந் தத்தை** எதிர்க்கிறது. இது, தம் உரிமைகள், நலன்களுக்கான போராட்டத்திலிருந்து அரபு மக்களை பிரித்து அவர்களைச் சிதறுண்டு போகச் செய்யுமே தவிர மத்திய கிழக்கில் சமாதானத்தை ஏற்படுத்தாது என்று இந்தியா கருதுகிறது. 1982இல் கூட்டுச் சேரா நாடுகளின் ஒருங்கிணைப்புக் காரியாலயக் கூட்டத்தில் இந்தியா இப்பிரதேசத்தில் நிலவரத்தை சீர்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட பல ஆக்கபூர்வமான முன்மொழிவுகளை வெளியிட்டது. உதாரணமாக, லெபனானில் போர் நடவடிக்கைகள் உடனடியாக நிறுத்தப்பட வேண்டுமென்றும் இங்கிருந்து இஸ்ரேலியத் துருப்புகள் நிபந்தனையின்றி வெளியேற வேண்டுமென்றும் கோரப்பட்டது. 1980 மார்ச் 25ஆம் தேதி, இந்திரா காந்தி அரசாங்கம் ஆட்சிக்கு வந்த ஒரு சில மாதங்களுக்குள்ளாகவே பாலஸ்தீன விடுதலை முன்னணியை இந்தியா ராஜதந்திர ரீதியாக அங்கீகரித்து இதன் ராஜதந்திர பிரதிநிதித்துவ அமைப்பை டில்லியில் திறந்தது. இது உலகெங்குமுள்ள சமாதானச் சக்திகளிடையே நல்ல வரவேற்பைப் பெற்றது.

இஸ்ரேல், தான் ஆக்கிரமித்துள்ள எல்லா அரபுப் பரப்புகளையும் உடனடியாக விடுவிக்க வேண்டுமென சோவியத் யூனியனைப் போன்றே இந்தியாவும் கோரு கிறது. மத்திய கிழக்கில் நியாயமான, நிலையான சர்வாம்ச

---

* *National Herald*, June 7, 1985.

** 1979ஆம் ஆண்டு வாஷிங்டனில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பங் கேற்போடு எகிப்து அரபுக் குடியரசின் ஜனாதிபதி அ. சதாத்திற்கும் இஸ்ரேலியப் பிரதமர் எம். பேகினிற்கும் இடையில் கையொப்பமான உடன்படிக்கை. இதற்கு முன் கேம்ப்-டேவிட் எனுமிடத்தில் பேச்சுவார்த் தைகள் நடந்தன. சாராம்சத்தில் இது ஒரு பிரிவினைவாத ஒப்பந்தமாகும். இது அரபு அரசுகளின் நலன்களை கணக்கில் கொண்டு மத்திய கிழக்கு பிரச்சினைகளைத் தீர்க்கும் முயற்சிகளைக் குலைப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தது, இந்நாடுகளுக்கு எதிரான இஸ்ரேலிய ஆக்கிரமிப்பின் விளைவுகளை நடைமுறையில் இது ஸ்திரப்படுத்தியது. சொந்தமான சுதந்திர அரசைத் தோற்றுவிக்க பாலஸ்தீன மக்களுக்கு உள்ள உரிமையை கேம்ப்-டேவிட் உடன்படிக்கை அலட்சியப்படுத்துகிறது.

தீர்வை அடையும் உடனடி அவசியத்தை நம்மிரு நாடுகளும் நன்கு புரிந்து கொள்கின்றன. அரபுப் பரப்புகளிலிருந்து இஸ்ரேலியத் துருப்புகள் முழுமையாக, எவ்வித நிபந்தனையுமின்றி வெளியேறுதல், சுயமான அரசை அமைக்கும் உரிமை உட்பட பாலஸ்தீன மக்களின் எல்லா சட்ட பூர்வமான, நியாயமான உரிமைகளையும் நிறைவேற்றுதல், பாதுகாப்பான, சுதந்திரமான வளர்ச்சிக்கு எல்லா அரசுகளுக்கும் உள்ள உரிமைக்கு வகை செய்தல் முதலியன இத்தீர்வின் அம்சங்களாக இருக்க வேண்டும்.

சோவியத் யூனியனும் இந்தியாவும் பிரிவினைவாத ஒப்பந்தங்களை எதிர்க்கின்றன; பாலஸ்தீன மக்களின் ஒரே சட்ட பூர்வமான பிரதிநிதியாகிய பாலஸ்தீன விடுதலை முன்னணி உட்பட அக்கறையுள்ள எல்லா தரப்புகளின் பங்கேற்போடு நன்கு பிரதிநிதித்துவப்படுத்தப்பட்ட ஒரு சர்வதேச மகாநாட்டை கூட்டுவதுதான் மத்திய கிழக்கு பிரச்சினையின் தீர்விற்கான ஒரே உண்மையான வழி என்று சோவியத் யூனியனும் இந்தியாவும் கருதுகின்றன. இம்மகாநாட்டை நடத்துவதில் ஐ. நா. சங்கத்தால் ஒரு முக்கியப் பங்காற்ற முடியும், இது இவ்வாறு பங்காற்ற வேண்டும்.

பரிபூரணமாக ஆலோசிக்கப்பட்ட, யதார்த்தமான தீர்விற்கான நிபந்தனைகள், முன்மொழியப்படும் உண்மையான நடவடிக்கைகள் ஆகியவற்றில்தான் மத்திய கிழக்கு பிரச்சினையின் பாலான இப்படிப்பட்ட அணுகுமுறையின் ஆக்கபூர்வமான தன்மை உள்ளது. இப்போது மத்திய கிழக்கில் நிலவும் பதட்ட நிலையைத் தணிப்பது, பிரதேச அரசுகளின் சுதந்திரம், பாதுகாப்பு, பிரதேச முழுமை ஆகிய நலன்களுக்கு ஏற்ற தீர்விற்கு அதிகபட்சம் அனுகூலமான சூழ்நிலைகளை ஏற்படுத்துவது என்பதில்தான் மேற்கூறியவற்றின் சாரம் அடங்கியுள்ளது. இதுதான் மத்திய கிழக்கில் நியாயமான, நிலையான சமாதானத்தை அடைவதை நோக்கிய திசையில் அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்த உதவும்.

இரான்-ஈராக் இராணுவ மோதல் விரைவில் நிறுத்தப்பட வேண்டுமென சோவியத் யூனியனும் இந்தியாவும் உறுதியாகவும் தொடர்ச்சியாகவும் பாடுபடுகின்றன. இம்மோதல் இரு தரப்புகளுக்கும் ஏராளமான பலிகளையும் இழப்பு

களையும் ஏற்படுத்தியுள்ளது. இரண்டு நாடுகளையும் பலவீனப்படுத்தி, பாரசீக வளைகுடாவை ஒட்டியுள்ள பிரதேச நாடுகளின் சமாதானத்திற்கும் பாதுகாப்பிற்கும் ஆபத்தை ஏற்படுத்தும் இந்த உடன்பிறப்பு கொலை யுத்தம் பொருளற்றது என்று ஐ. நா. மேடை உட்பட பல சர்வதேச அரங்கங்களில் இந்தியா சுட்டிக் காட்டி யுள்ளது. பேச்சுவார்த்தைகளும் சமாதானத் தீர்வும்தான் இரான்-ஈராக் யுத்தத்திற்கான ஒரே விவேகமான மாற்று வழி என்ற நிலையை சோவியத் யூனியனும் இந்தியாவும் இடையறாது பின்பற்றுகின்றன. இச்சச்சரவை தீர்ப்பதற்காக இரானுக்கும் ஈராக்கிற்கும் இடையே உடன்பாடுகளை ஏற்படுத்தவும் பரஸ்பர ஏற்புடைய நடவடிக்கைகளைத் தேடவும் கூட்டுச் சேரா இயக்கத் தலைவன் என்ற வகையில் இந்தியா மேற்கொள்ளும் முயற்சிகளை சோவியத் அரசியல், சமூக வட்டங்களில் உயர்வாக மதிப்பிடுகின்றனர்.

தென் மேற்காசியாவில் பதட்ட நிலை நிலவுவதும் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் பெரும் கவலையை ஏற்படுத்துகிறது. உலகின் ''மிகவும் கொந்தளிப்பான'' இடங்களில் ஒன்றாகிய இந்த இடத்தின் பிரச்சினைகளை தென் மேற்காசிய நாடுகளின் சுதந்திரம், அரசுரிமை, பிரதேச முழுமை, கூட்டுச் சேராமை ஆகியவற்றை முழுமையாக மதித்து சமாதானமாக, அரசியல் வழியில் தீர்க்க வேண்டும் என்று இப்பிரதேச சம்பவங்களின் வளர்ச்சி தெட்டத் தெளிவாகக் காட்டுகிறது.

அதாவது ஆப்கானிஸ்தானின் உள்விவகாரங்களில் ஆயுதத் தலையீடும் மற்ற எல்லா வகையான அந்நியத் தலையீடும் முழுமையாக நிறுத்தப்பட வேண்டும், இப்படிப்பட்ட தலையீடுகள் திரும்ப நடைபெறா என்று நம்பகரமான சர்வதேச உத்திரவாதம் அளிக்கப்பட வேண்டும். ஆப்கான் ஜனநாயகக் குடியரசில் நடைபெறும் முற்போக்கு சமூக-பொருளாதார மற்றும் அரசியல் மாற்றங்களைத் திருப்பவும் புதிய வாழ்வைக் கட்டும் இம்மக்களுக்கு இடையூறு விளைவிக்கவும் செய்யப்படும் எல்லா முயற்சிகளும் தோல்வி யுறுவது திண்ணம் என்பதை விசேஷமாகக் குறிப்பிட வேணடும். தேசிய ஜனநாயகப் புரட்சியின் வெற்றிகளை சகல வித தாக்குதல்களிலிருந்தும் காப்பாற்ற ஆப்கானிய மக்கள் கொண்டுள்ள அசைக்க இயலா உறுதியும் சோவியத்

யூனியன் உட்பட இந்நாட்டின் உண்மையான நண்பர்கள் ஜனநாயக ஆப்கானிஸ்தானுடன் காட்டும் ஒருமைப்பாடும் இதற்குச் சான்று பகர்கின்றன. இந்த கோட்பாட்டு வழிப்பட்ட அம்சத்தை நிராகரிப்பதும் ''ஆப்கானிய பிரச்சினை'' என்றழைக்கப்படுவதை ஆப்கான் ஜனநாயக குடியரசிற்கு எதிரான ''பிரகடனப்படுத்தப்படாத யுத்தத் தின்'' மூலம் தீர்க்க முயலுவதும் புறவய ரீதியான எதார்த்தங்களைக் காணாமல் கண்களை மூடிக் கொள் வதற்கு ஒப்பாகும்.

ஆப்கானிஸ்தானைச் சுற்றியுள்ள நிலவரத்திற்கு அரசியல் தீர்வு காண வேண்டுமென சோவியத் யூனியனும் இந்தியாவும் தொடர்ச்சியாகப் போராடுகின்றன. சுயமான ஆப்கானிஸ் தானின் விவகாரங்களில் ஆயுதத் தலையீடும் மற்ற வகையான தலையீடுகளும் உடனடியாக நிறுத்தப்படுவது என்பது பிரச்சினையின் தீர்விற்கான நேரடி நிபந்தனை யாகுமென சோவியத் யூனியன் கருதுகிறது. வெளித் தலையீடு நிறுத்தப்படுவது பிரச்சினையின் தீர்விற்கான முக்கியக் காரணியாகும் என்று இந்தியா கருதுகிறது. மேலைய வல்லரசுகளின் தூண்டுதலால் ஐ. நா. சங்கப் பொதுச் சபையில் ''ஆப்கானிய பிரச்சினை'' என்றழைக்கப் படும் தீர்மானங்கள் மீது வாக்கெடுப்புகள் நடைபெறும் போது இந்தியா இவற்றில் பங்கேற்பதில்லை, ஏனெனில் இப்படிப்பட்ட தீர்மானங்களை நிறைவேற்றுவது பிரச்சினை யின் தீர்விற்கு உதவாது என்று இந்தியா கருதுகிறது.

1985 மேயில் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியின் சோவியத் பயணத்திற்குப் பின் வெளியான சோவியத்-இந்தியக் கூட்டறிக்கையில், ''இப்பிரதேச (தென் மேற் காசிய. — ஆ-ர்.) நாடுகளின் உள்விவகாரங்களில் எவ்விதத் தலையீடும் இருக்கக் கூடாதென சோவியத் யூனியனும் இந்தியாவும் மீண்டும் கோருகின்றன. பேச்சுவார்த்தைகளின் மூலமான அரசியல் தீர்வு மட்டுமே இங்குள்ள பிரச்சினை களுக்கு நிலையான தீர்வையளிக்கும் என்று உறுதியாக நம்புகின்றன'' என்று கோடிட்டுக் காட்டப்பட்டிருந்தது.

இந்தியாவிற்கும் ஆப்கான் ஜனநாயக குடியரசிற்கும் இடையிலான உறவுகளின் வெற்றிகரமான வளர்ச்சி தென் மேற்காசிய நிலவரத்தின் மீது நல்ல செல்வாக்கை ஏற்படுத்துகிறது. சமாதான சகவாழ்வு, சமத்துவம் மற்றும்

நியாயம் ஆகியவற்றை பின்பற்றும் இரண்டு கூட்டுச் சேரா நாடுகளின் ஒத்துழைப்பு எவ்வளவு பயன்மிக்கது என்று இது தெட்டத் தெளிவாகக் காட்டுகிறது. எல்லா ஆசிய நாடுகளுக்கும் இடையே இப்படிப்பட்ட உறவுகள் நிலவினால் இந்நாடுகளின் உள்விவகாரங்களில் வெளிச் சக்திகளால் தலையிடவே முடியாது. ஆசியா நிலையான அமைதியும் ஸ்திர தன்மையும் நிலவும் மண்டலமாக மாறும். எனவே, இப்பிரதேசத்திலும் பதட்ட நிலை நிலவும் ஆசியாவின் மற்ற பிரதேசங்களிலும் உள்ள நிலவரத்தைக் கண்டு கவலையடையும் இந்திய சமூக-அரசியல் வட்டங்கள், நிலையான அமைதியையும் பாதுகாப்பையும் ஏற்படுத்த எது சிறந்த வழி, சமாதான விரோத சக்திகளின் நடவடிக்கைகளிலிருந்து இப்பிரதேசங் களை எப்படி காப்பாற்றுவது என்பது குறித்து சிந்திப்பது இயல்பே. இந்த லட்சியங்களை நிறைவேற்ற சோவியத் யூனியன் தன் பங்கிற்கு இயன்றதையெல்லாம் செய்தது, இனியும் செய்யும். இத்திசையில் ஆசிய நாடுகளுடன் இரு தரப்பு மற்றும் பல்தரப்பு அடிப்படையில் ஒத்துழைக்க சோவியத் யூனியன் தயார்.

தெற்காசியாவில் நல்லண்டை உறவுகள், ஒத்துழைப்பை வளர்க்கவும் சமாதானம், பாதுகாப்பை பலப்படுத்தவும் நடைபெறும் போராட்டத்தில் இந்தியாவின் பெரும் பங்கை பரவலான சமாதான வட்டங்கள் உயர்வாக மதிப்பிடுகின்றன. துணைக் கண்டத்தில் நிலவரத்தை சீர்குலைக்கவும் இதை ஆசியாவின் இன்னுமொரு பதட்ட நிலையின் களமாக மாற்றவும் ஏகாதிபத்திய வட்டங்களும் இவர்களின் கூட்டாளிகளும் தொடர்ந்து முயலும் போது மேற்கூறிய முயற்சிகள் பெரிதும் முக்கியமானவை. சமா தானக் கோஷங்களின் போர்வையின் கீழ் ஏகாதிபத்திய சக்திகள் தெற்காசிய அரசுகளை ஒன்றிற்கு எதிராக மற்றதை தூண்டி விடும் கொள்கையைப் பின்பற்றுகின்றன, தெற்காசிய கரைக்கு வெகு அருகே இராணுவ நடமாட்டத் தைப் பெருக்குகின்றன. பதட்ட நிலையை அதிகப்படுத்தும் இக்கொள்கைக்கு எதிராக துணைக் கண்டத்தின் சமாதான சக்திகள் தெற்காசிய நாடுகளுக்கு இடையே உண்மையான நட்புறவுகளை ஏற்படுத்தும் முயற்சிகளை முன்வைக் கின்றன. தெற்காசியப் பிரதேச ஒத்துழைப்பு ஸ்தாபனத்தின்

நடவடிக்கையின் மீது இவ்விஷயத்தில் குறிப்பிட்ட நம்பிக்கைகள் உள்ளன. இதில் இப்பிரதேசத்தின் ஏழு நாடுகள் உள்ளன. தெற்காசிய நாடுகளுக்கு இடையே உள்ள பரஸ்பர அனுகூலமான, பல் தரப்பு தொடர்புகள் எவ்வளவுக்கு எவ்வளவு உறுதியானவையோ அவ்வளவுக்கு அவ்வளவு துணைக் கண்ட சமாதானம் உறுதியானதாக இருக்கும்.

தென் கிழக்காசிய நிலவரம் எப்போதுமே ஆசிய அரசியல் நிலவரத்தின் மீது செல்வாக்கு செலுத்தி வந்துள்ளது. தென் கிழக்காசியாவில் அமைதியற்ற, பதட்டமான நிலை நிலவுகிறது. வெளிச் சக்திகளின் இடையறா தலையீடு இதற்குப் பெரிதும் காரணமாகும். பொய்யான ''கம்யூச்சிய பிரச்சினையை'' காட்டி, இப்பிரதேச மக்கள் தம்மிடையே நட்புறவையும் ஒத்துழைப்பையும் வளர்க்க சகல விதங்களிலும் இடையூறு செய்து ஏகாதிபத்தியவாதிகள் தென் கிழக்காசியாவை தம் மேலாதிக்கவாத நாட்டங்களுக்கு பலியாக்க முயலுகின்றனர். இந்தோசீன மக்களின் முற்போக்கான வெற்றிகளையும் இவர்களின் சுதந்திரத்தையும் அரசுரிமையையும் ஒழித்துக் கட்ட முயற்சி செய்யப்படுகிறது. இவ்வாறாக, மத்திய கிழக்கிலும் பசிபிக் பெருங்கடலின் மேற்குப் பகுதியிலும் உள்ள தமது இராணுவத் தளங்கள், உடன்படிக்கைகளுக்கு இடையே தென் கிழக்காசியாவை ஒரு இணைப்புப் பாலமாக்க ஏகாதிபத்திய வட்டங்கள் பாதையமைக்கின்றன.

இப்பிரதேசத்தில் பதட்ட நிலை நிலவுவதானது தென் கிழக்காசிய நாடுகளுக்கும் இதற்கு அப்பாலுள்ள நாடுகளுக்கும் மோசமான விளைவுகளை ஏற்படுத்தக் கூடும் என்பது தெளிவு. இப்பிரதேசத்திலுள்ள நாடுகளின் இடையே ஆக்கபூர்வமான பேச்சுவார்த்தைகள் நடைபெறுவதும் பிரச்சினைகளுக்கு சமாதானமான, பரஸ்பர ஏற்புடைய தீர்வுகளைத் தேடுவதும்தான் தென் கிழக்காசியாவில் நிலவரத்தை சீர்படுத்துவதற்கான ஒரே விவேகமான வழி என்று சோவியத் யூனியனும் இந்தியாவும் உறுதியாக நம்புகின்றன. **ஆசியான்*** நாடுகளின் மீதும் இந்தோசீன

* **ஆசியான்** — தென் கிழக்காசிய நாடுகளின் பிரதேச அரசியல்-பொருளாதார ஸ்தாபனம். இதில் புருனே, இந்தோனேஷியா, மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, பிலிப்பீன் தீவுகள் ஆகிய நாடுகள் இடம

அரசுகளின் மீதும் வெளியிலிருந்து திணிக்க முயற்சிக்கப் படும் மாற்று வழி — மோதல், அரசியல், பொருளாதார, இராணுவ நிர்ப்பந்தத்தை நோக்கமாகக் கொண்ட கொள்கையாகும். இப்படிப்பட்ட கொள்கை எதிர்பார்க்கும் பயன்களைத் தராது. ஏனெனில் இது அரசியல் யதார்த்தங் களிலிருந்து விலகி நிற்கிறது, எனவே தொலை நோக்குப் பார்வையற்றது, எதிர்காலமற்றது. பிரதேசத்தில் நில வரத்தை சீர்படுத்தி இதை நிலையான சமாதானம், ஸ்திர நிலை, நல்லண்டை உறவுகள், ஒத்துழைப்பு பிரதேசமாக மாற்ற தென் கிழக்காசிய நாடுகள் செய்யும் முயற்சிகளுக்கு சோவியத் யூனியனும் இந்தியாவும் ஆதரவளிக்கின்றன.

இந்தியாவிற்கும் வியட்நாம் சோஷலிசக் குடியரசு, கம்பூச்சிய மக்கள் குடியரசு, லாவோஸ் ஆகிய நாடுகளுக்கும் இடையில் வெற்றிகரமாக வளர்ந்து வரும் நட்புறவும் ஒத்துழைப்பும் இந்த லட்சியங்களை அடைய கணிசமாக உதவுகின்றன. இந்திய, வியட்நாமியத் தலைவர்களுக்கு இடையில் உள்ள நிலையான அரசியல் தொடர்புகளும் பல்வேறு துறைகளிலும் இந்திய-வியட்நாமிய ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்து வருவதும் தென் கிழக்காசியாவில் சம்பவங்களின் வளர்ச்சி மீது நல்ல செல்வாக்கு செலுத்து கின்றன என்பதில் சந்தேகமில்லை.

சோவியத் யூனியனுக்கும் இந்தோசீன நாடுகளுக்கும் இடையில் உள்ள பயன்மிகு பன்முக ஒத்துழைப்பு தென் கிழக்காசியாவில் சமாதானத்தையும் சுதந்திரத்தையும் வலுப்படுத்துவதற்கான ஒரு முக்கியக் காரணியாகும். ஏகாதிபத்தியச் சக்திகள், இவற்றின் கூட்டாளிகளின் திட்டங் களுக்கு இது நம்பகரமான தடையாக உள்ளது.

அரசியல் பேச்சுவார்த்தைகளின் மூலம் ஆசியான் உறுப்பு நாடுகளுக்கும் இந்தோசீன நாடுகளுக்கும் இடையில் ஒப்பந்தங்கள் ஏற்படுவதற்கான உத்திரவாதத்தைத் தருவதில் ஐ. நா. சங்க பாதுகாப்பு கவுன்சிலின் மற்ற நிரந்தர

---

பெற்றுள்ளன. இது 1967இல் தோற்றுவிக்கப்பட்டது பொருளாதார, அரசியல், சமூக, மற்ற வகையான ஒத்துழைப்பை வளர்ப்பதும் தென் கிழக்காசியாவில சமாதானத்தையும் ஸ்திர நிலையையும் ஏற்படுததுவதும் இநத ஸ்தாபனத் தின் அதிகார பூர்வமான லட்சியங்களாகும். ஏகாதிபத்திய வட்டங்கள் ஆசியான் ஸ்தாபனத்தை இராணுவ-அரசியல் கூட்டாக மாற்ற மேன்மேலும் நிர்ப்பந்தம் செலுத்தும் ஒரு சூழ்நிலையில் இந்த ஸ்தாபனம் செயல்படுகிறது.

உறுப்பு நாடுகளுடன் சேர்ந்து பங்கேற்க சோவியத் யூனியன் தயார். எவ்வளவுக்கெவ்வளவு விரைவாக பேச்சுவார்த்தைகள் நடக்குமோ தென் கிழக்காசியாவில் நிலவரத்தை சீர்படுத்தும் கடமை அவ்வளவுக்கவ்வளவு எளிதாக இருக்கும். இப்பிரதேசத்தின் பாலான லட்சியங் களின் பொதுமையையும் இவற்றை அடைவதில் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் உள்ள பொது அக்கறை யையும் இந்தியாவிலுள்ள தொலை நோக்குப் பார்வையுள்ள பல அரசியல்வாதிகளும் சமூக நலப் பிரமுகர்களும் விஞ்ஞானி களும் தெட்டத் தெளிவாகக் காணுகின்றனர். இவ்விஷயமாக, சர்வதேச பிரச்சினைகள் பற்றிய இந்திய-சோவியத் கருத்தரங்கில் (டில்லி, டிசம்பர் 1981) தென் கிழக்காசிய மற்றும் தொலைக் கிழக்கு விவகாரங்களில் பிரபல இந்திய நிபுணராகிய வி. பி. தத் கூறியது குறிப்பிடத் தக்கது. ''பிரச்சினைகளுக்கு, குறிப்பாக தென் கிழக்காசிய பிரச்சினைகளுக்கு அரசியல் தீர்வு காணுவதிலும் பரஸ்பர ஒற்றுமைக்கு உதவுவதிலும் இந்தியாவிற்கு பெரும் பொறுப்பு உள்ளது. முட்டுக்கட்டையிலிருந்து வெளிவரும் வழிகளைத் தேடுவதிலும் நிலவரத்தை சீர்படுத்தவும் பதட்ட நிலைத் தணிவிற்கும் உதவுதிலும் இப்பிரதேச நாடுகளை நெருங்கி வரச் செய்யும் பிரச்சினைக்கும் இது பொருந்தும். நிச்சயமாக சோவியத் யூனியனுக்கும் இதில் பெரும் பொறுப்புண்டு. பிரதேச நாடுகள் பரஸ்பர பொறுமையைக் கடைபிடிக்க வேண்டுமென்றும் பரஸ்பர ஏற்புடைய தீர்மானங்களை கண்டுபிடிக்க வேண்டுமென்றும் பதட்ட நிலைத் தணி விற்காகவும் சோவியத் யூனியன் பாடுபடுகிறது'' என்று இந்திய நிபுணர் கூறினார். வி. பி. தத் நியாயமாகத் தொகுத்துரைக்கிறார்: ''இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக் கும், இந்தியாவிற்கும் வியட்நாமிற்கும், சோவியத் யூனியனுக் கும் வியட்நாமிற்கும் இடையிலான நட்புறவுகள் நல்ல தாக்கம் செலுத்தும் காரணிகளாகும். இவற்றை எப்போதும் கவனத்தில் கொண்டு இராணுவ மோதலைத் தவிர்க்கவும் பேச்சுவார்த்தைகளுக்கும் பிரதேசத்தின் பிரச்சினைகளைத் தீர்க்கவும் பயன்படுத்த வேண்டும்'' *.

---

* V. P. Datt, "The Situation in East Asia, South-East Asia and the Pacific", *Indo-Soviet Seminar on International Affairs*, New Delhi, December 7—9, 1981, p 7.

சமீப பத்தாண்டுகளாக இந்துப் பெருங்கடல் பகுதியில் இராணுவ-அரசியல் நிலவரம் மோசமடைந்துள்ளது. ஏகாதி பத்திய வல்லரசுகள் பிரதேசத்தை மும்முரமாக இராணுவ மயப்படுத்தி வருகின்றன. அணு ஆயுதமேந்திய நீர் மூழ்கிக் கப்பல்களும் அணு ஆயுதத்தை ஏந்திச் செல்ல வல்ல விமானங்களுடன் கூடிய விமானந் தாங்கிக் கப்பல் களும் மற்ற பேரழிவு ஆயுதங்களும் இங்குள்ளன. மேற் கத்திய நாடுகளின், குறிப்பாக அமெரிக்க ஐக்கிய நாட்டின் அணு ஆயுதமேந்திய குண்டு வீச்சு விமானங்கள் இந்துப் பெருங்கடலின் மீது பறக்கின்றன. இந்துப் பெருங்கடலில் அமெரிக்க தளங்கள், ஆதார மையங்களின் எண்ணிக்கை 30ஐ எட்டியுள்ளது. விண்வெளிப் பரப்பை இராணுவமயமாக் கும் திட்டங்களுடன் இந்துப் பெருங்கடலைச் சேர்க்க ஏகாதிபத்தியவாதிகள் செய்யும் முயற்சிகள் குறிப்பாக ஆபத்தானவை. இராணுவத் தளங்களில், குறிப்பாக டியகோ-கார்சியாவில் ஸ்புட்னிக் எதிர்ப்பு ஆயுதங்கள் வைக்கப்படுகின்றன. 1987ஆம் ஆண்டு ஸ்புட்னிக் எதிர்ப்பு ஆயுதங்கள் இயங்கத் தயாராக இருக்குமென எதிர்பார்க்கப் படுகிறது. பூமியின் பரப்பிற்கு மேல் 24,000 கி. மீ. உயரத்தில் பறக்கும் ஸ்புட்னிக்குகளை பாழ்படுத்த வல்ல ஆயுதங்களை இந்துப் பெருங்கடல் பிரதேசத்தில் தோற்றுவிக்கும் பணியை 1990இல் முடிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

இந்துப் பெருங்கடல் பகுதியில் விண்வெளி அணு ஆயுதத்தைப் பயன்படுத்தி இராணுவ-கடற்படை விஸ்தரிப்பில் இறங்கியுள்ள ஏகாதிபத்திய சக்திகளுக்கு இரண்டு விதமான நோக்கங்கள் உண்டு. ஒரு புறம் — தெற்கு திசையிலிருந்து சோவியத் யூனியனின் பாதுகாப்பிற்குப் போர்த்தந்திர ரீதியான ஆபத்தை ஏற்படுத்துவது; மறு புறம் — தேசிய விடுதலை இயக்கங்களை ஒடுக்குவதற்கான சூழ்நிலைகளை ஏற்படுத்துதல், பரவலான இந்துப் பெருங்கடல் பிரதேசங் களை தமது பேரரசு நலன்களின் மண்டலமாக மாற்றுவது என்பதே இந்நோக்கங்களாகும். இங்கு அமெரிக்கா வைத்திருக்கும் இராணுவ சக்திகளில் கரையோர அரசுகளுக்கு எதிரான இராணுவ நடவடிக்கைகளுக்கான துருப்புகளும் போர்த்தளவாடங்களும் அடங்கும் என்பதைக் குறிப்பிட வேண்டும். துரிதத் தாக்குதல் படைகளை (இவை ஸ்தல சூழ்நிலைகளில் சண்டை போட வல்லவை) இந்துப் பெருங்

கடலின் எந்த ஒரு பகுதிக்கும் தேவையான சமயத்தில் அனுப்பத் தக்க வகையில் இங்குள்ள அமெரிக்கத் தளங்கள் அமைக்கப்பட்டுள்ளன; அவை தேவையான ஆயுதங்கள், போர்த்தளவாடங்கள் மற்றும் உணவுப் பொருட்களைக் கொண்டுள்ளன.

இன்னுமொரு மிக ஆபத்தான அம்சத்தையும் கவனிக்க வேண்டும். ஏகாதிபத்தியத்தின் மிகப் பிற்போக்கான வட்டங்கள் அணு ஆயுத யுத்தத்தை நடத்தலாம் எனும் கருத்தை மக்கள் மீது சுமத்தி, இந்துப் பெருங்கடல் இப்படிப்பட்ட யுத்த களமாக விளங்கக் கூடும் என்று சித்தரிக்கையில், இவை சாராம்சத்தில் இப்பிரதேச மக்களை அணு ஆயுதப் பணயக் கைதிகளாக ஆக்குகின்றன என்பது தெளிவாகிறது. ஏனெனில் இந்துப் பெருங்கடலில் உள்ள ஏதாவதொரு இடத்திலிருந்து அணு ஆயுதப் போர்முகங்களை உடைய போர்த்தந்திர ராக்கெட்டுகள் செலுத்தப்பட்டால் ஏகாதிபத்தியப் போர்த்தந்திரவாதிகளின் கணிப்பின்படி இப்பிரதேசம்தான் பதில் தாக்குதலுக்கு இரையாகும். பேரரசு நாட்டங்களால் கண்ணவிழ்ந்து போய், அணு ஆயுத யுத்தத்தில் வெற்றி பெறலாம் என்ற மாயையான நம்பிக்கையில் கோடிக்கணக்கான மக்களின் உயிர்களைப் பலியிடத் தயாராக உள்ளவர்களின் பெரும் மனித விரோதத் தர்க்கம் இதுதான்.

இந்துப் பெருங்கடலில் ஏகாதிபத்திய வல்லரசுகள் தம் இராணுவ நடமாட்டத்தை பெருமளவில் அதிகப்படுத்தியுள்ள போது — இது கரையோர நாடுகளின் பாதுகாப்பு மற்றும் சுதந்திரத்திற்கும் பூமியின் அமைதிக்கும் ஆபத்தை ஏற்படுத்து கிறது — இப்பிரதேசத்தை இராணுவக் கலைப்பிற்கு உள்ளாக் கும் பிரச்சினை நம் காலத்தின் மிக முக்கிய சர்வதேச பிரச்சினைகளில் ஒன்றாக மாறியுள்ளது வெள்ளிடை மலை.

''மாபெரும் வல்லரசுகளின் போட்டி'' என்றழைக்கப் படுவதுதான் இந்துப் பெருங்கடலிலும் மற்ற பிரதேசங் களிலும் பதட்ட நிலை அதிகமாகக் காரணம் என்று கூறப்படுவது எவ்வளவு பொருத்தமற்றது என்பதை இங்கு நினைவு கூற வேண்டும். இக்கூற்று சர்வதேச பதட்ட நிலை அதிகரிப்பதற்கான உண்மையான குற்றவாளிகளை மூடி மறைக்கிறது. உண்மையாகப் பார்த்தால், இந்துப்

பெருங்கடலில் சோவியத் யூனியனின் கடற்படைச் சக்திகள் குவிக்கப்படுவது அல்லது பெருக்கப்படுவதற்கான பேச்சிற்கே இடமில்லை. இப்பகுதியில் உள்ள மட்டான சோவியத் போர்க்கப்பல்களின் எண்ணிக்கை பல ஆண்டுகளாக மாறவில்லை, அதுவும் இவை தரைப் பகுதிக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்கும் வசதியற்றவை. இந்துப் பெருங்கடல் பகுதியில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கடற் படைத் திரட்டுகள் அதிகரித்து வந்த போது, தன் பாதுகாப்பிற்கான பதில் நடவடிக்கையாகத்தான் சோவியத் யூனியன் இவ்வாறு செய்தது என்பதை மறக்கக் கூடாது. நன்கு சிந்திக்கும் இந்திய அரசியல், சமூக நலப் பிரமுகர் களும் விஞ்ஞானிகளும் இந்துப் பெருங்கடல் பகுதியில் அமெரிக்க கொள்கையையும் சோவியத் கொள்கையையும் ஒரே தட்டில் வைத்துப் பார்க்கவில்லை எனும் அம்சம் மகிழ்ச்சியைத் தருகிறது. ''இப்பிரதேசம் சம்பந்தமான சோவியத் யூனியனின் நிலை நன்கு தெரிந்ததே. ஆண்டு பூராவும் உறையாத ஒரே கடல் வழியாகிய இதை நிரந் தரமாகப் பயன்படுத்துவதில் இந்த வல்லரசிற்கு உள்ள அவசியம் நமக்குப் புரிகிறது. இங்கே சோவியத் யூனியன் பின்பற்றும் முற்றிலும் தெட்டத் தெளிவான, பொறுமை யான கொள்கை இப்பகுதியை அமைதி மண்டலமாக்கும் போராட்டத்தில் கரையோர அரசுகளுக்கு உதவுகிறது. சோவியத் யூனியன் இந்துப் பெருங்கடலின் முக்கியத் துவத்தை கடல் மார்க்கம் என்று மட்டும் பார்க்காமல், தன் எல்லையருகே ராக்கெட்டுகளை வைக்குமிடம் என்றும் பார்ப்பதால், பிரதேசத்தை அமைதி மண்டலமாக்க வேண்டுமென்று பாடுபடும் கரையோர அரசுகளுடனான ஒத்துழைப்பு சோவியத் யூனியனின் நலன்களுக்கு முற்றிலும் உகந்ததாக உள்ளது''* என்று பிரபல சர்வதேச நிபுணர் ஏ. கே. தாமோதரன் கூறுகிறார்.

இப்பிரதேசத்தை இராணுவக் கலைப்பிற்கு உள்ளாக்க வேண்டுமென யார் விரும்புகின்றார்கள், யார் இதற்கு எதிராக இருக்கின்றார்கள் என்பதற்கு இன்னுமொரு குறியீடு உள்ளது. இந்துப் பெருங்கடலில் இராணுவ நடமாட்

---

* A. K. Damodaran, "The Situation in South-West Asia..", *Indo-Soviet Seminar on International Affairs*, New Delhi, December 7—9, 1981, p. 14.

டத்தை மட்டுப்படுத்தி, குறைக்கும் பிரச்சினைகள் தொடர் பாக அமெரிக்க ஐக்கிய நாட்டுடனான பேச்சுவார்த்தை களை (இவற்றை அமெரிக்கா ஒரு தலைப்பட்சமாக முறித்தது) மீண்டும் துவக்கத் தான் தயாரென சோவியத் யூனியன் பன்முறை அறிவித்தது. பேச்சுவார்த்தைகளுக்குத் திரும்ப அமெரிக்கா விடாப்பிடியாக மறுத்து வருகிறது.

1985 மே மாதம் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியின் சோவியத் பயணத்திற்குப் பின் வெளியான சோவியத்-இந்தியக் கூட்டறிக்கையில் கூறப்பட்டவற்றை இன்றும் அப்படியே திரும்பச் சொல்லலாம்: "இந்துப் பெருங் கடலை அமைதி மண்டலமாக்குவது பற்றிய ஐ. நா. பிரகடனத்தை விரைவாக நிறைவேற்ற வேண்டும் என்று இரு தரப்புகளும் கோருகின்றன, இதற்காக இந்துப் பெருங்கடல் பற்றிய ஒரு மகாநாட்டை உடனடியாக கூட்ட வேண்டும் என்ற ஐ. நா. சங்கப் பொதுச் சபையின் தீர்மானத்தை இரு தரப்புகளும் ஆதரிக்கின்றன. இந்த லட்சியத்தை அடைவதில் இந்தியா, மற்ற கூட்டுச் சேரா நாடுகள் கொண்டுள்ள நாட்டத்தை சோவியத் யூனியன் உறுதியோடு ஆதரிக்கிறது*.

பரஸ்பர நம்பிக்கை நடவடிக்கைகளை கடல்கள், பெருங்கடல்கள் பரப்பிற்கும் மற்றும் தொலைக் கிழக்கிற்கும் பரப்பலாம் என்ற சோவியத் முன்மொழிவுகளின் நிறை வேற்றம் உலகில் நெருக்கடிச் சூழ்நிலைகளை அகற்றுவதிலும் தடுப்பதிலும் ஒரு முக்கியப் பங்காற்றக் கூடும். இந்துப் பெருங்கடலை அமைதி மண்டலமாக்குவது குறித்து இந்தியாவும் மற்ற கூட்டுச் சேரா நாடுகளும் கூறிய முன்மொழிகளின் சாரமும் இதுதான். இந்துப் பெருங்கடல் சம்பந்தமான சர்வதேச மகாநாட்டைக் கூட்டும் வரை இந்த நீர்பரப்பை பயன்படுத்தும் எல்லா அரசுகளும் இப்பிரதேசத்தின் நிலவரத்தை சிக்கலாக்கும் நடவடிக்கை களில் இறங்காமலிருக்கலாம் என்று சோவியத் யூனியன் முன்மொழிந்ததன் நோக்கமும் இதுதான். சோவியத் யூனியன் கூறும் முன்மொழிவுகள், அதாவது இப்பிரதேசத் திற்குப் பெரும் படைகளை அனுப்பாமலிருப்பது, இங்கு ஒத்திகைகளை நடத்தாமலிருப்பது, இக்கரையோரத்தில்

---

* பிராவ்தா, மே 22, 1985.

இல்லாத நாடுகளின் இராணுவத் தளங்களை விரிவுபடுத் தாமலும் நவீனமயப்படுத்தாமலும் இருப்பது உலக மக்கள் தொகையில் சுமார் மூன்றில் ஒரு பங்கினர் வாழும் இப்பரப்பில் பதட்ட நிலையைக் குறைக்கும்.

ஆசியாவின் தனிப்பட்ட பகுதிகளில் மட்டுமின்றி, மொத்தமாக ஆசியா முழுவதும் நிலையான சமாதானத் தையும் நம்பகரமான பாதுகாப்பையும் ஏற்படுத்தும் பிரச்சினை மேன்மேலும் அதிக முக்கியத்துவத்தைப் பெற்று வருவதை வாழ்க்கை காட்டுகிறது. ஆசியாவில் மொத்த மாயும் இதன் தனிப்பட்ட பகுதிகளிலும் பாதுகாப்பின் ஒரு சில அம்சங்கள் பற்றி சமீப ஆண்டுகளில் பல்வேறு நாடுகள் பல சமாதான யோசனைகளை முன்மொழிந்தன. இந்துப் பெருங்கடலை அமைதி மண்டலமாக மாற்றும் வளர்முக நாடுகளின் முன்மொழிவு, தொலைக் கிழக்கில் நம்பிக்கை மற்றும் பாதுகாப்பு நடவடிக்கைகள் பற்றிய சோவியத் முன்மொழிவு முதலியன (இவை ஏற்கனவே குறிப்பிடப்பட்டவையாகும்) இவற்றிலடங்கும். சோவியத் யூனியனும் சீன மக்கள் குடியரசும் தாம் முதலாவதாக அணு ஆயுதத்தைப் பயன்படுத்துவதில்லையென உறுதிமொழி மேற்கொண்டுள்ளன. மங்கோலிய மக்கள் குடியரசு ஒரு முக்கிய முன்மொழிவை வெளியிட்டது. அதாவது, ஆசிய, பசிபிக் பெருங்கடல் அரசுகள் பரஸ்பரம் தாக்குவதில்லை யென்றும் தம்மிடையேயான உறவுகளில் பலத்தைப் பயன் படுத்துவதில்லையென்றும் உடன்பாடு செய்து கொள்ளலாம் என்ற யோசனையைக் கூறியது. தென் கிழக்காசியாவில் சமாதானம், ஸ்திர நிலை, நல்லண்டை உறவுகள் மண் டலத்தை ஏற்படுத்தும் கருத்தை இந்தோசீன நாடுகள் வெளியிட்டதைப் பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டோம்.

தெற்காசியாவில் சமாதானத்தை பலப்படுத்தி, பரஸ்பர அனுகூலமுள்ள ஒத்துழைப்பை வளர்ப்பதைப் பற்றிய பிரச்சினைகளை இப்பிரதேச நாடுகள் நடைமுறை நோக்கில் விவாதிக்கின்றன. தெற்காசியப் பிரதேச ஒத் துழைப்பு ஸ்தாபனம் இந்நாடுகளின் சமூக-பொருளாதார வளர்ச்சி கடமைகளை நிறைவேற்றுவதற்கு மட்டுமின்றி, சமாதான சூழலுக்கு வகை செய்து இதை பலப்படுத்தவும் பரஸ்பர நம்பிக்கையையும் நல்லண்டை உறவுகளையும் ஏற்படுத்தவும் உதவ வேண்டும் என்பதற்கு சமாதான

சக்திகள், முக்கியமாக இந்தியா பாடுபடுகின்றன. ஏனெனில் இவையின்றி மக்களின் உண்மையான பாதுகாப்பை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது.

இப்பிரச்சினைகள் ஆசிய நாடுகளின் சமூக நல வட்டங்களுக்கும் கவலையைத் தருகின்றன. கூட்டுச் சேரா நாடுகள் ''பிரதேச அல்லது உட்பிரதேச மட்டத்தில் பரஸ்பரம் தாக்குவதில்லையென்றும் ஒத்துழைப்பு குறித்தும் ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளலாம், சமாதானத்திற்கோ இந்நாடுகளில் எந்த ஒரு நாட்டின் பாதுகாப்பிற்கோ அபாயம் ஏற்பட்டால் பரஸ்பரம் கலந்தாலோசனைகளை நடத்தலாம்'' என்று பிரபல இந்திய அரசியல், சமூக நலப் பிரமுகர் டி. என். கவுல் கூறியது இதற்கு உதாரணமாகும். ''இந்தியா இதில் முன்முயற்சியை மேற்கொள்ளலாம், ஏனெனில் இதன் பங்கேற்பு இப்படிப்பட்ட ஒப்பந்தங்களுக்கு அதிக முக்கியத்துவத்தைத் தரும்'' என்றார் டி. என். கவுல். இக்கருத்தின் ஆதரவாளர்கள் சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு பற்றிய சோவியத்-இந்திய ஒப்பந்தத்தின் நல் அனுபவத்தை சுட்டிக் காட்டுகின்றனர். ''இது பிரதேசத்தில் சமாதான, பாதுகாப்பு சக்திகளை பலப்படுத்தியுள்ளது, முந்தைய பத்தாண்டுகளை விட இன்று அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்குகிறது''* என்று டி. என். கவுல் நியாயமாக குறிப்பிட்டார்.

நிலையான சமாதானம் வேண்டுமென்றும் தம் மூல ஊற்றுகளும் முயற்சிகளும் சச்சரவுகளில் வீணாகாமல் சமூக, பொருளாதார பிரச்சினைகளின் தீர்வுகளுக்குச் செல்ல வேண்டுமென்றும் (ஏனெனில் இவர்களின் வாழ்க்கைத் தரம், பொருளாதாரம் மற்றும் கலாச்சாரத்தின் வளர்ச்சி முதலில் இதைத்தான் பொறுத்துள்ளன) ஆசிய மக்கள் விரும்புகின்றனர்.

எனவே 70ஆம் ஆண்டுகளின் நடுப்பகுதியில் ஐரோப்பாவில் பதட்ட நிலைத் தணிவு மேலோங்கிய போது, பிரபல ஆசிய அரசுப் பிரமுகர்கள், குறிப்பாக பிரதமர் இந்திரா காந்தி, இப்பதட்ட நிலைத் தணிவை மற்ற கண்டங்களுக்கு, முக்கியமாக ஆசியாவிற்கு பரவச் செய்யும்

---

* T. N. Kaul, "Developments in South Asia", *Indo-Soviet Seminar on International Affairs*, New Delhi, December 7—9, 1981, p. 10.

பிரச்சினையை முன்வைத்தார்கள். இன்றைய சூழ்நிலைகளில் உலக அமைதியை பலப்படுத்த இம்முயற்சிகளில் ஆசியாவும் தீவிர பங்கேற்க வேண்டும்.

நிச்சயமாக, இங்கு சமாதானத்திற்கும் பாதுகாப்பிற்கும் வகை செய்வது ஆசிய அரசுகளின் விவகாரம். இவற்றின் ஒத்திசைவான நடவடிக்கைகளும் குறிப்பிட்ட ஒரு கட்டத்தில் ஆசிய பாதுகாப்பு பிரச்சினை சம்பந்தமாக கூட்டு அணுகுமுறையை முடிவு செய்வதும் மேற்கூறிய லட்சியங்களை அடைவதில் முக்கியப் பங்காற்றக் கூடும். அது ஆசிய அரசுகளின் பொது நலன்களின் பாதுகாப்பை பற்றிய விஷயம்.

இது ஒரு கடினமான கடமை. ஆசிய நாடுகளின் இடையிலான மிகக் கணிசமான அரசியல், சமூக-பொருளாதார, தேசிய, கலாச்சார வேறுபாடுகள் நிச்சயமாக தம் பாதிப்பை ஏற்படுத்தும். ''வேறுபாடுகளின் ஏற்றத் தாழ்வு'' — பொருளாதார உள்ளாற்றல் மட்டங்கள், சமூக-பொருளாதார அமைப்புகளிலிருந்து அரசியல் மாறுபாடுகள் வரை — ஐரோப்பாவில் உள்ளதை விட மிக அதிகம் என்று சொன்னால் அது மிகையாகாது. இது தவிர, ஆசிய யதார்த்தத்தின் பல சிக்கல்களுக்கும் இடர்ப்பாடுகளுக்கும் காலனியாட்சி முறை காரணமாகும். ஐரோப்பாவிற்கு இப்பிரச்சினை இருக்கவில்லை. காலனியாட்சியாளர்களிடமிருந்து கிடைத்த பிரச்சினைகள், ஏகாதிபத்தியவாதிகளின் இன்றைய கொள்கைகளால் இன்னமும் ஆழமடைகின்றன; இவர்கள் புதிய சூழ்நிலைகளில், இராணுவ நிர்ப்பந்தம் முதல் பொருளாதார கடன்களை பயன்படுத்துவது வரை பல்வேறான வழிகளில், ''பிரித்தாளுதல்'' எனும் கோட்பாட்டைச் செயல்படுத்த முயலுகின்றனர்.

என்றாலும் கூட்டு முயற்சிகளால் சமாதானம், பாதுகாப்பிற்கு வகை செய்ய முடியும், இதற்கான போராட்டத்தில் முயற்சிகளை ஒன்றிணைக்க முடியும் என்பதற்கான உதாரணங்களை ஆசியா அறியும். இந்த விஷயத்தில், ஆசிய நாடுகளுக்கு இடையிலான உறவுகள் பற்றி 1947ஆம் ஆண்டு டில்லியில் நடைபெற்ற முதல் மகாநாட்டையும் 1954லும் 1962லும் நடந்த ஜினீவா கூட்டங்களையும் சுட்டிக்காட்டலாம். 1955ஆம் ஆண்டின் பாண்டுங் மகாநாட்டு முடிவுகளில் சமாதானம், பாதுகாப்பிற்கு வகை

செய்வதில் கூட்டு முயற்சிகளின் அவசியம் பற்றிய கருத்து அடங்கியுள்ளது.

இந்த நோக்கங்களை அடைய இன்று பல வழிகள் உள்ளன — இரு தரப்பு பேச்சுவார்த்தைகளையும் பல்தரப்பு கலந்தாலோசனைகளையும் நடத்தலாம், கருத்துப் பரி மாற்றத்திற்கும் கூட்டாக ஆக்கபூர்வமான தீர்மானங்களைத் தேடவும் பொது ஆசிய மகாநாட்டை நடத்தலாம். இது உண்மையிலேயே மிகப்பெரும் பிரச்சினையாகும், இதற்கு அக்கறையுள்ள அரசுகளுக்கு இடையே விரிவான, பன்முக விவாதங்கள் வேண்டும்.

இன்று இந்தியாவும் சோவியத் யூனியனும் பொதுவான கருத்து நிலைகளில் நின்று காலனியாதிக்கத்திற்கு எதிராயும் இனப்பாகுபாட்டு முறையை ஒழிக்க வேண்டும் என்றும் போராடுவது பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ''இனப்பாகுபாட்டை மாற்றியமைக்க முடியாது, இதை ஒழித்துக்கட்டத்தான் வேண்டும்'' என்று இந்திரா காந்தி மிகத் துல்லியமாகக் குறிப்பிட்டார். தென்னாப் பிரிக்க பிரச்சினைகள் எழும் போதெல்லாம் சர்வதேச அரங்குகளில் இந்திய ராஜதந்திரத்தின் அணுகுமுறை இப்படிப்பட்டதுதான். தென்னாப்பிரிக்கா நமீபியாவை சட்ட விரோதமாக ஆக்கிரமித்திருப்பதைக் கைவிட வேண்டுமென்றும் இதன் பரப்பிலிருந்து தென்னாப்பிரிக்கத் துருப்புகள் வெளியேற வேண்டுமென்றும் சோவியத் யூனியனும் இந்தியாவும் கோருகின்றன. ஐ. நா. பாதுகாப்பு கவுன்சிலின் 435 மற்றும் 539ஆவது தீர்மானங்களுக்கேற்ப நமீபிய மக்களுக்கு உடனடியாக சுதந்திரம் வழங்கப்பட வேண்டுமென சோவியத் யூனியனும் இந்தியாவும் மக்களின் சுதந்திரம், முன்னேற்றத்திற்காகப் போராடும் அனைவரும் கோருகின்றனர்.

1985 ஏப்ரலில் டில்லியில் நடைபெற்ற கூட்டுச் சேரா இயக்க ஒருங்கிணைப்பு காரியாலயத்தின் கூட்டம் நமீபிய மக்களின் நியாயமான போராட்டத்திற்கான சர்வதேச ஆதரவை அதிகப்படுத்தி விரிவுபடுத்துவதில் பெரும் பங்காற்றியது. இதற்கான ஏற்பாடுகளைச் செய்வதிலும் தெட்டத் தெளிவான ஏகாதிபத்திய எதிர்ப்புத் திசையமைவை யுடைய இதன் முக்கிய ஆவணங்களை உருவாக்குவதிலும் இந்தியா பெரும் பங்காற்றியது; இக்கூட்டத்தின் போதுதான்

**சுவாப்போ*** ஸ்தாபனத்திற்கு ராஜதந்திர பிரதிநிதித்துவ அந்தஸ்தை இந்தியா அளித்தது.

சோவியத் யூனியனும் இந்தியாவைப் போன்றே **சுவாப்போவை** நமீபிய மக்களின் ஒரே உண்மையான பிரதிநிதியாக இடையறாது ஆதரிக்கிறது. அண்டை நாடுகளுக்கு எதிரான தென்னாப்பிரிக்காவின் ஆக்கிரமிப்பு, சீர்குலைவு நடவடிக்கைகள் நிறுத்தப்பட வேண்டுமென்றும் தன் அண்டை அரசுகளின் அரசுரிமை, சுதந்திரம் மற்றும் பிரதேச முழுமையை பிரிட்டோரியா இடையறாது மதித்து நடக்க வேண்டுமென்றும் நம்மிரு நாடுகளும் உறுதியாக கோருகின்றன.

ஏகாதிபத்தியவாதிகளால் ஊக்குவிக்கப்படும் தென்னாப் பிரிக்க ஆட்சியாளர்களின் சதித் திட்டங்களுக்கு எதிரான போராட்டத்தில் அங்கோலா, மொசம்பிக், மற்ற ''போர் முனை'' அரசுகள் ஆகியவற்றிற்கு சோவியத் யூனியன் சர்வாம்ச உதவியளிக்கிறது. இந்தியாவைப் பொறுத்தமட்டில் இது ''போர்முனை'' அரசுகளுக்கு உலகம் அளிக்கும் உதவியையும் ஆதரவையும் விரிவுபடுத்த வேண்டுமென ஐ. நா. மேடையிலிருந்தும் மற்ற சர்வதேச அரங்கு களிலிருந்தும் பன்முறை அறைகூவல் விடுத்தது. அப்போது தான் இந்திய தூதுக்குழுவின் தலைவர் ஐ. நா. சங்கப் பொதுச் சபை அமர்வுகளில் ஒன்றில் கூறியபடி, இந்த அரசுகள் பிரிட்டோரியாவின் இடையறா ஆக்கிரமிப்பு மற்றும் சீர்குலைவு நடவடிக்கைகளையும் அச்சுறுத்தல் களையும் உறுதியாக எதிர்த்து நிற்க இயலும்.

மக்களின் விடுதலை, சுதந்திர லட்சியங்களுக்கு இந் தியாவும் சோவியத் யூனியனும் அளிக்கும் ஆதரவு, மத்திய அமெரிக்கா மற்றும் கரிபியன் கடல் பகுதியில் உள்ள சம்பவங்களின் பாலான இந்நாடுகளின் நிலைகளிலும் நன்கு வெளிப்படுகிறது. தம் வளர்ச்சிப் பாதையை வெளித் தலையீடின்றி சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் உண்டு என்பதன் அடிப் படையில் இப்பிரதேச அரசுகளின் விஷயத்தில் சகலவித

---

* **சுவாப்போ** — தென் மேற்கு ஆப்பிரிக்காவின் மக்கள் ஸ்தாபனம், 1960இல் தோற்றுவிக்கப்பட்டது. இது தென்னாப்பிரிக்க காலனியாட்சியாளர் களுக்கு எதிரான நமீபிய மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்குத் தலைமை தாங்குகிறது.

நிர்ப்பந்தங்களும் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளும் நிறுத்தப்பட வேண்டுமென்று சோவியத் யூனியனும் இந்தியாவும் கோரு கின்றன. கியூபாவிற்கு எதிராக அமெரிக்க ஏகாதிபத்தியத் தால் நடத்தப்படும் ஆத்திரமூட்டும் பிரச்சாரம் மற்றும் அச்சுறுத்தல், நிக்கராகுவா நாட்டிற்கு எதிரான அமெரிக்கா வின் பிரகடனப்படுத்தப்படாத யுத்தம், சால்வடோரின் விவகாரங்களில் ஏகாதிபத்தியவாதிகளின் முரட்டுத்தனமான தலையீடு, கிரினாடாவிற்கு எதிரான குற்ற நடவடிக்கை— இவையெல்லாம் சர்வதேச உறவுகள் பற்றிய பொது வரையளவுகளை மீறுவதோடு கூட மக்களின் சுய உரிமைகளை அப்பட்டமாக மீறுவதுமாகும். இம்மக் களின் ''குற்றம்'' எல்லாம் இவர்கள் தம் விருப்பப்படி வாழ விரும்புவதேயாகும்.

நவீன சகாப்தத்தின் சிறப்பு அம்சங்களில் ஒன்று கூட்டுச் சேரா இயக்கத்தின் பங்கும் முக்கியத்துவமும் இடையறாது உயர்ந்துள்ளதாகும். இது நம் காலத்தின் செல்வாக்குள்ள சக்தியாக மாறியுள்ளது. ஒன்றரை பில்லியனுக்கும் கூடுதலான மக்கள் வாழும் நூற்றுக்கும் மேற்பட்ட அரசுகள் இதில் ஒன்று திரண்டு நிற்பதில் மட்டும்—இதுவே ஒரு மிக முக்கிய அம்சம் என்ற போதிலும்— விஷயம் அடங்கியிருக்கவில்லை. சமாதானத்தைப் பேணிக் காத்து வலுப்படுத்துவதிலும் ஆயுதப் போட்டியை மட்டுப் படுத்துவதிலும் கூட்டுச் சேரா நாடுகள் மேன்மேலும் அதிகப் பங்காற்றுகின்றன. இவை நவீன காலத்தின் மிகப் பெரும் சமாதான சக்திகளில் ஒன்றாக மேன்மேலும் வெளிப்படையாக போராடுகின்றன. இதில் இந்தியாவிற்கும் பெரும் பங்குண்டு. இன்றைய உலகின் முக்கிய பிரச்சினை களின் தீர்விற்காக இது கூட்டுச் சேரா நாடுகளை அணி திரட்ட பெரிதும் பாடுபடுகிறது.

1983 மார்ச் மாதம் டில்லியில் நடைபெற்ற கூட்டுச் சேரா நாடுகளின் அரசு, அரசாங்கத் தலைவர்களின் மகாநாடு, கூட்டுச் சேரா இயக்க வளர்ச்சியிலும் சமாதான சக்திகளின் பொது முயற்சிகளில் இதன் பங்கை அதிகப் படுத்துவதிலும் முக்கிய மைல் கல்லாக அமைந்தது. இம்மகாநாடு யுத்தம் மற்றும் சமாதானம் பற்றிய பிரச் சினைகளை கூட்டுச் சேரா நாடுகளின் முன், மொத்தமாக வளர்முக நாடுகளின் முன் உள்ள முக்கிய சமூக-பொருளா

தார பிரச்சினைகளுடன் நெருக்கமாகத் தொடர்புபடுத்தி இவற்றின் மீது முக்கியக் கவனம் செலுத்தியது. இந்திரா காந்தியின் முன்மொழிவின்படி மகாநாட்டில் ஏற்கப்பட்ட டில்லி பிரகடனத்தில் சமாதானம் மற்றும் சமாதான சகவாழ்வு, படைக்கலைப்பு, சுதந்திரம், வளர்ச்சி ஆகியவை தான் நம் காலத்தின் மையப் பிரச்சினைகளாகும். ஆனால் உலகம் நியாயம் மற்றும் சமத்துவத்தின் அடிப்படையில் அமைய வேண்டும், ஏனெனில் காலனியாதிக்கத்தாலும் நவீன காலனியாதிக்கத்தாலும் நிலைநாட்டப்பட்ட தாங்க இயலா சமமின்மையும் சுரண்டலும் உலகில் பதட்ட நிலை, சச்சரவுகள், வன்முறையின் முக்கியத் தோற்றுவாய் களாகும் என்று கூறப்பட்டிருந்தது. மகாநாட்டின் அரசியல் பிரகடனத்தில் பயன்மிகு சர்வதேச கண்காணிப்பின் கீழ் ஆயுதங்களை, குறிப்பாக அணு ஆயுதங்களை சர்வாம்ச, முழு படைக்கலைப்பிற்கு உள்ளாக்குவதன் மூலம் மட்டுமே சர்வதேச அமைதிக்கும் பாதுகாப்பிற்கும் வழிகோல முடியும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

அணு ஆயுதத்தை வைத்திராத அரசுகள் அச்சுறுத் தலுக்கு ஆளாகா அல்லது அணு ஆயுதங்களைப் பயன் படுத்தி தாக்குதலுக்கு உட்படுத்தப்படா என்று இந்நாடு களுக்கு அணு ஆயுத வல்லரசுகள் உத்திரவாதம் தர வேண்டுமென கூட்டுச் சேரா நாடுகள் அறைகூவல் விடுத்தன. இரசாயன ஆயுதத்தை தடை செய்யும் ஒப்பந் தத்தை உடனடியாகச் செய்து கொள்ள வேண்டியதன் அவசியம் சுட்டிக் காட்டப்பட்டது, விண்வெளிப் பரப்பு முற்றிலுமாக சமாதான நோக்கங்களுக்காக மட்டுமே பயன் படுத்தப்பட வேண்டுமென கோடிட்டுக் காட்டப்பட்டது.

கூட்டுச் சேரா இயக்கத்தின் இராணுவ எதிர்ப்பு, ஏகாதிபத்திய எதிர்ப்பு, காலனி எதிர்ப்புத் திசையமைவை பேணிக் காத்து வலுப்படுத்துவதில், கூட்டுச் சேரா இயக் கத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் இதன் மூலவர்களால் (குறிப்பாக ஜவகர்லால் நேருவால்) எந்த வடிவத்தில் முன்வைக்கப்பட்டனவோ அதே வடிவத்தில் அவற்றை பின்பற்ற வேண்டுமென பாடுபடும் சக்திகள் (முதலாவதாக இந்தியா) முக்கியப் பங்காற்றுகின்றன. இராணுவ-அரசியல் கூட்டுகளில் சேரக் கூடாது என்று கூறும் இந்த இயக்கத்திற்கு நடுநிலையை வகிக்க வேண்டுமென்றோ, ஆக்கிரமிப்பு,

மேலாதிக்கவாத, ஆக்கிரமிப்புச் சக்திகளுக்கு தீவிர எதிர்ப்பு காட்டாமல் இருக்க வேண்டுமென்றோ பொருளாகாது; யுத்தம் மற்றும் சமாதானம் பற்றிய பிரச்சினைகளையும் காலனியாதிக்கம் மற்றும் நவீன காலனியாதிக்கத்திற்கு எதிரான மக்களின் போராட்டத்தையும் இது அலட்சியப் படுத்தாது.

கூட்டுச் சேரா அரசுகளின் இயக்கத்தின் ஆக்கபூர்வமான பங்கு வளர்ந்து வருவது குறித்து சோவியத் யூனியனும் எல்லா சமாதான சக்திகளும் பெரும் திருப்தி கொள்கின்றன. கூட்டுச் சேரா இயக்கத்தின் வெற்றிகளும் சர்வதேச நிலவரத்தின் வளர்ச்சி மீது இதன் செல்வாக்கு அதிகரித்துள்ளதும் வளர்முக நாடுகளின் முன்னுள்ள முக்கியப் பிரச்சினைகளின் தீர்விற்கான அனுகூலமான சூழ்நிலைகளை ஏற்படுத்த உதவும் என்பதில் சந்தேகமேயில்லை. ஏனெனில் சமாதானம் எவ்வளவுக்கெவ்வளவு நம்பகரமானதாயும் உறுதியானதாயும் இருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு வெற்றிகரமாக அவை தேசிய புனரமைப்பு, பொருளாதாரம், சமூக முன்னேற்றம் சம்பந்தமான சிக்கலான கடமைகளை நிறைவேற்றும். காலனியாதிக்கப் பழமையை வளர்முக நாடுகள் வெற்றிகரமாக கடக்க வேண்டும் என்பதில் சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் அக்கறை கொண்டுள்ளன.

கூட்டுச் சேரா அரசுகளுக்கும் சோஷலிச நாடுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பு வலுவடைந்ததானது கூட்டுச் சேரா இயக்கத்தின் சர்வதேச செல்வாக்கு மேற்கொண்டு வளர்ந்ததற்கான காரணிகளில் ஒன்றாகும். எந்த உலகில் தான் அதிகாரம் செய்து ஆண்டு வந்ததோ அந்த உலகம் தனக்கு கீழ்ப்படிய மறுப்பதை ஏகாதிபத்தியத்தால் ஒப்புக் கொள்ள இயலவில்லை. வளர்முக நாடுகளின் இயற்கைச் செல்வங்களை தன் விருப்பத்திற்கேற்ப பயன்படுத்தவும் இந்நாடுகளின் பரப்புகளை தம் போர்த்தந்திர திட்டங் களுக்கேற்ப பயன்படுத்தவும் இவற்றை தனக்கு கீழ் கொண்டு வர பல வழிகளில் ஏகாதிபத்தியம் முயலுகிறது.

கூட்டுச் சேரா இயக்க உறுப்பு நாடுகளை பரஸ்பரம் ஒவ்வொன்றிற்கு எதிராக வைத்து அவற்றின் ஒற்றுமையைக் குலைக்கும் முயற்சிகளைத் தீவிரப்படுத்துவதை இதற்கான முக்கிய வழிகளில் ஒன்றாக ஏகாதிபத்திய மற்றும் நவீன

காலனியாதிக்க வட்டங்கள் கருதுகின்றன. "இப்படிப்பட்ட பலத்த வெளி நிர்ப்பந்தத்திற்கு நம் இயக்கம் இது வரை உட்பட்டதேயில்லை, சமீப காலமாக நமது ஒற்றுமையைக் குலைக்கும் வகையில் காணப்படும் இவ்வளவு தீவிர உள் பிரச்சினைகளை சந்தித்ததும் இல்லை"* என்று கியூபத் தலைவர் ஃபிடேல் காஸ்ட்ரோ கூறினார்.

கூட்டுச் சேரா நாடுகளின் சுதந்திரத்தைக் குலைக்கவும் ஏகாதிபத்திய மிரட்டல் மற்றும் ஆக்கிரமிப்புக் கொள்கைக்கு இவற்றின் எதிர்ப்பைக் குறைக்கவும் முக்கிய மேற்கத்திய நாடுகள், குறிப்பாக அமெரிக்க ஐக்கிய நாடு இந்நாடுகளுக்கும் சோஷலிச அரசுகளுக்கும், குறிப்பாக சோவியத் யூனியனுக்கும் இடையிலான ஒத்துழைப்பைக் குலைப்பதன் மீது பெரும் கவனம் செலுத்துகின்றன. இதுதான் ஏகாதிபத்தியத்தின் செயல்திட்டம் மற்றும் செயல்முறையின் முக்கிய, அடிப்படை அம்சங்களில் ஒன்று என்று எவ்வித மிகைப்படுத்தலுமின்றி நிச்சயமாகக் கூற முடியும். சமீப காலமாக ஏகாதிபத்தியத்தின் உலக நிலை பலங்குன்றி, சோஷலிசத்தின் வல்லமையும் சர்வதேச விவகாரங்களில் விடுதலையடைந்த அரசுகளின் பங்கும் செல்வாக்கும் அதிகரித்து வரும் ஒரு சூழ்நிலையில் இந்தப் போக்கு கணிசமாக பலப்பட்டுள்ளது. விடுதலையடைந்த மற்றும் சோஷலிச அரசுகளின் நலன்களுக்கு விரோதமான கொள்கையை நிறைவேற்ற மிகப் பல்வேறான வழிகள் பயன்படுத்தப்படுகின்றன. மாயையான "சோவியத் இராணுவ ஆபத்து", பொய்யான "கம்யூனிச அபாயம்" என்பவற்றைக் காட்டி வளர்முக நாடுகளையும் கூட்டுச் சேரா நாடுகளையும் அச்சுறுத்த ஏகாதிபத்தியவாதிகள் முயலுகின்றனர். ஏகாதிபத்திய வல்லரசுகளின் லட்சியங்களை அடைய சர்வதேச பயங்கரவாத பிரச்சினையையும் பயன்படுத்த வெறித்தனமாக முயற்சி செய்யப்படுகிறது. தேசிய விடுதலை இயக்கங்களுடனான சோவியத் யூனியனின் ஒருமைப்பாட்டையும் ஒத்துழைப்பையும் பயங்கரவாதத்திற்கான ஆதரவாகச் சித்தரிக்க மேலைய நாடுகளில், குறிப்பாக அமெரிக்க ஐக்கிய நாட்டில் சிலர் முயலுகின்றனர். அதுவும், சொந்த அரசை ஏற்படுத்தும் பாலஸ்தீன மக்களின்

* *New Times*, № 12, March 18, 1983.

சட்ட பூர்வமான உரிமைக்காகப் போராடும் பாலஸ்தீன விடுதலை முன்னணியின் உறுப்பினர்களையும், நமீபிய விடுதலைப் போராட்ட வீரர்களையும் இராணுவ-பயங்கர வாத சர்வாதிகாரத்திற்கு எதிராகப் போராடும் சால் வடோர் தேசபக்தர்களையும் இந்தப் ''பட்டியலில் சேர்க் கின்றனர்''. ஆனால் சீக்கியர்களின் காலிஸ்தான் அரசு என்றழைக்கப்படுவதை ஏற்படுத்துவதற்கான பிரிவினைவாதக் கிளர்ச்சியை ஏகாதிபத்தியத்தின் மிகப் பிற்போக்கான வட்டங்கள் தேசிய விடுதலை இயக்கமாக சித்தரிக்கின்றன. இதன் நோக்கம் வெள்ளிடை மலை — விடுதலையடைந்த அரசுகளில் உள்ள செல்வாக்கு மிக்க சமுதாய அரசியல் சக்திகளைக் குழப்புவது, ஏதோ சோவியத் யூனியனின் கொள்கைதான் சர்வதேச பதட்ட நிலையின் மூல ஊற்று என்று சித்தரிப்பது, இறுதியாக சோவியத் யூனியனுடன் இளம் அரசுகளுக்கு உள்ள ஒத்துழைப்பைக் குலைப்பது என்பதுதான் இவற்றின் நோக்கங்களாகும்.

உலக அரங்கில் கூட்டுச் சேரா இயக்கத்திற்கு ஏதோ சுயமான பாத்திரம் இல்லை என்பது பற்றிய ஏகாதிபத்திய வட்டங்களின் கற்பனைகள் மேற்கூறியவற்றை நோக்கமாகக் கொண்டவை, இளம் தேசிய அரசுகளின் நிலைகளையும் இவற்றின் பலமடைந்து வரும் சர்வதேச நிலைகளையும் பாழ்படுத்துவதை நோக்கமாகக் கொண்டவை. எனவே வல்லரசுகளிடமிருந்து ''சம அளவில் விலகி நிற்பது'' மற்றும் ''உண்மையான கூட்டுச் சேராமை'' பற்றிய கருத்துகளை மேற்கே உடனடியாகப் பற்றிக் கொண்டு ஆதரவு தருவதில் வியப்பேதுமில்லை.

இன்றைய உலகின் செல்வாக்கு மிக்க இரண்டு சமாதான சக்திகளாகிய சோஷலிச நாடுகளுக்கும் கூட்டுச் சேரா இயக்க நாடுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பை வளர்த்து வலுப்படுத்துவது என்பது நவீன காலனியாதிக்க வாதிகள், ஏகாதிபத்தியவாதிகளின் சதித் திட்டங்களின் முன் விடுதலையடைந்த அரசுகளின் உறுதியை அதிகப் படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. உலக அரசியலில் சமத்துவம் மற்றும் நியாயக் கோட்பாடுகள் நிலைபெறவும் சர்வதேச உறவுகளில் சமாதான சகவாழ்வுக் கோட்பாடு கோலோச்சவும் மேற்கூறிய ஒத்துழைப்பு முக்கிய நிபந்தனை யாகும். இந்த ஒத்துழைப்பின் பயனாய், ''காலனி நாடுகள்

மற்றும் மக்களினங்களுக்குச் சுதந்திரம் வழங்குவது பற்றிய பிரகடனம்'', ''அரசுகளின் உள்விவகாரங்களில் ஆக்கிரமிப்பு களையும் தலையீடுகளையும் அனுமதிக்காதிருப்பது பற்றிய பிரகடனம்'' போன்ற வரலாற்று சிறப்பு மிக்க ஆவணங்களை ஐ. நா. சங்கத்தில் நிறைவேற்ற முடிந்தது; இவை உலக அரசியல் சூழலின் மீது நல்ல தாக்கத்தைச் செலுத்தின. ஐ. நா. சங்க பொதுச் சபையால் ஆமோதிக்கப்பட்ட சோவியத் முன்மொழிவுகளை, உதாரணமாக, ''அணு ஆயுதப் பேரழிவை தடுப்பது பற்றிய பிரகடனம்'', ''அரசு பயங்கரவாதத்தையும் சுய அரசுகளின் சமுதாய-அரசியல் அமைப்பைக் குலைப்பதை நோக்கமாகக் கொண்ட மற்ற நடவடிக்கைகளையும் அனுமதிக்காதிருப்பதைப் பற்றிய பிரகடனம்'' ஆகியவற்றை பெரும்பாலான கூட்டுச் சேரா நாடுகள் ஆதரித்தன.

சமீப சோவியத்-இந்திய ஆவணங்களில் ஒரு முக்கிய அம்சம் காணப்படுகிறது. இது சமத்துவம், நியாயம், ஜனநாயகத்தின் அடிப்படையில் சர்வதேச பொருளாதார உறவுகளை மாற்றியமைப்பதைப் பற்றியது. இந்த முக்கியப் பிரச்சினையின் தீர்வு வளர்முக நாடுகள் மற்றும் சோஷலிச நாடுகளின் மக்கள் உட்பட மனிதகுலம் அனைத்தின் நலன்களுக்கும் உகந்ததாயிருக்கும்.

ஆனால் முக்கிய ஏகாதிபத்திய வல்லரசுகள், குறிப்பாக அமெரிக்க ஐக்கிய நாடு, பொருளாதாரத் துறையில் சர்வதேச உறவுகளின் அடிப்படைக் கோட்பாடுகளை வெளிப்படையாக, முரட்டுத்தனமாக மீறுகின்றன. வளர்முக நாடுகளுக்கு எதிரான சீர்குலைவு பொருளாதார நட வடிக்கைகளும் தனிப்பட்ட சோஷலிச அரசுகளுக்கு எதிராக தடை நடவடிக்கைகள் என்றழைக்கப்படுபவைகளை பிர கடனப்படுத்துவதும் இதற்குச் சான்று பகர்கின்றன.

பொருளாதார சுதந்திரத்தை அடைவது, கடுமையான சமூக பிரச்சினைகளைத் தீர்ப்பது, உண்மையான சமத் துவ, நியாயமான வெளி பொருளாதார உறவுகளை நிலை நாட்டுவது என்பதுதான் புதிய சர்வதேச பொருளாதார முறையின் இறுதி நோக்கமாகும் என்று வளர்முக நாடுகள் கருதுகின்றன. ஆனால் ஏகாதிபத்திய அரசுகளின் கொள் கையும் ஆயுதப் போட்டியை முடுக்கி விடும் போக்கும் இதற்கு இடையூறாக உள்ளன. இன்று மேற்கத்திய

நாடுகளில் ஆயுதப் போட்டிக்கான செலவுகள், அனைத்து வளர்முக நாடுகளின் மொத்த தேசிய உற்பத்திப் பொருளில் 50%க்கும் கூடுதலாக உள்ளன. இராணுவச் செலவுகளின் அதிகரிப்பு பணவீக்க அதிகரிப்பிற்கும் வளர்முக நாடுகளின் வர்த்தகச் சூழல்கள் மோசமடைவதற்கும் இட்டுச் செல்கிறது. இது தவிர, சோஷலிச நாடுகளை விட மேம்பாடான நிலையை அடையலாம் என்ற ஒரு மாயையான நோக்கத்தோடு ஏகாதிபத்தியவாதிகள் இராணுவ வெறியைத் தூண்டி விடுவதும் ஆயுதப் போட்டியை முடுக்கி விடுவதும் பொருளாதார வளர்ச்சிக்கான முக்கிய முன்தேவையாகிய சமாதானத்தைக் குலைக்கின்றன.

சகல வித ஆயுதங்களையும் குறைத்து, அணு ஆயுதப் பேரழிவு அபாயத்தை அகற்றுவதை நோக்கமாகக் கொண்ட பல முக்கிய முன்மொழிவுகளின் நிறைவேற்றம் ஏகாதிபத்திய வட்டங்களின் குற்றத்தால் தடைப்பட்டது. புதிய சர்வதேச பொருளாதார முறையில் வளர்முக நாடுகளின் முன்மொழிவுகளை நிறைவேற்றும் பாதையில் ஏகாதிபத்தியவாதிகள் பல தடைகளை இடுகின்றனர். இவர்களுடைய சதிகளின் விளைவாய் ஐ. நா. வரம்புகளில் சர்வதேச அந்நியச் செலவாணி-நிதி மகாநாட்டை கூட்ட முடியாமல் இருக்கிறது, மிகச் சிக்கலான உலகப் பொருளாதார பிரச்சினைகள் சம்பந்தமான உலகளாவிய பேச்சு வார்த்தைகள் ஒவ்வொரு ஆண்டும் ஒத்திப் போடப்பட்டு வருகின்றன. வளர்முக நாடுகளின் பொருளாதார நிலையை மேம்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட ஐ. நா. தீர்மானங்களைச் செயல்படுத்த மேலைய நாடுகள் தடையாக உள்ளன. ''80ஆம் ஆண்டுகளுக்கான சர்வதேச வளர்ச்சி பற்றிய நீண்ட கால கொள்கை'', ''அரசுகளின் பொருளாதார உரிமைகள், கடமைகள் பற்றிய சாசனம்'', ''புதிய சர்வதேசப் பொருளாதார முறையை ஏற்படுத்துவது பற்றிய பிரகடனம்'' முதலியன இத்தீர்மானங்களில் சிலவாகும்.

ஏகாதிபத்திய வல்லரசுகளின் தெட்டத் தெளிவான தடைப்போக்கு வளர்முக நாடுகளின் சுரண்டலைத் தொடரவும் இதை அதிகப்படுத்தவும் இவை கொண்டுள்ள நாட்டத்துடன் நெருக்கமாகத் தொடர்புடையது. வட்டி, பன்னாட்டு ஏகபோகங்களின் லாபங்கள், பாகங்கள் முதலிய வடிவங்

களிலும் வெளிக் கடனை திருப்பித் தருவதன் மூலமும் ஆண்டுதோறும் பல பில்லியன் டாலர்கள் மேற்கத்திய நாடுகளுக்குச் செல்கின்றன. முந்தைய நூற்றாண்டுகளில் முன்னாள் தலைநாடுகள் அடித்த கொள்ளையை விட காலனியாதிக்க முறை தகர்ந்து விழுந்ததற்குப் பிந்தைய ஆண்டுகளில் ஏகாதிபத்திய வல்லரசுகள் அதிக செல்வத்தை எடுத்துச் சென்றுள்ளன. நவீன காலனியாதிக்க சுரண்டலுக்கு எதிராயும் அதிகாரம் மற்றும் மிரட்டல்களின் சகல வித வெளிப்பாடுகளுக்கு எதிராயும் ஏகபோகங்களின் நடவடிக் கையை மட்டுப்படுத்தவும் உறுதியாகவும் தொடர்ச்சி யாகவும் போராடுவதை விட, தம் சுதந்திரத்தையும் பொருளாதாரச் சார்பின்மையையும் காப்பாற்ற வளர்முக நாடுகளுக்கு வேறு நல்ல சாதனம் இல்லையென நடைமுறை காட்டுகிறது.

தம் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றுவதிலும் தம் சுதந்திரத்தை வலுப்படுத்துவதிலும் சோவியத் யூனியனும் பொதுவாக சோஷலிச நாடுகளும் விடுதலையடைந்த நாடு களுக்கு ஆதரவு அளித்து வந்துள்ளன, தொடர்ந்து ஆதரவளிக் கும். 1965 ஜனவரி 1ஆம் தேதி முதல் சோவியத் யூனியன் வளர்முக நாடுகளின் எல்லாப் பொருட்களின் இறக்குமதிக் கும் உள்ள சுங்கத் தீர்வைகளை அகற்றி இந்நாடுகளுக்கு ஒரு தலைப்பட்சமான, பாகுபாடற்ற சார்தகவு நிலையை வழங்கியது.

1984 ஜூன் மாதம் பரஸ்பர பொருளாதார உதவி கவுன்சிலின் உறுப்பு நாடுகளின் பொருளாதார பிரச் சினைகள் சம்பந்தமான கூட்டத்தில் மற்ற சோஷலிச நாடுகளோடு சேர்ந்து சோவியத் யூனியன் சர்வதேச உறவுகளை சீர்படுத்தும் ஆக்கபூர்வமான செயல்திட் டத்தை முன்மொழிந்தது. தடையற்ற சர்வதேச பொருளா தார ஒத்துழைப்பிற்கு வகை செய்யும் கோரிக்கை இதன் அடிப்படையாக உள்ளது. வளர்முக நாடுகளின் ஏற்றுமதிப் பொருட்களுக்கு நியாயமான விலைகளை நிலைநாட்டுவதை யும் செயற்கையான வர்த்தகத் தடைகளை அகற்றுவதையும் பன்னாட்டு ஏகபோகங்களின் நடவடிக்கை மீதான கண் காணிப்பை அதிகப்படுத்துவதையும் இது முன்னனுமானிக் கிறது. அந்நியச் செலாவணி-நிதி உறவுகளை ஒழுங்கு படுத்துவது, உயர்வான வட்டி விகிதங்களைக் கைவிடுவது,

கடன் வழங்கும் நிபந்தனைகளையும் இவற்றைத் திருப்பித் தரும் முறையையும் ஒழுங்குபடுத்துவது ஆகியவற்றிற்கு கோட்பாட்டு ரீதியான முக்கியத்துவம் உண்டு.

பொருளாதார ரீதியாக காலனியாதிக்கத்திலிருந்து விடுபடவும், தம் இயற்கைச் செல்வங்கள், மற்ற மூல ஊற்றுகளின் விஷயத்தில் முழு சுய உரிமைக்காகவும், பொருளாதார சுதந்திரத்திற்காகவும், சர்வதேசப் பொருளாதார பிரச்சினைகளின் தீர்வில் பரவலாகவும் சம உரிமையின் அடிப்படையிலும் பங்கேற்கவும், மூலதனம் வெளியேறுவதையும் தேர்ச்சி மிகு ஊழியர்கள் வெளியே செல்வதையும் தடுப்பதற்காகவும், பொது சார்தகவு நிலை முறையை நிபந்தனையற்று பயன்படுத்தவும் (வளர்முக நாடுகளின் பொருளாதார நிலை சீர்கேடடைவதற்கு எதிராக நிற்கும் அவசியமும் இவற்றின் முன்னேற்றத்திற்கு உதவுவதும் இவற்றின் நோக்கங்களாகும்) வளர்முக நாடுகள் நடத்தும் போராட்டத்தில் இவற்றின் நியாயமான கோரிக்கைகளை பரஸ்பர பொருளாதார உதவி கவுன்சிலின் உறுப்பு நாடுகள் ஆதரிக்கின்றன என்று 1984 ஜூன் மாத மாஸ்கோ மகாநாட்டு ஆவணங்களில் கூறப்பட்டுள்ளது.

விடுதலையடைந்த நாடுகளின் கஷ்டங்களுக்கு குற்றவாளிகளாகத் திகழும் முன்னாள் தலைநாடுகளும் ஏகாதிபத்திய நாடுகளும் சர்வதேச ஏகபோகங்களும் காலனியாதிக்க கொள்ளையின் விளைவாயும் நவீன காலனியாதிக்கச் சுரண்டலாலும் ''மூன்றாவது உலகிற்கு'' ஏற்படுத்திய இழப்புகளுக்கு ஈடு செய்யும் வகையில் இந்நாடுகளுக்கான உதவியை கணிசமாக அதிகரிக்க வேண்டும்; அனுகூலமான நிபந்தனைகளில் இளம் அரசுகளுக்கு சர்வதேசக் கடன்கள் கிட்டுமாறு செய்ய வேண்டும் என்று சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் கருதுகின்றன.

முக்கிய உலகப் பொருளாதார பிரச்சினைகளின் தீர்வில் ஐ. நா. சங்கம், மற்ற சர்வதேச ஸ்தாபனங்களின் பங்கைக் குலைக்க புதிய சர்வதேசப் பொருளாதார முறையின் எதிரிகள் சகல விதங்களிலும் முயலுகின்றனர். இச்சூழ்நிலையில் மிக முக்கிய சர்வதேசப் பொருளாதார பிரச்சினைகள் சம்பந்தமாக, எல்லா அரசுகளின் பங்கேற்போடு, இவற்றின் சட்டபூர்வமான நலன்களைக் கவனத்தில் கொண்டு ஐ. நா. வரம்புகளில் உலகளாவிய பேச்சுவார்த்தை

களை நடத்த வேண்டுமென்று சோவியத் யூனியனும் இதன் நட்பு நாடுகளும் கோருவது மிகவும் முக்கியமானது.

சோவியத் யூனியன் எந்த நடவடிக்கைகளுக்காகப் போராடுகின்றதோ அவை இந்தியா, மற்ற விடுதலையடைந்த அரசுகளின் அடிப்படை, ஜீவாதார நலன்களுக்கு உகந் தவையாக உள்ளன. பின்தங்கிய நிலையை அகற்றுவது, மிகப் பல்வேறான துறைகளில் சர்வதேச உறவுகளின் சீரிசைவான வளர்ச்சிக்கான சூழ்நிலைகளை ஏற்படுத்துவது என்பதுதான் இவற்றின் நோக்கமாகும். இவையனைத்தும் பொருளாதார ஸ்திர நிலை, சர்வதேச அரசியல் சூழலை சீர்படுத்துவது ஆகியவற்றிற்கான அடிப்படைக் காரணிகளில் சிலவாகும். விடுதலையடைந்த அரசுகளின் பிரச்சினைகளை யார் அதிகப்படுத்துகின்றனர், இவற்றின் தீர்விற்கு யார் சகல விதங்களிலும் உதவுகின்றனர், முந்தைய காலனிகளை சுரண்டுவதற்காக அப்படியே வைத்திருக்க யார் விரும்பு கின்றனர், தம் அரசுரிமையை பலப்படுத்தவும் பொருளா தார சுதந்திரம், முன்னேற்றப் பாதையில் உறுதியாகச் செல்லவும் யார் இந்நாடுகளுக்கு உதவுகின்றனர் என்பதை உண்மைகள் நன்கு காட்டுகின்றன. இப்படிப்பட்ட நிலையில் நவீன சர்வதேசப் பொருளாதார உறவுகளின் பிரச்சினை களை "வடக்கு-தெற்கு" எனும் கருத்தினங்களின் அடிப் படையில் "பூகோள அளவுகளின்" நோக்கிலிருந்து அணுகுவது சரியாகாது. இது, இந்த உறவுகளில் சோஷலிச நாடுகள் ஒரு புறமும் ஏகாதிபத்திய நாடுகள் மறு புறமும் ஆற்றும் பங்கை காணாமலிருப்பதைக் குறிக்கும். இதனால், புதிய சர்வதேசப் பொருளாதார முறை சம்பந்தமான பிரச்சினைகளின் பாலான இரண்டு எதிரெதிரான சமூக-பொருளாதார அமைப்புகளின் அணுகுமுறைகளில் உள்ள கோட்பாட்டு ரீதியான வேறுபாடுகள் கவனிக்கப்படாது போகின்றன.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான சம உரிமையுள்ள, பரஸ்பர அனுகூலமான ஒத்துழைப்பின் நல்ல வளர்ச்சி, உண்மையிலேயே நியாயமான, சம உரிமையுள்ள சர்வதேச உறவுகளின் நடைமுறை நிறை வேற்றத்திற்கான திட்டவட்டமான உதாரணமாகும். இப் பிரச்சினைகளின் பாலான சோவியத் மற்றும் இந்திய அணுகுமுறையின் பொதுமையைக் கோடிட்டுக் காட்டும்

பிரபல இந்திய விமரிசகர் கிரிஷ் மிஷ்ரா பின்வருமாறு கூறுகிறார்: ''சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் பொது நலன்கள் உள்ளன, ஏனெனில் இரு நாடுகளும் நவீன காலனியாதிக்கம், சகல வித ஏகாதிபத்தியச் சுரண்டல் மற்றும் ஒடுக்குமுறைகளுக்கு எதிராகப் போராடு கின்றன பின்தங்கிய நிலையிலிருந்து விடுபட்டு, ஏகாதிபத்தியச் சார்பு நிலையைக் குறைக்கப் பாடுபடும் இந்தியாவிற்கு உதவுவதுதான் சோவியத் யூனியனின் லட்சியமாகும்.'' *

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டு கட்சியின் மத்தியக் கமிட்டி பொதுச் செயலாளர் மி. செ. கர்பச்சோவ் 1986ஆம் ஆண்டு நவம்பர் 25—28இல் இந்தியாவிற்கு அதிகாரப் பூர்வமான, நட்புவழிப்பட்ட வருகை தந்தார். இது ஒரு வரலாற்று முக் கியத்துவம் வாய்ந்த சம்பவமாக அமைந்தது. இரண்டு மாபெரும் வல்லரசுகளின் பரஸ்பர செயலாக்கமும் ஒத்துழைப்பும் உலக அரசியலின் முக்கியமான காரணியாகும் என்னும் அம்சம் இம்முக்கியத்துவத்தை நிர்ணயிக்கிறது. சோவியத் தலைவர் களுக்கும் இந்தியத் தலைவர்களுக்கும் இடையில் நடைபெற்ற சந்திப்புகளிலும் பேச்சுவார்த்தைகளிலும் இரு தரப்பு உறவுகள், உலக விஷயங்கள் பற்றிய பரவலான பிரச்சினைகள் விவாதிக் கப்பட்டன. டில்லி பிரகடனத்திலும் கூட்டறிக்கையிலும் மி. செ. கர்பச்சோவிற்கும் ராஜீவ் காந்திக்கும் இடையில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகள், சாந்திப்புகளின் சாரம் பிரதி பலித்தது. முக்கிய அரசியல் பிரச்சினைகளின் தீர்வில் இரண்டு நாடுகளின் புதிய அணுகுமுறை, ஆக்கபூர்வமான மனப்பாங்கு, துணிவு ஆகியவற்றின் விளைபயனாக இந்த ஆவணங்கள் திகழ்ந்தன.

சமாதானத்தைப் வலுப்படுத்தி, அணு ஆயுதப் பேரழிவு அபாயத்தை அகற்றுவதுதான் இன்று மனிதகுலத்தின் முன் நிற்கும் மிக முக்கிய கடமையென சோவியத் யூனியனும் இந்தியாவும் உறுதியாக நம்புகின்றன. இந்த நம்பிக்கையின் அடிப்படையில் சோவியத் யூனியனும் இந்தியாவும் டில்லி பிரகடனத்தில் கையொப்பமிட்டன. இதில் உள்ள 10 கோட் பாடுகளும் உண்மையான சமாதான சாசனமாகத் திகழு கின்றன. சமாதானம்தான் உயரிய மானுட மதிப்பு எனும் கருத்தை பூமியில் நிலைநாட்டுவது இதன் நோக்கமாகும்.

---

* *Patriot*, May 23, 1985.

மனிதகுலம் முழுவதையும் நோக்கி இந்த அறைகூவலை விடுக்க சோவியத் யூனியன், இந்தியா இரண்டு நாடுகளுக்குமே தார்மீக உரிமை உண்டு. பிரகடனத்தின் கருத்துநிலைகளும் கோட்பாடு களும் வெறும் நல்லெண்ணங்கள் மட்டுமல்ல. சோவியத் யூனியனும் இந்தியாவும் தம் அயல்நாட்டு அரசியல் நடவடிக்கை களில் ஏற்கெனவே இவற்றைப் பின்பற்றுகின்றன. சமாதான சகவாழ்வு என்பது சர்வதேச உறவுமுறைகளின் சர்வாம்ச வரையளவாக வேண்டும், நமது அணு சகாப்தத்தில் மோதல் களுக்குப் பதில் ஒத்துழைப்பு வர வேண்டும், சச்சரவுகளுக்கு அரசியல் தீர்வு கான வேண்டுமே தவிர இராணுவத் தீர்வு அல்ல என்று பிரகடனத்தில் கூறப்பட்டுள்ளது. அணு ஆயுதமில் லாத, வன்முறையில்லாத உலகத்தின் கோட்பாடுகளைப் பற்றிய டில்லி பிரகடனம், அணு-விண்வெளி சகாப்தத்தின் சூழ்நிலை களுக்கு ஏற்ற புதிய அரசியல் சிந்தனையைக் காட்டும் ஆவண மாகும். இதில் கூறப்பட்டுள்ள கோட்பாடுகளும் கருத்துகளும் உலகம் முழுவதன், உலக மக்கள் அனைவரின் நலன்களை, நம்பிக்கைகளை, அபிலாஷைகளை பிரதிபலிக்கின்றன, மனித குலத்தின் சமாதானமான எதிர்காலத்தை நோக்குகின்றன.

அணு ஆயுதத்தையும் மற்ற பேரழிவு ஆயுதங்களையும் இந்நூற்றாண்டின் இறுதிக்குள் படிப்படியாக முழுமையாக ஒழித்துக் கட்டுவதைப் பற்றிய சோவியத் யூனியனின் செயல் திட்டத்தை இந்தியா வரவேற்றது. அணு ஆயுதத்தைப் பயன் படுத்துவதை தடை செய்வது பற்றிய சர்வதேச உடன்பாட்டை விரைவில் செய்து கொள்ள வேண்டுமென இரு தரப்புகளும் அறைகூவல் விடுத்தன, சகலவித அணு ஆயுத சோதனைகளை யும் உடனடியாக நிறுத்த வேண்டுமென இரு தரப்புகளும் கோரின.

ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் உலக சமாதானம் அவரவர் வீட்டிலிருந்து ஆரம்பமாகிறது என்பது தெரிந்ததே. எனவே தான் ஆசியாவில் ஸ்திர நிலை, பாதுகாப்பின் மீது இரண்டு நாடுகளும் பொதுவான அக்கறையைக் காட்டுகின்றன. ஆசியா கண்டத்திலும் அதையொட்டியுள்ள பிரதேசங்களிலும் அரசியல் நிலவரத்தை சீர்படுத்துவதன் மீதும், அங்கே சமாதானத்தையும் ஸ்திர நிலையையும் ஏற்படுத்தும் வழிகளைத் தேடுவதன் மீதும் பேச்சுவார்த்தைகளில் பெரும் கவனம் செலுத்தப்பட்டது இயற் கையே. விளாடிவஸ்தோக்கில் மி. செ. கர்பச்சோவ் கூறிய முன்மொழிவுகள், உலகின் இப்பகுதியில் சமாதானத்தையும்

ஸ்திர நிலையையும் ஏற்படுத்தும் வழிகளைத் தேடுவதற்குப் புதிய உந்து சக்தியை அளித்ததாக ராஜீவ் காந்தி குறிப்பிட்டார். ஆசிய-பசிபிக் பிரதேச நாடுகளிடையே ஒத்துழைப்பிற்கான அடிப்படைகளை ஏற்படுத்த அரசுகளுக்கிடையேயான கருத்துப் பரிமாற்றங்களைத் தீவிரப்படுத்த வேண்டுமென ராஜீவ் காந்தி அறைகூவல் விடுத்தார். பிரதேசத்தில் நிலவரத்தை சீர்படுத்தும் பாதையில் சோவியத் யூனியன், இந்தியா ஆகிய இரு நாடுகளின் கண்ணோட்டங்களில் உள்ள நெருக்கம், இந்த முக்கிய காரியத்தில் இரு நாடுகளின் ஒத்துழைப்பிற்கான அடிப்படையை ஏற்படுத்துகிறது. இந்தியப் பெருங்கடலை அமைதி மண்டலமாக்க வேண்டுமென இரண்டு நாடுகளும் பாடுபடுகின்றன. இந்தியப் பெருங்கடல் பகுதியில் இராணுவ-அரசியல் ஸ்திர நிலையை வலுப்படுத்தி, நிலவரத்தை சீர்ப் படுத்தும் சில திட்டவட்டமான முன்மொழிவுகளை சோவியத் தலைவர் டில்லியில் வெளியிட்டார். இந்தியப் பெருங்கடலில் போர்க் கப்பல்களின் எண்ணிக்கையையும் நடவடிக்கையையும் குறைப்பது பற்றி அமெரிக்காவுடனும், இங்கு நிரந்தர அடிப் படையில் போர்க் கப்பல்களை வைத்துள்ள வேறெந்த கரை யோரம் இல்லாத நாடுகளுடனும் எந்த நேரத்திலும் பேச்சு வார்த்தைகளைத் துவக்க தான் தயாரென சோவியத் யூனியன் அறிவித்தது. இராணுவத் துறையில் நம்பிக்கை நடவடிக்கை களைப் பற்றி அமெரிக்காவுடனும் இதில் அக்கறையுள்ள ஆசிய நாடுகளுடனும் பேச்சுவார்த்தைகளை நடத்தலாம் என்ற சோவியத் முன்மொழிவின் நிறைவேற்றம் இங்குள்ள பதற்ற நிலையைத் தணிப்பதில் பெரும் பங்காற்றும்.

இந்தியப் பெருங்கடல் பகுதியில் நிலவரம் மேலும் சிக்கலாகி யுள்ளது குறித்து கவலை தெரிவித்த சோவியத் யூனியனும் இந்தியாவும் அங்குள்ள அன்னிய இராணுவத் தளங்களை அகற்றுமாறும் புதியவற்றை ஏற்படுத்தாமல் இருக்குமாறும் அறைகூவல் விடுத்தன. இந்தியப் பெருங்கடலில் அன்னிய இராணுவ நடமாட்டம் அதிகரிப்பதை அவை கண்டித்தன.

உலகில் நிலவும் பதற்ற நிலைப் பிறப்பிடங்களை விரைவில் அகற்ற வேண்டும், புதியவை ஏற்படாமல் தடுக்க வேண்டுமென இரு தரப்புகளும் கூறின. மத்திய கிழக்கு, தென் மேற்கு மற்றும் தென் கிழக்கு ஆசியா, மத்திய அமெரிக்கா ஆகிய வற்றிற்கு இது பொருந்தி வரும். தென்னாப்பிரிக்காவின் நிறவெறி ஆட்சி கடைபிடிக்கும் இனபேதக் கொள்கையையும்

நடைமுறையையும் மற்ற ஆப்பிரிக்க அரசுகளின் விஷயத்தில் இது பின்பற்றும் அரசு பயங்கரவாதத்தையும் சோவியத் யூனியனும் இந்தியாவும் வன்மையாக கண்டித்தன; நமீபியாவை சட்டவிரோதமாகப் பிடித்து வைப்பதற்கு முடிவு கட்டுமாறும், அதற்குச் சுதந்திரம் வழங்குவது சம்பந்தமான எல்லா ஐ. நா. முடிவுகளையும் நிறைவேற்றுமாறும் கோரின.

விண்வெளியை இராணுவமயப்படுத்துவதை இந்தியா உறுதியோடு எதிர்ப்பதாக டில்லி பேச்சுவார்த்தைகளின் போது ராஜீவ் காந்தி கோடிட்டு காட்டினார். இந்தியாவும் சோவியத் யூனியனும் ''நட்சத்திர சமாதானத்தை'' விரும்புகின்றனவே தவிர ''நட்சத்திர யுத்தத்தை'' அல்ல. இந்திய நாடாளுமன்றத்தில் உரையாற்றுங்காலை மி. செ. கர்பச்சோவ், விண்வெளி ஆராய்ச்சியில் வளர்முக நாடுகளைப் பரவலாக ஈடுபடுத்துமாறும் இதற்காக இந்தியாவில் ஒரு சர்வதேச விண்வெளி ஆராய்ச்சி மையத்தைத் தோற்றுவிக்கலாம் என்றும் குறிப்பிட்டார்.

நீதியான, சமத்துவ அடிப்படையில் சர்வதேசப் பொருளாதார உறவுகளை மாற்றியமைக்குமாறும் புதிய சர்வதேசப் பொருளாதார முறையை ஏற்படுத்துமாறும் இரு நாடுகளும் அறைகூவல் விடுத்தன. இந்த முக்கியப் பிரச்சினையின் தீர்வு மனிதகுலம் முழுவதன், குறிப்பாக வளர்முக நாடுகளின் நலன்களுக்கு ஏற்றதாக இருக்கும், சோவியத் யூனியனும் இந்தியாவும் இதற்காகத்தான் பாடுபடுகின்றன.

டில்லி சந்திப்புகள் சோவியத்-இந்திய இரு தரப்பு உறவுகளுக்கு விசேஷ முக்கியத்துவத்தை அளித்தன. உதாரணமாக, இரண்டு நாடுகளின் வரலாற்றிலேயே மிகப் பெரும் பொருளாதார, தொழில்நுட்ப ஒத்துழைப்பு உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. நிலக்கரி, எண்ணெய்த் துறைகள், பொக்காரோ உலோகத் தொழிற்சாலையை நவீனமயப்படுத்துவது உட்பட பல புதிய திட்டங்களின் நிறைவேற்றத்தில் சோவியத் யூனியன் இந்தியாவிற்கு உதவும். 1986 – 1990ஆம் ஆண்டுகளுக்கான நீண்டகால வர்த்தக உடன்படிக்கையின் நிறைவேற்றம் பரஸ்பர அனுகூலமுள்ள சோவியத்-இந்திய வர்த்தகத்தின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் உதவும். இந்த உடன்படிக்கை வர்த்தக பரிமாற்றத்தின் உயர்வான வேகங்களை தொடர்ந்து பின்பற்றவும், இதன் வடிவங்கள், கட்டமைப்புகளை மேம்படுத்தவும் திட்டமிடுகிறது. 1992ஆம்

ஆண்டு வாக்கில் சோவியத்-இந்திய வர்த்தகம் 2.5 மடங்கு அதிகரிக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. சோவியத்-இந்திய விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு, கலாசார ஒத்துழைப்பு, உடல்நலப் பாதுகாப்பு, கல்வி, தகவல் ஒலிபரப்புத் துறை, விளையாட்டு ஆகியவற்றில் ஒத்துழைப்பு ஆகியவை மேன் மேலும் முக்கியத்துவம் பெற்று வருகின்றன. இரண்டு நாடு களிலும் தேசியக் கலைவிழாக்களை நடத்துவதைப் பற்றி உடன்பாடு செய்யப்பட்டுள்ளது. அக்டோபர் புரட்சியின் 70ஆம் ஆண்டு நிறைவிற்கும் இந்திய சுதந்திரத்தின் 40ஆம் ஆண்டு விழாவிற்கும் அர்ப்பணிக்கப்பட்ட இவை ஓராண்டு நடை பெறும்.

''இப்பயணத்தின் போது சோவியத்-இந்திய உறவுகளின் முக்கியத்துவத்தையும் எங்களுடைய நாடுகளில் உள்ள மக்களின் முன்னும் உலகம் முழுவதன் முன்னும் எங்களுக்குள்ள பொறுப் பையும் நாங்கள் இன்னுமொரு முறை உணர்ந்தோம்'' என்று பயணத்தின் இறுதியில் டில்லியில் நடைபெற்ற பத்திரிகையாளர் கூட்டத்தில் மி. செ. கர்பச்சோவ் கூறினார். அவர் தொடர்ந்து குறிப்பிட்டார்: ''வேறுபட்ட சமூக அமைப்புகளைச் சேர்ந்த, வெவ்வேறு வரலாற்றையுடைய, பெரிதும் விசேஷமான தேசிய, ஆன்மீக பாரம்பரியங்களை உடைய அரசுகளுக்கு இடை யிலான உறவுகளைப் பற்றி நாம் பேசுகிறோம் எனும் அம்சம் தான் இவற்றிற்கு முக்கியத்துவத்தை தருகிறது. பல பத் தாண்டுகளாக நிலவிவரும் பரஸ்பர அனுகூலமுடைய, நேர் மையான ஒத்துழைப்புதான் சர்வதேச அரசியலின் மிக முக் கியக் காரணியாகியுள்ள இந்தப் பெரிய, நவீனகாலத்தின் முக்கியமான ஒரு எதார்த்தத்தை சாத்தியமாக்கியுள்ளது''.

இவ்வாறாக மி. செ. கர்பச்சோவின் இந்திய விஜயம் சோ வியத்-இந்திய உறவுகளில் மட்டுமின்றி சர்வதேச வாழ்விலும் ஒரு மைல் கல்லாகியுள்ளது, ஏனெனில் இதன் விளைவுகள் உலக வளர்ச்சியின் மிக முக்கிய பிரச்சினைகளின் மீது தாக்கம் செலுத்துகின்றன.

## அத்தியாயம் நான்கு

# பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பு

சோஷலிச நாடுகள் சர்வதேசப் பொருளாதார உறவு களுக்கு பெரும் முக்கியத்துவம் தருகின்றன. ஏனெனில் வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய நாடுகளின் நிலையான சமாதான ஒத்துழைப்பிற்கு உதவும் நீண்ட காலக் காரணிகள் பொருளாதாரத் துறையில்தான் உருவாகின்றன.

சோஷலிச நாடுகளின் பொருளாதாரத் தொடர்புகளில் வளர்முக நாடுகளுடனான இவற்றின் வர்த்தக-பொருளா தார உறவுகள் முக்கிய இடத்தை வகிக்கின்றன. சமத்துவம் மற்றும் பரஸ்பர ஆதாயக் கோட்பாடுகளின் அடிப் படையிலான இந்த உறவுகளில், உலக சோஷலிச சக்தி களுக்கும் தேசிய விடுதலை இயக்கச் சக்திகளுக்கும் இடையிலான பிரிக்க இயலாத ஒற்றுமை பற்றிய மார்க்சிய-லெனினியத்தின் கருத்துநிலை நடைமுறையில் நிறை வேற்றப்படுகிறது. சோஷலிச நாடுகளுடனான பொரு ளாதார ஒத்துழைப்பு இளம் விடுதலையடைந்த அரசுகளின் சர்வதே உறவு முறை முழுவதன் மீது நல்ல செல்வாக்கைச் செலுத்துகிறது, உலக முதலாளித்துவப் பொருளாதாரத்தில் சமமற்ற நிலையை அகற்றுவதற்கான போராட்டத்தில் இவற்றின் நிலையை வலுப்படுத்துகிறது.

இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் தன் பொரு ளாதாரத்தைப் புனர்நாட்டுவதில் சோவியத் யூனியனுக்கு இடர்ப்பாடுகள் இருந்த போதிலும் இது சர்வதேசியக் கோட்பாடுகளுக்கு விசுவாசமாக நின்று இளம் விடுதலை யடைந்த அரசுகளுக்கு அரசியல் மற்றும் பொருளாதார உதவியளிக்க முயன்றது. 50ஆம் ஆண்டுகளின் நடுப் பகுதியிலிருந்து இந்நாடுகளுடன் பெரிதும் ஒத்துழைக்கத்

துவங்கியது. இந்தியாதான் இப்படிப்பட்ட முதல் நாடாக இருந்தது.

காலனி மற்றும் அரைக்காலனி நாட்டு மக்களின்பால் சோவியத் அரசின் அடிப்படைக் கொள்கைகளை நிர்ணயித்த வி. இ. லெனின் எழுதினார்: ''மங்கோலியர்கள், பாரசீகர் கள், இந்தியர்கள், எகிப்தியர்களுடன் நெருங்கி வரவும் ஒன்றிணையவும் நாம் எல்லா முயற்சிகளையும் மேற் கொள்வோம், இப்படிச் செய்வதை நமது கடமையாக, நமது அக்கறையாகக் கருதுகின்றோம்... இந்தப் பின்தங்கிய, ஒடுக்கப்பட்ட மக்களினங்களுக்கு தன்னலமற்ற கலாச்சார உதவியை, அதாவது இயந்திரங்களைப் பயன்படுத்தவும் உழைப்பை எளிமையாக்கவும் ஜனநாயகத்திற்கும் சோஷலி சத்திற்கும் மாறிச் செல்லவும் உதவியை அளிக்க நாம் முயல்வோம்''. *

சோவியத் யூனியனுக்கும் வளர்முக நாடுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பு புதிய வகையான சர்வதேசப் பொருளாதார உறவுகள் தோன்றவும் வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய நாடுகளுக்கு இடையேயான சர்வதேச உழைப்புப் பிரிவினைக்கும் இட்டுச் சென்றது என்பதில்தான் இந்த ஒத்துழைப்பின் வரலாற்று முக்கியத்துவம் அடங்கி யுள்ளது. பரஸ்பர ஆதாரம், சமத்துவம் மற்றும் அரசுரிமை யின் மதிப்புதான் மேற்கூறிய உழைப்புப் பிரிவினையின் அடிப்படைக் கோட்பாடுகளாகும்.

சுதந்திரமான, சீரிசைவான தேசியப் பொருளாதாரத்தை தோற்றுவிக்கும் பொருட்டு வளர்முக அரசுகளின் உள் மூல சக்திகளைப் பெருக்கும் நோக்கத்தோடுதான் சோவியத் யூனியன் அந்தந்தப் பொருட்களின் உற்பத்திக்கு உதவுகிறது. இது சர்வதேச உழைப்புப் பிரிவினையில் சம உரிமையுள்ள கூட்டாளியாகத் திகழ வழிகோலுகிறது.

சோவியத்-இந்திய பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பை இப்படிப்பட்ட பரவலான நோக்கில்தான் அணுகி, மதிப்பிட வேண்டும்.

30 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவுடன் சோவியத் யூனியனுக்கு உள்ள பொருளாதாரத் தொடர்புகள்

---

* V I. Lenin. *Collected Works*, Vol. 23, p. 67.

வெற்றிகரமாக வளர்ந்து வருகின்றன. இக்காலகட்டத்தில் இரு நாடுகளுக்கும் இடையிலான வர்த்தக-பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பு கணிசமான அளவு பெருகி பொருளாதாரம், விஞ்ஞானம், தொழில் நுட்பத்தின் பல்வேறு துறைகளில் பரவியுள்ளது. இது பரஸ்பர நலன்களைக் கணக்கில் கொண்டு நிறைவேற்றப் படுகிறது, முக்கியமாக, இந்தியாவின் தேசியப் பொருளா தாரம் உருவாவதையும் இதன் அரசுத் துறையை பலப் படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டது.

''வெளிப் பொருளாதார உறவுகளில் சோவியத் யூனியனுடனும் பரஸ்பர பொருளாதார உதவி கவுன்சிலின் மற்ற நாடுகளுடனும் உள்ள ஒத்துழைப்பு ஒரு பெரும் உதவியாகும், ஏனெனில் இது இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகிறது. இந்த உதவி மட்டும் இல்லாதிருந் தால் இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் வேகங்கள் இப்போதுள்ளதை விட கணிசமான அளவு குறைவானவை யாக இருந்திருக்கும்'' என்று 1971 அக்டோபரில் *National Herald* எழுதியது.

பண்டங்களின் சப்ளை, போக்குவரத்து மற்ற வசதிகளை அளிப்பது, பரஸ்பர நிதி முதலியவற்றை ஒழுங்குபடுத்தும் இரு தரப்பு ஆவணங்களிலிருந்து (ஒப்பந்தங்களிலிருந்து) இந்தியாவிற்கு சோவியத் யூனியனுடனும் மற்ற சோஷலிச நாடுகளுடனும் உள்ள வர்த்தக-பொருளாதார உறவுகளின் அடிப்படை உருவாகத் துவங்கியது.

50ஆம் ஆண்டுகளின் ஆரம்பத்திலிருந்து சோவியத் யூனியன் இந்தியாவுடனான வர்த்தக-பொருளாதார உறவு களில் கூட்டு அரசாங்க உடன்படிக்கைகளைச் செய்து கொள்ளத் துவங்கியது, இவைதான் மேற்கூறிய உறவுகளை ஒழுங்குபடுத்தும் ஒரே வடிவமாகும். இப்படிப்பட்ட முதல் உடன்படிக்கை 1953இல் செய்து கொள்ளப்பட்டது.

இந்த உறவுகளில் பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பின் வளர்ச்சி முக்கிய கட்டமாகத் திகழ்ந்தது. அந்தந்தக் கூட்டு அரசாங்க உடன்படிக்கைகள் இதற்கான சட்ட அடிப்படைகளாக விளங்கின. 1955 பிப்ரவரி 2ஆம் தேதி கையொப்பமிடப்பட்ட இப்படிப்பட்ட முதல் உடன்படிக்கை, ஆண்டிற்கு பத்து லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்ய வல்ல பிலாய் உலோகத் தொழிற்

சாலையின் முதல் பகுதியின் கட்டுமானத்தில் இந்தியாவிற்கு சோவியத் யூனியன் தொழில்நுட்ப-பொருளாதார உதவியை அளிக்க வகை செய்தது. சலுகை அடிப்படையிலான அரசுக் கடனும் இதிலடங்கும்.

கடந்த ஆண்டுகளில், பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளில் பல நிறுவனங்களின் கட்டுமானம் சம்பந்தமாக 16 உடன்படிக்கைகள் செய்து கொள்ளப்பட்டன.

கூட்டு அரசாங்க உடன்படிக்கைகளின் நிறைவேற்றத்தின் போது பொருளாதார மற்றும் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பின் முக்கிய வடிவங்கள் உருவாக்கப்பட்டன. தொழிற்துறை நிறுவனங்கள், முழு இணையங்கள், மற்ற பல அமைப்புகளைத் திட்டமிட்டு கட்டுவது, கூட்டு உபகரணங்கள், துணைப் பகுதிகள், பொருட்களை வழங்குவது, உபகரணங்களை நிறுவுவதில் உதவி, புவியியல் தேட்ட வேலைகளில் ஈடுபடுவது, தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பது முதலியன இவற்றிலடங்கும்.

எஃகு, வார்ப்பிரும்பு மற்றும் அலுமினிய உற்பத்தி, எண்ணெய் எடுத்து சுத்திகரித்தல், இரும்புத் தாதுவையும் கல் கரியையும் எடுத்தல், மின்சார உற்பத்தி, பல்வேறு உபகரணங்களின் உற்பத்தி, மருந்து உற்பத்தி, மற்றும் பல தொழிற்துறை, விவசாயத் துறை பொருட்களின் உற்பத்தி சம்பந்தமான கணிசமான சக்தியுள்ள நிறுவனங்கள் இந்தியாவில் சோவியத் யூனியனின் உதவியோடு தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

கூட்டு அரசாங்க உடன்படிக்கைகளின் அடிப்படையில் சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் 110க்கும் மேற்பட்ட தொழிற்சாலைகளும் மற்ற அமைப்புகளும் கட்டப்பட்டுள்ளன, கட்டத் திட்டமிடப்படுகின்றன அல்லது கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவற்றில் 60க்கு மேற்பட்டவை ஏற்கனவே இயங்குகின்றன.

1971இல் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு பற்றிய ஒப்பந்தம் கையெழுத்தானதும், பல பொது இரு தரப்பு உடன்படிக்கைகள் (இவை சாதாரணமாக நீண்ட கால கட்டத்திற்கு ஒத்துழைப்பின் முக்கியத் திசையமைவுகளையும் வடிவங்களையும் நிர்ணயித்தன) செய்து கொள்ளப்பட்டதும் சோவியத்-இந்திய பொருளாதார ஒத்துழைப்பின் பரவலான,



வி. இ. லெனினின் கல்லறையில் மலர் வளையம் வைத்து விட்டு ஜவகர்லால் நேரு கிரெம்ளினை நோக்கிச் செல்கிறார் (1961)



ஜவகர்லால் நேரு தன் சோவியத் பயணத்தின் போது ருஸ்தாவி யில் (ஜார்ஜிய சோவியத் சோஷலிசக் குடியரசு) உள்ள உலோகத் தொழிற்சாலைக்கு வருகை தந்தார்

''ஆர்டெக்'' பயோனீர் முகாமிற்கு ஜவகர்லால் நேரு வந்த போது சோவியத் பயோனீர்கள் அவருக்கு பூச்செண்டுகளை வழங்குகின்றனர் (1955)



இந்திரா காந்தி சோவியத் யூனியனுக்கு வருகை தந்த போது (1966)



மாஸ்கோ சதுக்கம் ஒன்றிற்கு இந்திரா காந்தியின் பெயர் சூட்டப்படும் விழா (1985, மே 22)



இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்திக்கும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளர் மி. செ. கர்பச்சோவிற்கும் இடையிலான சந்திப்பு (1985, மார்ச்)



மாஸ்கோவில நடைபெற்ற சோவியத்-இந்தியப் பேச்சுவார்த்தைகள் (1985, மே 21)



மாஸ்கோவில் மி. செ. கர்பச்சோவிற்கும் ராஜீவ் காந்திக்கும் இடையில் நடந்த கலந்துரையாடல் (1985, மே 22)



கோர்பா அலுமினியத் தொழிற்சாலையில் சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள்



சோவியத்-இந்திய ஆவணங்கள் கையெழுத்தான பின். மாஸ்கோ, 1985, மே



வி. இ. லெனின் கல்லறையில் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி மலர் வளையம் வைக்கிறார் (1985, மே 22)



இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி ஃப்ருன்சே நகரத்தில் (1985, மே)



பிலாய் உலோகத் தொழிற்சாலை

பிலாய் தொழிற்சாலைக்கு ஜவகர்லால் நேரு வருகை தந்த போது (1963, மே)



பிலாய் தொழிற்சாலையின் திறந்த ஊதுலைப் பிரிவில்



சோவியத் ஊதுலைத் தொழிலாளி பிலாய் தொழிற்சாலையில்
இந்திய சக தொழிலாளிகளுடன்



பிலாயில் ஆப்பிரிக்க நிபுணர்கள் பயிற்சி பெறுகின்றனர்



பிலாய் உலோகத் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள்



சோவியத் கற்கரி நிபுணர் வி. குஸ்மீன் இந்திய நிபுணர்களுடன்

பொக்காரோ உலோகத் தொழிற்சாலை





இந்திரா காந்தி பொக்காரோ தொழிற்சாலையில் கொதி ரோலிங் மில் பிரிவைத் துவக்கி வைக்கும் விழாவில் உரையாற்றுகிறார் (1975, மே 1)



பொக்காரோ உலோகத் தொழிற்சாலை

பொக்காரோ. சோவியத் ஊதுலை ஆலோசகர் பி. இ. எமிலியானென்கோ இந்திய நிபுணர்களுடன்





பொக்காரோ. சோவியத் மருத்துவர் இந்தியக் குழந்தையைப் பரிசோதிக்கிறார்



பொக்காரோ தொழிற்சாலைக் கட்டுமானம்



ராஞ்சி தொழிற்சாலையில் சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள்



ஹரித்வாரில் உள்ள கனரக மின் உபகரணத் தொழிற்சாலை



பரோனியில் உள்ள எண்ணெய் சுத்திகரிப்பாலை



கோயாலி எண்ணெய் சுத்திகரிப்பாலை



துர்காபூர் சுரங்க உபகரணத் தொழிற்சாலையில்



கல்கத்தா மெட்ரோ கட்டுமானத்தில் சோவியத், இந்திய நிபுணர்கள்



நெய்வேலி அனல் மின்நிலையம். ஸ்தலத்திலேயே சோவியத் நிபுணர்களால் பயிற்றுவிக்கப்பட்ட இந்தியர்கள் நிலையத்தின் மையக் கட்டுப்பாட்டு கேந்திரத்தில்



''பக்ரா'' நீர் மின்நிலையம்



சூரத்கர் பண்ணை வயல்களில் சோவியத் அறுவடை இயந்திரம்



கல்கத்தா அருகே சோவியத் நிபுணர்கள் ஆழ் கிணற்றை (5,500 மீ.) தோண்டுகின்றனர்



சோவியத் யூனியனின் உதவியோடு ஹிசாரில் தோற்றுவிக்கப்பட்ட அரசுப் பண்ணை



ஹிசார் அரசுப் பண்ணையின் வயல்களில்



சோவியத் ஆசிரியர் தன் இந்திய மாணவர்களுடன்



சோவியத், இந்திய இளைஞர்களின் நட்புறவு விழாவில் கலந்து கொண்டவர்கள் அல்மா-ஆத்தா பயோனீர் மாளிகையில் (கஜாக்ஸ்தான்)




பிலாய் உலோகத் தொழிற்சாலைப் பிரிவில்



இந்திய விண்வெளி வலவர்கள் முதன்முதலாக விண்வெளி வலவருக்குரிய மேலாடைகளை அணிகின்றனர்



ராஞ்சி கனரக உபகரணத் தொழிற்சாலை



சோவியத் யூனியனில் ராகேஷ் சர்மாவும் ரவீஷ் மல்ஹோத்ராவும்



இந்திய விண்வெளி வலவர்கள் விண்வெளிப் பயணத்திற்குத் தயார்




சோவியத் விண்வெளி வலவர்களுடன் ராகேஷ் சர்மா



ஹரித்வார் தொழிற்சாலையில் சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள்

தீவிர வளர்ச்சிக்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்கின. 1973 நவம்பர் 29ஆம் தேதி கையெழுத்தான வர்த்தக, பொருளாதார ஒத்துழைப்பின் வளர்ச்சி பற்றிய உடன்படிக்கை, 1979 மார்ச் மாதத்தில் கையெழுத்தான 10-15 ஆண்டுகளுக்கான பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய நீண்ட கால செயல் திட்டம், 1985 மே மாதம் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியின் சோவியத் பயணத்தின் போது கையெழுத்தான 2000ஆம் ஆண்டு வரையிலான பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பின் முக்கியத் திசை யமைவுகளைப் பற்றிய உடன்படிக்கை முதலியன மேற் கூறிய உடன்படிக்கைகளில் அடங்கும். நடப்பு நூற்றாண்டின் இறுதி வரைக்கும், மேற்கொண்டும் உள்ள காலகட்டத்திற் கான புதிய நீண்ட கால ஒத்துழைப்புச் செயல்திட்டத்தை வெகு விரைவிலேயே தீட்டுவதென இரு தரப்புகளும் கோட்பாட்டளவில் ஒப்புக்கொண்டன. இந்த ஆவணங்கள் ஒத்துழைப்பிற்கு இன்னமும் அதிக ஸ்திரத் தன்மையையும் நீண்ட காலத் தன்மையையும் அளிக்கும்.

1979 மார்ச்சில் கையெழுத்தான 10-15 ஆண்டுகளுக்கான பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத் துழைப்பு பற்றிய நீண்ட கால செயல்திட்டத்தைப் பற்றித் தனியாகக் கூற வேண்டும். இது ஒரு பன்முக இரு தரப்பு ஆவணமாகும், இதில் இந்தியப் பொருளாதாரத்தின் பல்வேறு துறைகள் அடங்கியுள்ளன. இரு நாடுகளின் வளர்ச்சியடைந்த தொழிற்துறை உள்ளாற்றலை கவனத்தில் கொண்டு, பொருளாதார வளர்ச்சிக் கடமைகளை கவனத் தில் வைத்து இச்செயல்திட்டம் நீண்ட காலகட்டத்திற்குப் பொருளாதார ஒத்துழைப்பின் திட்டவட்டமான திசையமைவு களையும் வடிவங்களையும் நிர்ணயிக்கிறது.

பல்வேறு துறைகளில் புதிய தொழில் நிறுவனங்களைக் கட்டுவதிலும் மற்றும் எரிசக்தி, விவசாய அமைப்புகள், மற்ற அமைப்புகளைக் கட்டுவதிலும் ஒத்துழைப்பை தீவிரப்படுத்துவதுதான் நீண்ட கால செயல்திட்டத்தின் முதல் நோக்கமாகும்.

இதில் எரிபொருள்-எரிசக்தி துறை, உலோகத் தொழிற் துறை, இயந்திரக் கட்டுமானம் (இங்கே சோவியத்-இந்திய ஒத்துழைப்பு கணிசமான வெற்றிகளை அடைந்

துள்ளது, இவற்றில் நல்ல பாரம்பரியங்கள் ஏற்பட்டுள்ளன) ஆகியவற்றின் வளர்ச்சியை தீவிரப்படுத்துவதன் மீது முக்கியக் கவனம் செலுத்தப்படும். அதே சமயம் காகிதத் தொழிற்துறை, உணவு, நுகர்பொருள், மருத்துவத் தொழிற்துறைகள், கட்டுமானப் பொருட்களின் உற்பத்தி, புவி இயல், நீர்ப்பாசனம், உள்நாட்டு மீன்பிடிப்பு போன்றவை உட்பட புதிய துறைகளில் ஒத்துழைப்பு வாய்ப்புகளை ஆராய இந்த நீண்ட கால செயல்திட்டம் வழிகோலுகிறது.

ஏற்கனவே இந்தியாவில் சோவியத் உதவியோடு கட்டப்பட்டுள்ள தொழிற்துறை நிறுவனங்கள், மற்ற அமைப்புகளின் உற்பத்தி திறனை அதிகப்படுத்தவும், புதிய பொருட்களின் உற்பத்திக்கு இவற்றை தயார்படுத்தவும், பொருளாதார செயல்வன்மையை உயர்த்தவும் இவற்றின் பணிகளை மேம்படுத்துவது நீண்ட கால செயல்திட்டத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும். ஏற்கனவே உள்ள தொழில்நுட்பத்தை மேம்படுத்துவதன் மூலமும், புதிய தொழில்நுட்பங்களைப் புகுத்துவதன் மூலமும், உபகரணங்களை நவீனமயப்படுத்துவதன் மூலமும், தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பதன் மூலமும், விஞ்ஞான-தொழில்நுட்ப சாதனைகளைப் பரவலாக புகுத்துவதன் மூலமும் இப்பணி நிறைவேற்றப்படும். பிலாய், பொக்காரோ உலோகத் தொழிற்சாலைகள், ராஞ்சி, துர்காபூர், ஹரித்துவாரில் உள்ள இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகள், ரிஷிகேஷிலும் ஹைதராபாதிலும் உள்ள மருத்துவத் தொழிற்சாலைகள், மற்ற சில அமைப்புகள் ஆகியவற்றில் ஏற்கனவே இப்பணி நடைபெறுகிறது.

உற்பத்திக் கூட்டுறவு மற்றும் தனித் துறைச் சிறப்புத் தேர்ச்சி உட்பட புதிய வகையான ஒத்துழைப்பிற்கு நீண்ட கால செயல்திட்டத்தில் முக்கியக் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. மூன்றாம் நாடுகளில் அமைப்புகளைக் கூட்டாகத் திட்டமிட்டு கட்டுவது, கடன்களை உற்பத்திப் பொருள் மூலம் திருப்பித் தரும் அடிப்படையில் நிறுவனங்களைக் கட்டுவது முதலியன இவற்றிலடங்கும்.

சர்வதேச உழைப்புப் பிரிவினை ஒவ்வொரு நாட்டின் இயற்கை வளம், தொழில்நுட்ப மற்றும் மூலதன வாய்ப்புகள் ஆகியவற்றைப் பயன்மிகு வகையில் பயன்படுத்த அனுகூலமான சூழ்நிலைகளை ஏற்படுத்துகின்றது. எனவே

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையேயான உற்பத்திக் கூட்டுறவு மற்றும் தனித் துறைச் சிறப்புத் தேர்ச்சி உற்பத்தியின் செயல்வன்மையை உயர்த்தவும் இரு நாடுகளுக்கும் இடையிலான பொருளாதாரத் தொடர்புகளை விரிவுபடுத்தவும் உதவ வேண்டும். இரும்பு மற்றும் இரும்பல்லா உலோகத் துறை, இயந்திரக் கட்டுமானம், நிலக்கரித் தொழிற்துறை, மின்னணுத் துறை, மருந்து உற்பத்தி, துணி உற்பத்தி, தோல் துறை மற்றும் சில துறைகளில் கூட்டுறவுத் தொடர்புகள் வளர்ச்சி பெறலாம்.

இரு நாடுகளின் பொருளாதார வாய்ப்புகள், தேவைகளைக் கணக்கில் கொண்டு நீண்ட கால வர்த்தக உடன்படிக்கைகளின் அடிப்படையில் வர்த்தகத்தை மேற்கொண்டு வளர்க்கவும் பரவலான நடவடிக்கைகள் திட்டமிடப் பட்டுள்ளன. இதற்காக, பரஸ்பர அக்கறையுள்ள புதிய பண்டங்களை பரிவர்த்தனையில் சேர்க்கும் வாய்ப்புகளும் புதிய வகையான வர்த்தக வடிவங்களை வளர்க்கும் வாய்ப்புகளும் தேடப்படுகின்றன.

விஞ்ஞான, தொழில்நுட்பத் துறையில் இரு நாடுகளின் ஒத்துழைப்பின் நல்ல பயன்களைக் கணக்கில் கொண்டு, நீண்ட கால அடிப்படையில் முக்கிய விஞ்ஞான, தொழில் நுட்ப பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக இரு நாடுகளின் விஞ்ஞான-தொழில்நுட்ப உள்ளாற்றலையும் மேலும் சிறப்பாகப் பயன்படுத்தும் பொருட்டு இதை மேற்கொண்டு வளர்க்க நீண்ட கால செயல்திட்டம் திட்டமிடுகிறது. விஞ்ஞான செய்திகள் மற்றும் ஆவணங்களைப் பரிமாறிக் கொள்வது, விஞ்ஞானிகள், நிபுணர்களின் பரஸ்பர விஜயங்கள், கூட்டு ஆராய்ச்சிகளையும் பரிசோதனைகளையும் நடத்துவது, விஞ்ஞான உபகரணங்களையும் அனுபவத்தையும் பரிமாறிக் கொள்வது, விஞ்ஞான-தொழில்நுட்ப ஊழியர்களின் தேர்ச்சியை உயர்த்துவது, மகாநாடுகள், கருத்தரங்கங்களை நடத்துவது போன்ற பல நடவடிக்கைகளின் மூலம் பல்வேறு துறைகளிலும் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு விரிவுபடுத்தப்படுகிறது.

நீண்ட கால செயல்திட்டத்தின் வரம்புகளுக்குள் திட்டம் தீட்டும் துறையில் ஒத்துழைப்பு தொடருகிறது. பொருளாதாரத் திட்டமிடல், முறையியல், குறுகிய (ஆண்டு), நடுத்தர மற்றும் எதிர்காலத் திட்டங்களைத்

தீட்டுவது, பல்வேறு நகல்களையும் செயல்திட்டங்களையும் உருவாக்குவது ஆகியவற்றில் அனுபவத்தையும் ஞானத்தையும் பகிர்ந்து கொள்வது முதலியவை இதில் அடங்கும்.

*1972* செப்டெம்பர் *19*இல் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கைக்கேற்ப தோற்றுவிக்கப்பட்ட பொருளாதார, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு சம்பந்தமான சோவியத்-இந்தியக் கூட்டு அரசாங்க கமிஷன் இரு தரப்பு உறவுகளின் வளர்ச்சியில் கணிசமான பங்காற்றுகிறது. இரு தரப்பு பொருளாதாரத் தொடர்புகளை கணிசமாக விரிவுபடுத்தியதானது (இதற்கு கூடுதல் ஒழுங்குபடுத்தும் முறைகளைப் புகுத்த வேண்டியிருந்தது) மேற்கூறிய கமிஷனைத் தோற்றுவிப்பதற்கான புறவய ரீதியான தேவையாக இருந்தது.

நடப்பு மற்றும் எதிர்கால ஒத்துழைப்பு பிரச்சினைகளைத் தீர்ப்பதிலும், புதிய திசையமைவுகளை நிர்ணயிப்பதிலும், இதன் புதிய வடிவங்களை தீவிரமாகப் புகுத்துவதிலும், இரு நாடுகளுக்கும் இடையிலான பொருளாதார உறவுகளை விவேகமாக ஒழுங்கமைப்பதிலும் சோவியத்-இந்திய கமிஷன் பெரும் பணியாற்றியது. கூட்டு அரசாங்க கமிஷனின் வரம்புகளுக்குள் தனிப்பட்ட ஒத்துழைப்பு அம்சங்களை மேலும் திட்டவட்டமாக்க வேலைக் குழுக்கள் தோற்றுவிக்கப்பட்டன. உதாரணமாக இரும்பு மற்றும் இரும்பல்லா உலோகத் தொழிற்துறை, நிலக்கரி மற்றும் எண்ணெய் தொழிற்துறை, இயந்திரக் கட்டுமானம், எரிசக்தி துறை மற்றும் திட்டமிடுதல், விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு, வர்த்தகம் ஆகிய துறைகளில் இப்படிப்பட்ட வேலைக் குழுக்கள் தோற்றுவிக்கப்பட்டன.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் நிபந்தனைகள் இந்தியாவின் தேசிய அரசுரிமைக்கு முற்றிலும் ஏற்றவையாக உள்ளன. அதாவது, இந்த ஒத்துழைப்பின் பயனாய் பிறக்கும் தொழில் நிறுவனங்களும் அமைப்புகளும் முழுக்க முழுக்க இந்திய நிர்வாகத்திற்குச் சொந்தமானவை, இவற்றின் நிர்வகிப்பும் இந்தியாவின் கரங்களில்தான் உள்ளது.

சாதாரணமாக, வெளி நிதிகளைப் பயன்படுத்துவதானது இவற்றைப் பெறும் நாட்டின் பொருளாதார வளர்ச்சியின்

வேகங்கள், திசையமைவுகளின் மீது பெரும் பன்முக செல்வாக்கை செலுத்துகிறது. வெளியிலிருந்து வரும் பொருளாதார உதவியின் செயல் நோக்கமும் அதைப் பயன்படுத்தும் தன்மையும் இதில் முக்கியப் பங்காற்று கின்றன. சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பை இந்நோக்கிலிருந்து பார்த்தால், இது, இயன்ற அளவு குறுகிய காலகட்டத்தில் பின்தங்கிய நிலையை அகற்றி, சுய பூர்த்தி பற்றிய பிரச்சினையைத் தீர்ப்பதை நோக்கமாகக் கொண்ட இந்தியப் பொருளாதார திட்டத் திற்கு முழுவதும் ஏற்ற வகையில்தான் நிறைவேற்றப் படுகிறது என்பதைக் குறிப்பிட வேண்டும். சோவியத் யூனியனின் தரப்பிலிருந்து இந்தியாவிற்கு வழங்கப்படும் கடன்கள், அந்தந்த இந்திய ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்படுவதோடு ஒத்தியைந்து போகின்றன. இது அந்தந்த அமைப்புகளின் கட்டுமானத்திற்கு செயல் நோக்கோடு சோவியத் கடன்களைப் பயன்படுத்தத் திட்டமிடும் வாய்ப்பை இந்தியாவிற்கு அளிக்கிறது.

சோவியத் உதவியோடு இந்தியாவில் கட்டப்பட்டுள்ள பெரும்பாலான தொழிற்துறை நிறுவனங்கள் அந்தந்த துறைகளில் மிகப் பெரியவை, இவற்றிற்கு தேசிய முக்கியத் துவம் உண்டு. இது தொழிற்துறைப் பொருட்களின் உற்பத்தி கணிசமாக அதிகரிக்க வகை செய்கிறது, ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள துறைகள் வளர வழிகோலுகிறது, அந்தந்த துறைகளில் நடுத்தர மற்றும் சிறு துணை நிறுவனங்கள் தோன்ற உதவுகிறது, முன்னர் பின்தங்கிய நிலையிலிருந்த பிரதேசங்கள் உரிய வளர்ச்சி பெறவும் மக்களின் வேலை வாய்ப்புகள் பெருகவும் துணை புரிகிறது.

1986ஆம் ஆண்டின் துவக்கத்தில் சோவியத்-இந்திய ஒத்துழைப்போடு கட்டப்பட்ட அமைப்புகளில் சுமார் 62 மில்லியன் டன் எஃகு உற்பத்தி செய்யப்பட்டது, 8,60,000 டன்னுக்கும் மேற்பட்ட உலோகத் துறை, தோண்டும் துறை, சுரங்கத்துறை, மற்ற கனரக இயந்திரங் கள் உற்பத்தி செய்யப்பட்டன, 210 மெகவாட் திறனுள்ள 45க்கும் கூடுதலான டர்பைன்கள் உருவாக்கப்பட்டன, 100 மில்லியன் டன்னுக்கும் கூடுதலான எண்ணெய் எடுக்கப்பட்டது, பல நூறு பில்லியன் மின்சக்தி உற்பத்தி செய்யப்பட்டது, இத்தியாதி. கடந்த இருபது ஆண்டுகளில்

சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்பட்ட தொழில் நிறுவனங்களில் எஃகு உற்பத்தி சுமார் 80% கூடியது, உலோகத் தகடுகளின் உற்பத்தி கிட்டத்தட்ட 60 % அதிகரித்தது, எண்ணெய் உற்பத்தியும் இது சுத்திகரிக்கப்படுவதும் 45 % அதிகரித்தது, கனரக தொழிற்துறை உபகரணங்களின் உற்பத்தி 90 % பெருகியது, மின்சார உபகரணங்களின் உற்பத்தி 70 % கூடியது.

இத்தகைய பொருளாதார ஒத்துழைப்பு சீரிசைவான பல்துறை இணையங்களை ஏற்படுத்தியதன் மூலம் இந்தியப் பொருளாதாரத்தின் கட்டமைப்பு மாற்றங்களுக்கு உதவியது. சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் இரண்டு இத்தகைய இணையங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. முதலாவது இணையம், நிலக்கரி, இரும்புத்தாது, இரும்பு மற்றும் இரும்பல்லா உலோகத்துறை, மின்சக்தி, உபகரண உற்பத்தி, தேசிய ஊழியர் பயிற்சி மற்றும் வடிவமைப்பு ஸ்தாபனங்கள் ஆகியவற்றிலுள்ள பரவலான அமைப்புகளை ஒன்றிணைத்து நிற்கிறது. இரண்டாவது இணையத்தில் எண்ணெய் எடுக்கும் நிறுவனங்களும் சுத்திகரிப்பு அமைப்புகளும் அடங்கும்.

இந்தியாவிற்கு சோவியத் யூனியனுடன் உள்ள பொருளாதார ஒத்துழைப்பு எவ்வளவு பயன்மிக்கது என்பதற்கான முக்கியக் குறியீடுகளில் ஒன்று நாட்டின் தேசிய வருமானத்தையும் உள் சேமிப்புகளையும் பெருக்குவதில் இந்த ஒத்துழைப்புடன் கட்டப்பட்ட அமைப்புகளின் பங்காகும். மொத்த சேமிப்புகளில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பால் கட்டப்பட்ட அமைப்புகளின் பங்கு மத்திய அரசாங்கத்தின் அரசு கார்ப்பரேஷன்களின் மொத்த உற்பத்தியில் இவற்றின் பங்கை விஞ்சி நிற்பதாக கணக்கீடுகள் காட்டுகின்றன. உழைப்பின் உயர்வான உற்பத்தித் திறன், சோவியத்-இந்திய ஒத்துழைப்பு அமைப்புகளின் ஒப்பீட்டளவில் உயர்வான லாபம் முதலியவையே இதற்குக் காரணம்.

தொழில் நிறுவனங்களின் லாபம் பொருளாதார செயல்வன்மைக்கான பொது அறிகுறியாகும். சோவியத் உதவியோடு கட்டப்பட்டவற்றில் பெரும்பாலானவை லாபகரமாகச் செயல்படுகின்றன. நிச்சயமாக, நேரடியான நிதி ஆதாயங்களுடன் இது முடிந்து விடவில்லை. இதற்கு, வர்த்தகம், சிறு தொழிற்துறையைச் சேர்ந்த ஒன்றுடன்

ஒன்று தொடர்புள்ள துறைகளின் வளர்ச்சி, பின்தங்கிய பிரதேசங்களின் வளர்ச்சி, மற்ற சமூக-பொருளாதார பிரச்சினைகளின் தீர்வு ஆகியவற்றின் மீது இவற்றின் மறைமுக செல்வாக்கையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மேற்கூறிய தொழில் நிறுவனங்களில் பெரும்பாலானவை இறக்குமதியை ஈடு செய்யும் துறைகளைச் சார்ந்தவை. ஸ்தல மூலாதாரங்களை அதிகபட்சம் பயன்படுத்துவது இந்த ஒத்துழைப்பின் சிறப்பியல்பாகும். இதனால் இந்த அமைப்புகளின் முதலீடுகளில் இறக்குமதியின் பங்கு இடையறாது குறைய வகை செய்ய முடிகிறது. இது தவிர, இந்த அமைப்புகளில் உற்பத்தி திறன்களைப் பெருக்குவதானது, உயர் தரமான, பாரம்பரியமாக உற்பத்தி செய்யப்படாத பொருட்களின் ஏற்றுமதியை அதிகப்படுத்த உதவுகிறது. இந்தியப் பொருட்களை வாங்கு வதற்காக சோவியத் கடன்களைத் திருப்பிச் செலுத்துகை யில் பணம் தருவதைப் பயன்படுத்துவதானது சோவியத் நாட்டில் இப்பொருட்களுக்கான (ஒரு சில தயாரான பொருட்களும் உபகரண வகைகளும் இவற்றிலடங்கும்) நிலையான தேவை தோன்ற உதவுகிறது.

மேலே குறிப்பிடப்பட்ட சிறப்பியல்புகள் பொருளாதார வளர்ச்சியின் வேகங்கள் மற்றும் விகிதங்கள் மீது நேரடி யாகத் தாக்கம் செலுத்துகின்றன. இதோடு கூட இந்தியப் பொருளாதாரத்தின் மீது மறைமுகத் தாக்கமும் உள்ளது. உதாரணமாக சிறு துணை நிறுவனங்களின் வளர்ச்சி மீதும் இந்திய தொழிற்துறையை ஆங்காங்கே நிலவுவதன் மீதும் தாக்கம் ஏற்படுகிறது. சோவியத் யூனியனுடனான ஒத்துழைப்பின் முக்கிய அமைப்புகளின் அடிப்படையில் சிறு தொழிற்துறையின் 800க்கும் மேற்பட்ட ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள மற்றும் துணை நிறுவனங்கள் (பொக்காரோ உலோகத் தொழிற்சாலையின் கீழுள்ள 300 சிறு தொழில் நிறுவனங்களும் பிலாய் உலோகத் தொழிற்சாலையின் கீழுள்ள 120 சிறு தொழில் நிறுவனங் களும் இவற்றிலடங்கும்) இயங்குகின்றன, கட்டப்படுகின்றன அல்லது கட்டத் திட்டமிடப்படுகின்றன.

சாதாரணமாக, இந்த அமைப்புகள் வளர்ச்சி குன்றிய இடங்களில் குவிந்துள்ளன. இதன் மூலம் பல்வேறு பிரதேசங்களின் வளர்ச்சி மட்டங்களைச் சமப்படுத்தவும்

தொழிற்துறை உற்பத்தியை விவேகமாகப் பகிர்ந்து நிறுவவும் உதவப்படுகிறது. சோட்டாநாக்பூர் (ராஞ்சி, பொக்காரோ), உத்தராகண்ட் (ஹரித்துவார், ரிஷிகேஷ்), மகாகோசலம் (பிலாய்) போன்ற மிகவும் பின்தங்கிய பிரதேசங்கள் தொழிற்துறைமயப்படுத்தப்பட்டதானது மேற் கூறிய அமைப்புகளின் கட்டுமானத்தோடு தொடர் புடையதாயிருந்தது.

பொருளாதார ஒத்துழைப்பு இரு நாடுகளுக்கும் இடையிலான சரக்குகளின் புழக்கம் வளர முக்கியக் காரணியாகத் திகழ்ந்தது. 1955இல் 10.6 மில்லியன் ரூபிள்களாக இருந்த இது 1985இல் 3 பில்லியன் ரூபிள்கள் வரை உயர்ந்தது. மேற்கூறிய அமைப்புகளுக்கான கூட்டு உபகரணங்கள், பொருட்களை வழங்குவதன் மூலம் இந்தியாவிற்கு கணிசமான அளவு சோவியத் இயந்திரங் களும் உபகரணங்களும் ஏற்றுமதி செய்யபடுகின்றன, இந்தியாவிடமிருந்து பல்வேறு பண்டங்களை பெருமளவில் வாங்குவதன் மூலம் கடன் சரி செய்யப்படுகிறது. தேயிலை, முந்திரி, சணல் பொருட்கள், தோல் பொருட்கள், அப்பிர கம், அவலரக்கு, பல மசாலா பொருட்கள் போன்றவற்றை இந்தியா சோவியத் யூனியனுக்கு வழக்கமாக அனுப்புகிறது. சமீப ஆண்டுகளில் இவ்வாறு சோவியத் யூனியனுக்கு இந்தியாவிலிருந்து வரும் பொருட்களின் விஷயத்தில் கணிசமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன, உதாரணமாக இயந்திரங்கள், உபகரணங்களின் பங்கு கூடியுள்ளது.

* * *

ஏற்கனவே குறிப்பிட்டபடி, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார ஒத்துழைப்பு முக்கியமாக, சலுகை நிபந்தனைகளில் இந்தியாவிற்கு நீண்ட காலக் கடன்களை அளிப்பதன் மூலம் நிறைவேற்றப் படுகிறது. 1977 முதல் இச்சலுகைகள் மேலும் அதிகரிக்கப் பட்டன. முந்தைய உடன்படிக்கைகளின்படி கடன்களை 12 ஆண்டுகளில் திருப்பித் தர வேண்டுமெனில் இப்போது 20 ஆண்டுகளில் திருப்பித் தரலாம்; முதல் 3 வருடங்கள் எத்தொகையையும் தர வேண்டியதில்லை, ஆண்டு வட்டி 2.5%. முதலாளித்துவ நாடுகளின் கடன்களுக்கு மாறாக,

*சோவியத் யூனியனின் கடன்கள் விஷயத்தில் குறிப்பிட்ட அமைப்பிற்கான உபகரணங்கள் முழுவதும் வழங்கப்பட்ட பின் திருப்பிக் கொடுக்க ஆரம்பித்தால் போதும். எனவே கடன் கொடுத்த காலத்திலிருந்து பார்த்தால் உண்மையில் இதைத் திருப்பித் தர 25 ஆண்டுகளுக்கு மேலாகும், சராசரியான 10 ஆண்டு சலுகையும் இவற்றிலடங்கும்.*

*முதலாளித்துவ நாடுகளின் கடன்களை அந்நியச் செலாவணியில் திருப்பித தர வேண்டுமெனில், சோவியத் கடன்களை ரூபாயில் திருப்பித் தரலாம். இப்பணத்தை சோவியத் யூனியன் இந்தியப் பொருட்களை வாங்கப் பயன்படுத்துகிறது. ஒரு புறம் இது இந்தியாவின் அந்நியச் செலாவணியை சிக்கனப்படுத்துகிறது, மறு புறம் இந்தியப் பொருட்களை சோவியத் யூனியனுக்கு அனுப்ப நிரந்தர சந்தைகள் கிடைக்கின்றன.*

*உலக நாடுகளிலேயே சோவியத் யூனியன்தான் முதன் முதலாக இந்தியாவிற்கு சலுகை நிபந்தனைகளில் நீண்ட காலக் கடன்களை வழங்கியது. இது வளர்ச்சியடைந்த முதலாளித்துவ் நாடுகள் தாம் கடன் வழங்கும் நிபந்தனை களைத் தளர்த்தும்படி நிர்ப்பந்தித்தது.*

*கடன்களின் நிதி நிபந்தனைகளை, இவற்றைப் பயன் படுத்துவதால் கிடைக்கும் நிதிப் பயன்களிலிருந்து பிரித்துப் பார்க்க இயலாது. சோவியத்-இந்திய ஒத்துழைப்பால் கட்டப்பட்ட அமைப்புகளிலிருந்து வரும் லாபங்கள் சோவியத் கடன்களை விட பன்மடங்கு அதிகம். சோவியத் கடன்களைப் பயன்படுத்தியதானது இவற்றை அடைப் பதற்கான மூல ஊற்றுகளை ஏற்படுத்தியதோடு கூட இந்தியப் பொருளாதாரத்திற்கு கணிசமான முதலீட்டு வாய்ப்புகளையும் வழங்கியது.*

## பொருளாதார ஒத்துழைப்பின் முக்கிய துறைகளும் அமைப்புகளும்

*சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதாரத் தொடர்புகள் கணிசமான அளவு பரவலானவை, இவை கிட்டத்தட்ட இந்தியப் பொருளா தாரத்தின் எல்லா துறைகளிலும் பரவியுள்ளன. 70ஆம் ஆண்டுகளின் துவக்கத்தில் பொருளாதார உறவுகளின் வளர்ச்சியில் பரப்பு ரீதியான கட்டம் முடிவடைந்து இவற்றை*

தீவிரமயப்படுத்தும் கட்டம் துவங்கியது. இக்கட்டத்தில் சோவியத் யூனியனுக்கு இந்தியாவுடன் உள்ள ஒத்துழைப் பின் மேற்கொண்ட வளர்ச்சி, உற்பத்தி ஒத்துழைப்பின் புதிய வடிவங்களைப் புகுத்துவதன் மூலமும் இரு தரப்பு மற்றும் பல்தரப்பு ஒத்துழைப்பு அடிப்படைகளை இணைப் பதன் மூலமும் சோஷலிசப் பொருளாதார ஒருங்கிணைப்பின் (இதில் சம உரிமையுள்ள, காரிய ரீதியான கூட்டாளியாக இந்தியாவும் கலந்து கொள்ளலாம்) அனுபவத்தின் பயன் களையும் பரவலாக பயன்படுத்துவதன் மூலமும் நிர்ணயிக்கப் படும்.

## இரும்பு உலோகத் தொழிற்துறை

இரும்பு உலோகத் துறையிலிருந்துதான் சோவியத்-இந்தியப் பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத் துழைப்பு துவங்கியது, இதில்தான் ஒத்துழைப்பு குறிப்பாக பெரும் அளவுகளை எட்டியது. சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் பிலாயிலும் பொக்காரோவிலும் நாட்டிலேயே மிகப்பெரும் உலோகத் தொழிற்சாலைகள் கட்டப்பட்டன. இவை ஆண்டிற்கு 40 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்யும் திறனை அடையும். 1982 முதல், விசாகபட் டினத்தில் மூன்றாவது தொழிற்சாலை (இது ஆண்டிற்கு 34 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்யும்) கட்டப்பட்டுக் கொண்டிருக்கிறது.

இந்தியாவில் தேவையான எல்லா இயற்கை மூல ஊற்று களும் (இரும்புத் தாது, மாங்கனீஸ், நிலக்கரி, சுண்ணாம்புக் கல் போன்றவை) இருந்த போதிலும் நாடு சுதந்திரம் பெறும் வரை இந்திய உலோகத் தொழிற்துறை வளர்ச்சி பெறவில்லை. இத்துறையை வளர்க்க காலனியாட்சியாளர் கள் விரும்பவில்லை என்பது இதற்கு முக்கியக் காரணமா கும், மேலும் உபகரணங்களையும் தொழில்நுட்பத்தையும் வழங்கக் கூடியவர்கள் யாரும் இல்லை. 1950-51இல் இந் தியாவில் எஃகு உற்பத்தி 15 லட்சம் டன்னாக மட்டுமே இருந்தது. இத்தருணத்தில்தான் இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் தீட்டப்பட்டிருந்தது. இதில் விவசாயத் துறை மற்றும் நீர்ப்பாசன வசதி மீது முக்கியக் கவனம் செலுத்தப்பட்டிருந்தாலும் அரசுத்துறையில், ஆண்டிற்கு

சுமார் 8,00,000 டன் வார்ப்பிரும்பையும் 3,50,000 டன் எஃகையும் உற்பத்தி செய்ய வல்ல புதிய உலோகத் தொழிற் சாலையைக் கட்ட 300 மில்லியன் ரூபாய்களை ஒதுக்கத் திட்டமிடப்பட்டிருந்தது.

ஆனால் நாட்டில் எஃகின் தேவை திட்டமிட்டதை விட அதிகமாக இருப்பதை திட்ட நிறைவேற்றத்தின் முதலாண்டு கள் காட்டின, இதனால் ஒரு சில தொழிற்சாலைகளைக் கட்டும் கடமை முன் நின்றது. ஆனால் உலோகத் தொழிற் சாலையைக் கட்ட உதவ மேற்கத்திய நாடுகள் ஒப்புக் கொள்ள முடியா நிபந்தனைகளை முன்வைத்தன. உதாரண மாக ரூர்கேலாவில் தொழிற்சாலையைக் கட்ட, ''திமாக்'' மற்றும் ''குரூப்'' எனும் மேற்கு ஜெர்மானிய கம்பெனிகள் 12 % வட்டியில் கடன் தர முன்வந்தன, இது தவிர மூலதனத்தில் பங்கு கேட்டன.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் இந்திய அரசாங்கம் சோவி யத் யூனியனிடம் உதவி கோரியது. ஆண்டிற்கு 10 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்ய வல்ல எல்லா உற்பத்தி அம்சங்களையும் உள்ளடக்கிய தொழிற்சாலையின் கட்டு மானத்திற்கு பொருளாதார, தொழில்நுட்ப உதவியை அளிக்க சோவியத் யூனியன் ஒப்புக்கொண்டது. 1955 பிப்ரவரி 2ஆம் தேதி சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற் கும் இடையே உரிய கூட்டு அரசாங்க உடன்படிக்கை கையெழுத்தானது. இதன்படி சலுகை நிபந்தனைகளில் கணிசமான அளவு கெடுவோடு 2% ஆண்டு வட்டிக்கு சோவியத் அரசுக் கடன் வழங்கப்பட்டது.

இந்த உடன்படிக்கை ரூர்கேலாவிலும் துர்காபூரிலும் தொழிற்சாலைகளைக் கட்டுவதற்கு சலுகை நிபந்தனைகளில் கடன்களை வழங்க இணங்குமாறு ஜெர்மன் சமஷ்டிக் குடியரசையும் பிரிட்டனையும் நிர்ப்பந்தித்தது.

1957 மே மாதம் பிலாயில் முதல் உலைக்கு அடிக்கல் நாட்டப்பட்டது. 1959 பிப்ரவரியில் இது முதல் எஃகை உற்பத்தி செய்தது. 1960 அக்டோபரில் ஜவகர்லால் நேரு பிலாயில் ரெயில் ரோலிங் மில்லை இயக்கி வைத்தார். இது அப்போது ஆசியாவிலேயே மிகப் பெரியதாக இருந்தது. 1961 பிப்ரவரியில் தொழிற்சாலையின் எல்லா முக்கியப் பிரிவுகளும் செயல்படத் துவங்கின.

பிலாய் தொழிற்சாலையின் கட்டுமானத்தில் சோவியத்

யூனியனின் உதவி பன்முகத் தன்மையைக் கொண்டதாக இருந்தது. சோவியத் ஸ்தாபனங்கள் தொழில்நுட்ப ஆவணங் களை தயார்படுத்தின, தேவையான உபகரணங்களையும் மற்ற பொருட்களையும் தயாரித்து அளித்தன, கட்டுமானத் திலும் உபகரணங்களை நிலைநாட்டி இயக்குவிப்பதிலும் விரைவாக உரிய உற்பத்தி திறனை இவை எட்டவும் உதவின. நேரடியாக தொழிற்சாலையின் கட்டுமானத்தின் போதும், இதை இயக்குவித்த போதும் மற்றும் விசேஷ பயிற்சி மையத்திலும் இந்திய உலோகத்துறை நிபுணர் களுக்கு சோவியத் நிபுணர்கள் பயிற்சியளித்தனர். ஏராள மான இந்திய நிபுணர்கள் சோவியத் தொழில் நிறுவனங் களில் பயிற்சி பெற்றனர். சோவியத் நாட்டின் தலைசிறந்த தொழில்நுட்ப வல்லுநர்கள் பிலாய் கட்டுமானத்தில் இந் தியாவிற்கு உதவினர். இன்றும் சோவியத்-இந்திய ஒத்து ழைப்பு அமைப்புகளில் ஏராளமான சோவியத் நிபுணர்களும் பெரும் பொருளாதார வல்லுநர்களும் உயர் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களும் பணி புரிகின்றனர்.

இன்று இந்தியாவில் இங்குதான் பெருமளவு எஃகு உற்பத்தியாகிறது. ஆண்டுதோறும் இது நாட்டிற்கு பல் வேறு பொருட்களுக்குத் தேவையான வார்ப்பிரும்பு, தரமான உலோகத் தகடுகள், தண்டவாளங்கள் போன்ற வற்றையும் நாட்டிற்கு மிக அவசியமான இன்னும் பிறவற்றையும் உற்பத்தி செய்கிறது. நாட்டின் மொத்த எஃகு உற்பத்தியில் பிலாயின் பங்கு 23% ஆகும். 1987ஆம் ஆண்டின் துவக்கத்தில் பிலாய் தொழிற்சாலையில் இதன் ஆரம்பத்திலிருந்து 48 மில்லியன் டன் எஃகும் 39 மில்லியன் டன் உலோகத் தகடுகளும் உற்பத்தி செய்யப்பட்டன.

இன்று பிலாய் இந்தியாவில் மிக லாபகரமான உலோகத் தொழிற்சாலை, இங்குதான் எஃகு உற்பத்தியின் அடக்கச் செலவு மிகக் குறைவானது. நவீன தொழில்நுட்பம், நம்ப கரமான உபகரணங்கள், நன்கு பயிற்சி பெற்ற இந்தியத் தொழிலாளர்களும் பொறியியலர்களும் — இதற்கு முக்கியக் காரணங்கள் இவையே.

தொழிற்சாலையை மேலும் விரிவுபடுத்தவும் திட்டமிடப் படுகிறது. பல தொழில்நுட்ப முறைகளை மேம்படுத்துவதன் மூலம் தொழிற்சாலையின் உற்பத்தித் திறனை ஆண்டிற்கு 50 லட்சம் டன் எஃகு வரை உயர்த்தத் தேவையான

அடிப்படைத் திட்ட தொழில்நுட்ப, பொருளாதாரத் திட்டங்களை சோவியத் ஸ்தாபனங்கள் நிறைவேற்றியுள்ளன.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் முதல் குழந்தையாகிய பிலாய் உலோகத் தொழிற்சாலை இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவுகளின் அடையாளச் சின்னமாக உரிமையோடு கருதப்படுகிறது.

ஆண்டிற்கு 10 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்ய வல்ல பொக்காரோ தொழிற்சாலையின் முதல் பகுதி 1978ஆம் ஆண்டு இயக்குவிக்கப்பட்டது. இது இத்துறையில் இரண்டாவது பெரும் ஒத்துழைப்பு அமைப்பாகும். இத் திறப்பு விழாவில் பேசுங்காலை இந்திய ஜனாதிபதி, சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பின் வரலாற்றில் பொக்காரோ ஒரு முக்கிய மைல் கல்லாகும் என்று கூறினார்.

முதலில் இத்தொழிற்சாலையை அமெரிக்க உதவியோடு கட்டத் திட்டமிடப்பட்டது. ஆனால் அமெரிக்க ஐக்கிய நாடு இப்பிரச்சினையின் தொடர்பாக இறுதி முடிவு எடுப்பதைத் தள்ளிப் போட்டு வந்தது. இறுதியாக அமெரிக்க அரசாங்கம் திட்டவட்டமான முன்மொழிவுகளை இந்தியாவிற்கு அளித்த போது, இவை பாரபட்சமானவையாக இருந்ததால் நாட்டில் நியாயமான எதிர்ப்பும் அதிருப்தியும் தோன்றின.

இந்தச் சூழ்நிலையில் பிலாய் தொழிற்சாலையின் கட்டுமானத்தில் வெற்றிகரமான ஒத்துழைப்பு அனுபவத்தை நினைவில் கொண்டு இந்திய அரசாங்கம் சோவியத் யூனியனிடம் உதவி கோரியது.

வடிவமைத்தல் மற்றும் உபகரணங்களின் சப்ளை முதல் சோவியத் நிபுணர்களை அனுப்பியது வரை, இந்திய நிபுணர்களைப் பயிற்சிக்காக சோவியத் நாட்டிற்கு வரவழைத்தது வரை தேவையான எல்லா தொழில்நுட்ப உதவியையும் சோவியத் யூனியன் இந்தியாவிற்கு வழங்கியது. இதில் வடிவமைத்தல், உபகரணங்கள், மற்ற பொருட்களைத் தயாரித்து சப்ளை செய்தல் ஆகியவற்றில் இந்தியாவின் வாய்ப்புகள் அதிகபட்சம் கணக்கில் கொள்ளப்பட்டன.

தொழிற்சாலையின் முதல் பகுதியின் கட்டுமானத்தில் 60,000க்கும் மேற்பட்ட தொழிலாளர்களும் பொறியியலர்

களும் பணியாற்றினர். இந்தியாவெங்குமிருந்து பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் தொழிற்சாலைக்கான ஆர்டர்களை நிறைவேற்றினார்கள். சோவியத் நாட்டின் உலோகத் தொழிற்சாலைகளில் நடைமுறையில் சரிபார்க்கப் பட்ட உயர் தரமுள்ள நவீன உபகரணங்கள் பொக் காரோவில் உள்ளன. கொதி ரோலிங் மில் உள்ள தொழிற் சாலைப் பிரிவு ஒன்றின் நீளம் மட்டும் 1.5 கி.மீ. ஆகும், உலோகத் தகடு உருண்டு போகும் வேகம் பயணிகள் புகைவண்டியின் வேகத்திற்கு (65-70 கி.மீ/மணி) சமமாகும்.

ஆண்டிற்கு 17 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்யும் திறனுள்ள தொழிற்சாலையின் முதல் பகுதி இயக்கி வைக்கப்பட்டதும் இந்தியா ஆண்டு தோறும் சுமார் 14 லட்சம் டன் பற்றாக்குறையான உலோகத் தகடுகளைப் பெற ஆரம்பித்தது.

பொக்காரோ தொழிற்சாலையின் உற்பத்தித் திறனை ஆண்டிற்கு 40 லட்சம் டன் எஃகாக உயர்த்தத் தேவையான கட்டுமானப் பணிகள் 1985இல் முடிவடைந்தன.

புதிய தொழில்நுட்பத்தைப் புகுத்துவதன் மூலமும் உற்பத்தி ஒழுங்கமைப்பை மேம்படுத்துவதன் மூலமும் இத்தொழிற்சாலையின் உற்பத்தித் திறனை மேற்கொண்டு அதிகரிப்பது பற்றி சோவியத் யூனியனும் இந்தியாவும் ஒப்புக்கொண்டன. இத்தொழிற்சாலையின் உற்பத்திப் பொருட்கள் உலகச் சந்தையின் கோரிக்கைகளுக்கு ஏற்றவை யாக உள்ளதால் உள்நாட்டுச் சந்தையின் தேவைகள் போக ஒரு பகுதி பொருட்கள் மற்ற நாடுகளுக்கும் ஏற்று மதி செய்யப்படலாம்.

தொழிற்சாலை வேலை செய்யத் துவங்கியதிலிருந்து 15 மில்லியன் டன் எஃகும் 12 மில்லியன் டன் உலோகத் தகடுகளும் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன.

* * *

உலோகத் தொழிற்சாலைகளைக் கட்டுவதில் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலுள்ள ஒத்துழைப்பின் முக்கிய அம்சம் இந்திய உபகரணங்கள், உலோக கட்டமைப்பு கள் மற்ற பொருட்களின் பங்கு இடையறாது அதி கரித்து வருவதாகும். உதாரணமாக, பிலாய் தொழிற்

சாலையின் முதல் பகுதியின் கட்டுமானத்தின் போது சோவியத் யூனியனிலிருந்து 90 % உபகரணங்களும் 77 % உலோகக் கட்டமைப்புகளும் வந்தன என்றால், பொக் காரோ தொழிற்சாலையைக் கட்டும் போது இவை முறையே 35 % ஆகவும் 8% ஆகவும் குறைந்தன. பெரும் பாலான உபகரணங்கள் இன்று இந்தியத் தொழிற்சாலை களில், முக்கியமாக சோவியத் யூனியனின் உதவியோடு ராஞ்சி, ஹரித்துவார், துர்காபூர், கோட்டா ஆகிய இடங் களில் தோற்றுவிக்கப்பட்டுள்ள இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

MECON (மெட்டலார்ஜிகல் என்ஜினியரிங் கன்ஸல் டன்டஸ்) ஸ்தாபனம் தோற்றுவிக்கப்பட்டதானது இந்திய உலோகத் தொழிற்துறையின் வளர்ச்சிக்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தது. உலோகத் தொழிற் துறையின் முக்கிய திட்ட ஸ்தாபனமாகத் திகழும் இது இரும்பு மற்றும் இரும்பல்லா உலோகத் தொழிற்துறையில் பல அமைப்புகளை உருவாக்கத் தேவையான பொறியியல் வரைபடங்களை சுயமாகத் தயாரிக்கிறது. சமீப ஆண்டு களில் நைஜீரியா மற்றும் அல்ஜீரியா ஆகிய நாடுகள் உட்பட ஒரு சில அயல்நாடுகளில் தொழில் நிறுவனங் களைக் கட்டத் தேவையான பொறியியல் உதவியை அளிப்பது சம்பந்தமாக ஒப்பந்தங்களை MECON செய் துள்ளது.

1978இல் SAIL (ஸ்டீல் அத்தாரிட்டி ஆப் இன்டியா லிமிடெட்) எனும் விஞ்ஞான-ஆராய்ச்சி ஸ்தாபனம் தோற்று விக்கப்பட்டது. இரும்புத் தொழிற்துறையில் நவீன தொழில்நுட்ப மட்டத்தை அப்படியே வைப்பதிலும் விஞ் ஞான-தொழில்நுட்ப சாதனைகளை உரிய தருணத்தில் புகுத்துவதிலும் இது பெரிதும் முக்கியப் பணியாற்றுகிறது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத் துழைப்பு பற்றிய நீண்ட கால செயல்திட்டத்தைத் தீட்டும் போது, இந்தியப் பொருளாதாரத்தின் துரிதமான வளர்ச் சிக்கு இரும்பு உலோகத் தொழிற்துறை பெரிதும் முக்கிய மானது என்பது கவனத்தில் கொள்ளப்படுகிறது; இதனால் இத்துறையில் ஒத்துழைப்பை வளர்ப்பதன் மீது விசேஷ கவனம் செலுத்தப்படுகிறது. சோவியத் யூனியனின் உதவி

யோடு ஆண்டிற்கு 34 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்ய வல்ல மூன்றாவது உலோகத் தொழிற்சாலை விசாகபட்டினத்தில் கட்டப்பட்டு வருகிறது.

இவ்வாறாக, அடுத்துவரும் ஆண்டுகளில் சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பில் இரும்பு உலோகத் தொழிற்துறை தொடர்ந்து முக்கிய இடம் வகிக்கும்.

## இரும்பல்லா உலோகத் தொழிற்துறை

இந்தியாவில் தொழிற்துறை உற்பத்தி அதிகரித்து வருவதால், இயந்திரக் கட்டுமானம், மின்னணுத் தொழில் நுட்பம், மின்னணுத் துறை போன்ற துறைகளிலும் மற்ற துறைகளிலும் இரும்பல்லா உலோகங்களின் தேவை கூடி வருகிறது.

எனவே இரும்பல்லா உலோகத் தொழிற்துறையை வளர்க்க நாட்டில் கணிசமான முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன. சமீப காலமாக பாக்சைட்டு, செம்பு, துத்தநாகம், நிக்கல், ஃபிலுயோரிட், ஆகியவற்றின் பெரும் படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன, இத்துறையில் சில தொழிற்சாலைகள் கட்டப்பட்டு வருகின்றன. அலுமினிய தொழிற்துறையில் அதிகபட்ச வெற்றிகள் அடையப் பட்டுள்ளன, இதில் நாடு முற்றிலுமாக சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்கிறது.

''பாரத் அலுமினிய கார்ப்பரேஷன்'' எனும் அரசு கம்பெனி இக்கடமையின் நிறைவேற்றத்தில் முக்கியப் பங் காற்றுகிறது. சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியா வில் 1982இல் கட்டப்பட்ட அலுமினியத் தொழிற்சாலை இதிலடங்கும். நாட்டிலேயே மிகப் பெரிய அலுமினியத் தொழிற்சாலையாகிய இது ஆண்டிற்கு 1,00,000 டன் அலுமினியத்தை உற்பத்தி செய்ய வல்லது. இத்தொழிற்சாலை யில் பல்வேறு அலுமினியப் பொருட்களை (பாளங்கள், தகடுகள், சுருள்கள், குழாய்கள், இத்தியாதி) உற்பத்தி செய்ய வல்ல மின்பிரிப்பு, வார்ப்பு, தகட்டுச் சுருள், குழாய் உற்பத்திகள் அடங்கும். தற்போது அலுமினிய உற்பத்தியின் போது துணை உலோகமாக ஹீலியத்தை பிரித்தெடுப்பது சம்பந்தமான ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.

இரும்பல்லா உலோகத் தொழில்துறையில் ஒத்துழைப்பு

வளர்ந்து வருகிறது, இதில் புதிய திசையமைவுகளும் வடிவங்களும் ஆராயப்படுகின்றன. ஆந்திர மாநிலத்தில் கடன்களை உற்பத்திப் பொருள் மூலம் திருப்பி தரும் அடிப்படையில் பெரும் பாக்சைட்டு-அலுமினிய தொழிற்சாலையைக் கட்டத் தேவையான பொறியியல் தொழில்நுட்ப விவரங்களை சோவியத் ஸ்தாபனங்கள் இந்தியாவிற்கு அளித்துள்ளன. இத்தொழிற்சாலையின் உற்பத்திப் பொருட்கள் நீண்ட காலத்திற்கு சோவியத் நாட்டிற்கு அனுப்பப்படும்.

இந்திய அலுமினியத் தொழிற்துறையின் விஞ்ஞான-ஆராய்ச்சி மையத்தை ஏற்படுத்துவதில் சோவியத் யூனியன் தீவிரப் பங்கேற்கிறது. இது இரும்பல்லா உலோகங்களில், குறிப்பாக அலுமினியத்தில் சுயதேவையை அதிகபட்சம் பூர்த்தி செய்ய செயல்முனைப்பான பணியை மேற்கொள்ள உதவும். இப்போது இரும்பல்லா உலோகத் தொழில்துறையில் இரு நாடுகளின் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பிற்கான திட்டம் தீட்டப்படுகிறது.

## எண்ணெய் தொழிற்துறை

மிகக் கடினமான சூழ்நிலைகளில்தான் இந்திய தேசிய எண்ணெய் தொழிற்துறை பிறந்து வளர்ந்தது. பரவலான அளவில் எண்ணெய் கண்டுபிடிப்பு பணிகளை நடத்தும் வாய்ப்பு அரசிற்கு மட்டானதாக இருந்தது.

முதலாளித்துவ நாடுகளிலிருந்து உதவி பெறலாம் என்ற அரசாங்கக் கணிப்புகள் எதிர்பார்த்த பயன்களைத் தரவில்லை. தமது கொள்ளை லாபங்களைத் தக்க வைக்கும் பொருட்டு எண்ணெய் கம்பெனிகளின் பிரதிநிதிகள் நாட்டின் எண்ணெய் ஊற்றுகளைப் பற்றி தவறான மதிப்பீட்டை தந்தனர், தானே எண்ணெய் எடுத்து சுத்திகரிப்பில் ஈடுபடும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டாமென அரசாங்கத்தை எச்சரித்தனர்.

சார்பற்ற பொருளாதாரத்தை ஏற்படுத்தும் இந்திய நாட்டத்தைப் புரிந்து கொண்ட சோவியத் யூனியன், அரசு எண்ணெய் தொழில்துறையை ஏற்படுத்துவதிலும் உதவத் தயாரென அறிவித்தது.

1955இல் முதல் சோவியத் எண்ணெய் நிபுணர்களின் குழு இந்தியாவிற்கு வந்தது. இந்தியாவில் கணிசமான

அளவு எண்ணெயும் எரிவாயுவும் இருக்கலாம் என்று இந்தியப் புவியியல் நிபுணர்களோடு சேர்ந்து இவர்கள் கருதுகின்றனர், எண்ணெய் தேடும் பணிகளுக்கான திட்டங்களைத் தீட்டினர். சோவியத் புவியியல் நிபுணர்கள் எண்ணெய் மற்றும் எரிவாயு இருக்கும் வாய்ப்புள்ள படிவியற் படுகைகளின் பரப்பு கிட்டத்தட்ட பத்து லட்சம் சதுர கிலோ மீட்டர்களாகும் (இது இந்தியப் பரப்பளவில் சுமார் 1/3 பங்காகும்) என்று கணக்கிட்டனர்.

1956இல் தோற்றுவிக்கப்பட்ட இந்திய எண்ணெய் மற்றும் இயற்கை எரிவாயு அரசு கமிஷன் சோவியத் நிபுணர்களின் உதவியோடு, சோவியத் நாட்டிலிருந்து வந்த உபகரணங்களைக் கொண்டு திட்ட நிறைவேற்றத்தில் இறங்கியது.

1958 ஜூனில் காம்பேயில் முதல் எண்ணெய் ஊற்று பீச்சிட்டது. இந்த இடத்தில் கணிசமான அளவு இயற்கை எரிவாயுவும் இருப்பது பிந்தைய ஆராய்ச்சிகளிலிருந்து தெரிய வந்தது. 1960 மேயில் அன்க்லேஷ்வர் எனுமிடத்தில் சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள் ''உரால்மாஷ்-5டி'' எனும் இயந்திரத்தின் உதவியால் பூமியைத் தோண்டிய போது முதல் துவாரத்திலிருந்து எண்ணெய் பீச்சிட்டது. தேசிய எண்ணெய் தொழிற்துறையின் வளர்ச்சிக்குப் பெரும் முக்கியத்துவம் அளித்த ஜவகர்லால் நேரு இதை ''வசுதாரம்'' (''செல்வ ஊற்று'') என்றழைத்தார்.

பின்னால் குஜராத் மாநிலத்தில் கலோல் மற்றும் நவ்காம், அஸ்ஸாமில் ருத்ரசாகர் மற்றும் லக்குவா போன்ற இடங்களில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்தியாவில் எண்ணெய் கண்டுபிடிப்புப் பணிகள் நிலப் பரப்புடன் நின்று விடவில்லை. இந்திய அரசாங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க, நாட்டின் தெற்கு மற்றும் மேற்கு கரையோரமாக நிலநடுக்க ஆராய்ச்சிகளை நடத்துவதற்காக ''அக்காடேமிக் அர்ஹான்கெல்ஸ்கி'' எனும் சோவியத் கப்பல் 1964 ஆகஸ்டில் இந்தியக் கரைகளுக்கு வந்தது. இந்த ஆராய்ச்சிகளின் பயனாய், இந்தியக் கரையோரமாக புதிய எண்ணெய் மற்றும் எரிவாயுப் படுகைகள் இருப்பது தெரிய வந்தது.

1961 ஆகஸ்ட் 15ஆம் தேதி இந்திய எண்ணெய் தொழிற்துறையின் வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பதிக்கப்பட

வேண்டிய தேதியாகும். அன்றைய தினம் சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்பட்டு இயக்குவிக்கப்பட்ட அன்க்லேஷ்வர் அரசு எண்ணெய் கிணற்றில் முதன்முதலாக சோதனை எண்ணெய் எடுக்கப்பட்டது. இங்கு எண்ணெய் உற்பத்தி இடையறாது பெருகி 1966இல் திட்டமிட்ட அளவை (நாளொன்றிற்கு 7,500 டன் எண்ணெய்) எட்டியது.

இந்தியாவில் எடுக்கப்படும் ஒவ்வொரு டன் எண்ணெயும் பெருமளவு அன்னியச் செலாவணியை சிக்கனப்படுத்த உதவுகிறது. இவ்வாறு எடுக்கப்பட்ட எண்ணெயால் கிடைத்த லாபங்கள், எண்ணெயைத் தேடவும் மற்றும் ஆலையை இயக்கவும் ஆகும் செலவுகளை எப்போதோ பன்மடங்கு ஈடு செய்து விட்டன.

இந்திய எண்ணெய் மற்றும் இயற்கை எரிவாயு அரசு கமிஷன் சோவியத் யூனியனின் உதவியோடு எரிவாயுவைக் கண்டுபிடிப்பதிலும் எடுப்பதிலும் சக்தி மிக்க, தொழில்நுட்ப ரீதியாக நல்ல வசதிகளைப் பெற்ற ஸ்தாபனமாகியுள்ளது. இதுவரை இக்கமிஷன் நிலப்பரப்பில் மட்டும் 1,600க்கும் மேற்பட்ட எண்ணெய் கிணறுகளை தோண்டியுள்ளது, 38 இடங்களில் எண்ணெயையும் எரிவாயுவையும் கண்டுபிடித்துள்ளது, 100 மில்லியன் டன்னுக்கும் கூடுதலான எண்ணெயையும் 15 பில்லியன் கனமீட்டர் எரிவாயுவையும் எடுத்துள்ளது. சோவியத் யூனியனுடன் ஒத்துழைப்பு நிலவும் ஆண்டுகளில் ஏராளமான புவியியல் தேட்ட கருவிகளும், குழி தோண்டும் இயந்திரங்களும் மற்ற வகையான பொருட்களும் இந்தியாவிற்கு வழங்கப்பட்டுள்ளன, 1,500 சோவியத் நிபுணர்கள் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டுள்ளனர், சுமார் 400 இந்தியப் பொறியியலர்களும் தொழிலாளர்களும் சோவியத் நாட்டில் பயிற்சி பெற்றுள்ளனர். இது தவிர அந்தந்த வேலையிடங்களிலேயே சுமார் 5,000 இந்திய நிபுணர்கள் பயிற்றுவிக்கப்பட்டனர். மேற்கு கரையோரமாக கடலடியில் எண்ணெய்யெடுப்பதில் கமிஷன் பெரும் வெற்றிகளை அடைந்தது; இங்குதான் இன்று இந்தியாவின் எண்ணெய் எடுப்பில் கணிசமான பகுதி கிடைக்கிறது. 1984இல் மொத்தம் எடுக்கப்பட்ட 30 மில்லியன் டன் எண்ணெயில் சுமார் 25 மில்லியன் டன் கடலிலிருந்து எடுக்கப்பட்டது. சமீப ஆண்டுகளாக இக்கமிஷன் அரசுத் துறையிலேயே மிக லாபகரமான நிறுவனங்களில் ஒன்றாகியுள்ளது. அனுபவம்,

நல்ல தொழில்நுட்ப வசதிகள், சிக்கலான புவியியல் தேட்டப் பணிகள், ஆழ் குழி தோண்டும் பணிகள், எண்ணெய் எடுத்தல் ஆகியவற்றைச் சுயமாக நிறைவேற்றும் திறமை முதலியவை இப்பணிகளை அயல்நாடுகளிலும் (இரான், ஈராக், டான்சானியா) காண்ட்ராக்ட் அடிப்படையில் செய்ய கமிஷனுக்கு உதவின.

எண்ணெய் எடுக்கும் தொழிற்துறையில் ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது.

## எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்துறை

சோவியத் யூனியனின் உதவியோடு எண்ணெய் படுகைகள் கண்டுபிடிக்கப்பட்டதும் எண்ணெய் எடுக்கப்பட ஆரம்பித்ததும் தேசிய எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்துறையைத் துவக்க இந்தியாவிற்கு உதவின. 50ஆம் ஆண்டுகளில் நாட்டின் எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்துறை பூராவும் அந்நிய கம்பெனிகளின் கரங்களில் இருந்தது. பம்பாயிலிருந்த எண்ணெய் சுத்திகரிப்பாலைகள் பிரிட்டிஷ் கம்பெனி ''பர்மா ஷெல்லுக்கும்'' அமெரிக்க ''எஸ்ஸோ'' கம்பெனிக்கும் தான் சொந்தமாயிருந்தன, ''கால்டெக்ஸ்'' என்ற அமெரிக்க கம்பெனி விசாகபட்டினத்தில் தொழிற்சாலையைக் கட்டியது.

தம் உற்பத்திப் பொருட்களுக்கு ஏகபோக விலைகளை நிலைநாட்டி, ஏராளமான லாபம் பெற்று வந்த அந்நிய கம்பெனிகள் இந்திய எண்ணெய் பொருட்களின் சந்தையில் முழு ஆட்சி செலுத்தின. அரசு எண்ணெய் சுத்திகரிப்பாலைகளைக் கட்டுவதில் இவற்றின் உதவி கிட்டவில்லை. இந்த ஆலைகளின் முதலீட்டில் பெரும் பங்கு தமக்கு வேண்டுமென்பதையும் சுத்திகரிக்கப்படாத எண்ணெயை தமது சொந்த மூல ஊற்றுகளிலிருந்துதான் பெற வேண்டுமென்பதையும் இவை கட்டாய நிபந்தனைகளாக முன்வைத்தன.

மீண்டும் சோவியத் யூனியன் இந்தியாவின் உதவிக்கு வந்தது. சோவியத் உதவியோடு பரோனியிலும் (பீகார்), கோயாலியிலும் (குஜராத்) ஆண்டிற்கு 30 லட்சம் டன் எண்ணெயை சுத்திகரிக்க வல்ல இரண்டு சுத்திகரிப்பாலைகளும் ஆண்டிற்கு 60 லட்சம் டன் எண்ணெயைச் சுத்திகரிக்க வல்ல பெரும் சுத்திகரிப்பாலை மதுராவிலும் கட்டப்பட்டன.

1963இல் கோயாலியில் எண்ணெய் சுத்திகரிப்பாலை கட்டத் துவங்கும் முன் இது அதிகம் தெரியாத சிறு கிராமமாயிருந்தது. இந்த இடத்தின் அருகே அன்க்லேஷ்வர் மற்றும் கலோலில் எண்ணெய் மற்றும் எரிவாயு கமிஷன் பெரும் எண்ணெய் படுகைகளைக் கண்டுபிடித்ததால், இங்கு சுத்திகரிப்பாலையைக் கட்டுவதென முடிவெடுக்கப் பட்டது. இன்று கோயாலி ஒரு பெரும் தொழிற்துறை மையமாகும். இங்கே கிடைக்கும் எண்ணெய் பொருட் களின் அடிப்படையில் இந்த இடத்திற்கருகே நாட்டிலேயே மிகப்பெரிய அரசு எண்ணெய் இரசாயன நிறுவனம் கட்டப் பட்டது.

கோயாலி எண்ணெய் சுத்திகரிப்பாலையைத் திட்டமிட்டு கட்டியதில்தான் இந்தியாவிலேயே முதன்முதலாக இந்திய ஸ்தாபனங்களின் பங்கு சுமார் 65%ஆக இருந்தது. மிகச் சிக்கலான உபகரணங்களை மட்டுமே சோவியத் யூனியன் அளித்தது. திட்டமிட்டதை கணிசமாக விஞ்சி இன்று கோயாலி சுத்திகரிப்பாலை இயங்குகிறது. இது ஆண்டிற்கு 40-45 லட்சம் டன் எண்ணெயைச் சுத்திகரிக்கிறது. இதற் கான பணிகளை இந்திய நிபுணர்கள் தாமே சுயமாக நிறைவேற்றினர். இவர்களின் உயர்ந்த தொழில் திறமைக்கு இது சான்று பகர்கிறது.

பரோனி கோயாலி மற்றும் மதுராவில் உள்ள எண் ணெய் சுத்திகரிப்பாலைகள் இந்தியப் பொருளாதாரத்திற்கு அவசியமான பல எண்ணெய் பொருட்களை உற்பத்தி செய்கின்றன. சாதாரண வீட்டு தேவைகளுக்கான எரிவாயு, மண்ணெண்ணெய் முதல் விமானங்களுக்கான எரிபொருள் மற்றும் சாலைகளிடத் தேவையான கான்கிரீட் வரை பல பொருட்கள் இவற்றிலடங்கும். ஆலைகளில் உள்ள இயந் திரங்களின் உதவியால் எண்ணெய் பொருட்களின் அளவு விகிதங்களை இவற்றின் தேவைக்கேற்ப மாற்றியமைக்க முடியும்.

இந்தத் தொழிற்சாலைகளின் தொழில்நுட்ப வசதிகள் இவற்றை மேற்கொண்டு அதிகப்படுத்தும் வாய்ப்புகளை நிர்ணயிக்கின்றன. உதாரணமாக, இந்தியா தானே சுயமாக கோயாலி சுத்திகரிப்பாலையின் உற்பத்தித் திறனை ஆண் டிற்கு 73 லட்சம் டன்னாக உயர்த்தியது; இங்கே சுத் திகரிக்கப்படும் எண்ணெயில் ஒரு பகுதி பம்பாய் கரை

யோரமாக உள்ள கடலடியிலிருந்து எடுக்கப்பட்டதாகும். இதற்காக கரையோரப் பிரதேசங்களிலிருந்து தொழிற் சாலைக்கு குழாய்கள் போடப்பட்டுள்ளன.

மூன்று சுத்திகரிப்பாலைகளும் பயன்மிகு வகையில் இயங்கி நல்ல லாபங்களைத் தருகின்றன.

எண்ணெய் தொழிற்துறையில் ஒத்துழைப்பு இதன் கூட்டுத் தன்மைக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். எந்த ஒரு நாட்டின் பொருளாதாரத்திலும் இந்த முக்கியமான துறையின் வளர்ச்சியோடு தொடர்புடைய எல்லா பிரச் சினைகளும் — எண்ணெயைத் தேடுதல் மற்றும் அதை எடுத்தல், சுத்திகரித்தல், ஆராய்ச்சிப் பணிகளையும் பொறி யியல் திட்டப் பணிகளையும் நிறைவேற்றுதல், தேவை யான தொழில்நுட்பத்தையும், விஞ்ஞான செய்திகள், உபகரணங்கள், மற்ற பொருட்களையும் வழங்குதல், நிபுணர் களை அனுப்புதல், தேசிய ஊழியர்களைப் பயிற்றுவித்தல் — இவற்றிலடங்கும்.

இந்தியாவிற்கு பெருமளவு எண்ணெயையும் எண்ணெய் பொருட்களையும் வழங்கும் முக்கிய நாடுகளில் சோவியத் யூனியனும் ஒன்று என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

## எரிசக்தித் துறை

நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கான நிபந் தனைகளில் ஒன்று இதன் எரிசக்தி அடிப்படை விரைவாக வளர வேண்டும் என்பதாகும். இந்த விஷயத்தில் சோவியத் யூனியனின் அனுபவம் குறிப்பிடத் தக்கதாகும். நாட்டை மின்மயப்படுத்தும் பத்தாண்டு திட்டத்திலிருந்துதான் சோவி யத் யூனியனை தொழிற்துறைமயப்படுத்துவது ஆரம்பித் தது.

காலனியாட்சியாளர்கள் இந்தியாவிற்கு விட்டுச் சென்ற தெல்லாம் மொத்தம் 17 லட்சம் கிலோவாட் திறன் உள்ள ஒரு சில மின்நிலையங்கள் மட்டுமே. மின்சக்தித் துறையைக் கிட்டத்தட்ட ஆரம்பத்திலிருந்தே தோற்று விக்கும் கடமை நாட்டின் முன் நின்றது. இக்கடமைக்குப் பெரும் முக்கியத்துவம் அளித்த இந்திய அரசாங்கம் எரிசக்தி துறையை வளர்ப்பது சம்பந்தமான தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டது. ஜவகர்லால் நேரு, ஒரு நாட்டின் முன்

னேற்றத்திற்கு இரண்டு அளவு கோள்கள் உண்டு, உலோகத் தொழிற்துறையின் வளர்ச்சியும் எரிசக்தித் துறையின் வளர்ச்சியுமே அவை என்று கூறினார். இந்த நோக்கில் பார்த்தால் இந்திய எரிசக்தி அடிப்படையின் வளர்ச்சி சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் முக்கியத் திசையமைவு களில் ஒன்றாகத் திகழ்ந்தது.

தமிழ் நாட்டில் நெய்வேலியில் கட்டப்பட்ட 600 மெகாவாட் திறனுள்ள அனல் மின்நிலையம்தான் சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் கட்டப்பட்ட முதல் பெரும் மின்சக்தி அமைப்பாகும். 1959இல் துவங்கிய இக்கட்டுமானம் 250 மெகாவாட், 400 மெகாவாட், 600 மெகாவாட்களாக மூன்று கட்டங்களில் கட்டி முடிக்கப் பட்டது. தலா 50 மற்றும் 100 மெகாவாட் திறனுள்ள யூனிட்டுகள் மின்நிலையத்தில் நிறுவப்பட்டன. இந்த அனல் மின்நிலையத்தின் சிறப்பு அம்சம் என்னவெனில் உள்ளூரில் கிடைக்கும் தரக்குறைவான லிக்னைட் நிலக்கரி எரிபொரு ளாக பயன்படுத்தப்படுவதாகும். லிக்னைட் குறைவான வெப்பத்தையே தந்ததாலும் அதிகமான ஈரப்பசையைக் கொண்டிருந்ததாலும் இவற்றை சிக்கனமாக எரிப்பது பற்றிய பல தொழில்நுட்ப பிரச்சினைகளை சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள் தீர்க்க வேண்டியிருந்தது. 1962 ஆகஸ்டிலேயே நெய்வேலி அனல் மின்நிலையம் மின்சார உற்பத்தியைத் துவக்கியது. இன்று இந்தியா விலேயே மிகப்பெரும் மின்நிலையங்களில் ஒன்றாகத் திகழும் இது பெரும் தொழிற்துறை பிரதேசத்திற்கு மின்சக்தியை வழங்குகிறது. தலா 210 மெகவாட் திறனுள்ள 3 யூனிட்டு களை நிறுவி இம்மின்நிலையத்தின் திறனை 630 மெகா வாட்டாக உயர்த்த அரசாங்கம் முடிவு செய்துள்ளது.

நெய்வேலி மின்நிலையக் கட்டுமான அனுபவம் இன்னும் பல மின்நிலையக் கட்டுமானங்களைக் கூட்டாக மேற் கொள்ள வழி கோலியது. ஓப்ரா (உத்திர பிரதேசம்) என்னுமிடத்தில் 250 மெகாவாட் திறனுள்ள மின்நிலை யத்தையும் கோர்பாவில் (மத்திய பிரதேசம்) இன்னொரு மின்நிலையத்தையும் கட்ட 1961இலும் 1962இலும் ஒப்பந்தங் கள் செய்து கொள்ளப்பட்டன. இவை இன்று வெற்றி கரமாகச் செயல்படுகின்றன. பின்னர் மற்ற உடன்படிக்கை கள் வந்தன. மொத்தமாக இந்தியாவில் சோவியத்

யூனியனின் உதவியோடு 3,000 மெகாவாட்டிற்கும் கூடுதலான திறனுள்ள 11 மின்நிலையங்கள் கட்டப்பட்டுள்ளன.

**சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் கட்டப்பட்ட மின்நிலையங்கள்**

| மின்நிலையத்தின் பெயர் | யூனிட்டுகளின் எண்ணிக்கை | திறன் (மெகாவாட்) |
|---|---|---|
| 1. நெய்வேலி அனல் மின்நிலையம் | 6×50 மெகாவாட்<br>3×100 மெகாவாட் | 600 |
| 2. பக்ரா நீர் மின்நிலையம் | 5×120 மெகாவாட் | 600 |
| 3. கோர்பா அனல் மின்நிலையம் | 4×50 மெகாவாட் | 200 |
| 4. ஒப்ரா அனல் மின்நிலையம் | 5×50 மெகாவாட் | 250 |
| 5. கீழ் சிலேரு நீர் மின்நிலையம் | 2×115 மெகாவாட் | 230 |
| 6. மேட்டூர் நீர் மின்நிலையம் | 4×56 மெகாவாட் | 224 |
| 7. பத்ராது அனல் மின்நிலையம் | 4×50 மெகாவட்<br>2×100 மெகாவாட் | 400 |
| 8. ஹர்த்வாகஞ் அனல் மின்நிலையம் | 2×50 மெகாவாட் | 100 |
| 9. ஹிராகுட் நீர் மின்நிலையம் | 1×25 மெகாவாட் | 25 |
| 10. பாலிமேலா நீர் மின்நிலையம் | 6×60 மெகாவாட் | 360 |
| 11. லிங்கநாமகி நீர் மின்நிலையம் | 2×26 மெகாவாட் | 52 |
| மொத்தம்: | | 3044 |

நீர் மின்நிலையக் கட்டுமானத் துறையிலும் ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்தது. சட்லெஜ் ஆற்றின் வலது கரையில் பக்ரா நங்கல் நீர் மின்நிலையக் கட்டுமானத்தில் சோவியத் நாட்டின் ஒத்துழைப்பை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இங்கு நீர் மின்நிலையத்தைக் கட்டும் எண்ணம் 1908இலேயே உதித்தது. ஆனால் இந்தியா சுதந்திரம் அடைந்த பின்தான் இதை நிறைவேற்ற முடிந்தது. 1955 நவம்பர் 17ஆம் தேதி இந்நிலையத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்ட விழாவில் ஜவகர்லால் நேரு கலந்து கொண்டார். விரைவிலேயே இங்கு 225 மீட்டர் உயரமுள்ள கான்கிரீட் அணை எழுந்தது — இதில் இரண்டு மின்நிலையங்கள் உள்ளன: இடது கரையில் இருக்கும் மின்நிலையம் 450 மெகாவாட் திறனுள்ளது, வலது கரையில் இருக்கும் மின்நிலையம் 600 மெகாவாட் திறனுள்ளது (தலா 120 மெகாவாட் திறனுள்ள ஐந்து யூனிட்டுகள்).

பக்ரா நங்கல் என்பது இந்தியாவிலேயே மிகப்பெரும் நீர் மின்நிலையம் மட்டுமல்ல, இது பல்வேறு பிரச்சினை களைத் தீர்க்க உதவிய ஒரு முழு நீரியக்க இணையம் ஆகும். பக்ரா நங்கல் 7,300 கிராமங்களுக்கும் 128 குடியிருப்புப் பகுதிகள், நகரங்களுக்கும் மின்சாரத்தை வழங்குகிறது. அணையின் உதவியால் 65 லட்சம் ஏக்கர் நிலங்கள் நீர்ப் பாசன. வசதி பெறுகின்றன, 35 லட்சம் ஏக்கர் நிலங்களின் நீர்ப்பாசன வசதி மேம்படுத்தப்பட்டது. இந்திய நிபுணர் களின் மதிப்பீட்டின்படி, நீர்ப்பாசனக் கால்வாய்கள் மற்றும் பம்ப் வசதிகளுக்கான மின்சாரம் முதலியவற்றின் உதவியால் ஆண்டுதோறும் தானியம், பருத்தி, கரும்பு, மற்ற பயிர் களின் உற்பத்தி அதிகரிப்பதால் 2,000 மில்லியன் ரூபாய்கள் லாபம் கிடைக்கிறது.

இது தவிர, ஒரு சில பெரும் தொழிற்துறை அமைப்பு களில் (பிலாய், பொக்காரோ தொழிற்சாலைகள், பரோணி யிலும் கோயாலியிலும் உள்ள எண்ணெய் சுத்திகரிப்பாலை கள் உட்பட) பெரும் மின்நிலையங்கள் கட்டப்பட்டன. இவை அத்தொழில் அமைப்புகளின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. மொத்தத்தில், சோவியத் யூனியனின் உதவி யோடு இந்தியாவில் கட்டப்பட்ட மின்நிலையங்களின் மொத்தத் திறன் கிட்டத்தட்ட 3,200 மெகாவாட் ஆகும். இது நாட்டின் மொத்த எரிசக்தித் திறனில் 10 % விட அதிகம்.

எல்லா மின்நிலையங்களையும் இன்று முழுக்க முழுக்க இந்திய நிபுணர்கள்தான் இயக்குவிக்கின்றனர்.

எரிசக்தித் துறையில் ஒத்துழைப்பின் புதிய கட்டம் 1980 டிசம்பர் 10இல் கையெழுத்தான சோவியத்-இந்திய உடன்படிக்கையோடு தொடர்புடையது. 1,260 மெகாவாட் திறனுள்ள ஒரு பெரும் அனல் மின்நிலையத்தை விந் தியாசலம் எனுமிடத்தில் கட்ட இதில் திட்டமிடப்பட் டுள்ளது. இதன் திறனை 3,000 மெகாவாட் வரை உயர்த் தலாம்.

இந்த உடன்படிக்கை 900 கி.மீ. நீளமுள்ள மின்சாரக் கம்பியைப் போடவும் திட்டமிடுகிறது. இது உத்திர பிரதேச மாநிலத்தின் தொலைதூரப் பகுதிகளுக்கு மின்சாரத்தை எடுத்துச் செல்லும்.

திட்டப்படி 1987இல் விந்தியாசால மின்நிலையம் மின்

உற்பத்தியைத் துவக்க வேண்டும், இதன் மூலம் நாட்டின் எரிசக்தி உள்ளாற்றல் இன்னமும் உயரும்.

1985 மேயில் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி சோவியத் யூனியனுக்கு வருகை தந்த போது இப்பயண முடிவில் கையெழுத்தான ஆவணங்களில் இத்துறையில் பொருளாதார ஒத்துழைப்பின் மீது முக்கியக் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. பொருளாதார ஒத்துழைப்பு பற்றிய புதிய உடன்படிக்கையில், உத்திர பிரதேசத்தில் கெஹல்கவுன் எனுமிடத்தில் 840 மெகாவாட் திறனுள்ள புதிய அனல் மின்நிலையத்தைக் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

## இயந்திரக் கட்டுமானம்

உறுதியான தொழிற்துறை அடித்தளத்தைக் கட்டுவதில் இந்தியா அடைந்துள்ள வெற்றிகள், குறிப்பாக உலோகத் தொழிற்துறை, சுரங்கத் தொழிற்துறை, எண்ணெய் தொழிற்துறை, எரிசக்தித் துறை, தேசிய பொருளாதாரத்தின் இன்ன பிற முக்கியத் துறைகள் ஆகியவற்றின் வளர்ச்சியில் அடையப்பட்ட வெற்றிகள் நாட்டில் பெரும் இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகள், முக்கியமாக கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டதுடன் தொடர்புடையவையாகும்.

கனரக இயந்திரக் கட்டுமானத் துறையின் வளர்ச்சியில் ஒத்துழைப்பது சம்பந்தமான பிரச்சினைகளைக் கலந்தாலோசிப்பதற்காக 1956இல் இந்திய அரசாங்கத்தின் அழைப்பிற்கிணங்க முதல் சோவியத் நிபுணர் குழு இந்தியாவிற்கு வந்தது. இதன் பயனாய் சோவியத் யூனியனின் பங்கேற்போடு இரு பெரும் இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகளை (ராஞ்சியில் கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலை, துர்காபூரில் சுரங்க உபகரண தொழிற்சாலை) கட்டும் முடிவுகள் எடுக்கப்பட்டன. பின்னால் ஹரித்வாரில் கனரக மின் உபகரண தொழிற்சாலையும் கோட்டாவில் உபகரணக் கட்டுமானத் தொழிற்சாலையையும் கட்டுவதென முடிவு செய்யப்பட்டது.

சோவியத் யூனியனின் உதவியுடன் நாட்டில் மிகக் குறுகிய காலகட்டத்திலேயே, உயர் உற்பத்தித் திறனுள்ள, நவீன இயந்திரங்களையுடைய பெரும் அரசு இயந்திரக்

கட்டுமானத் தொழிற்சாலைகள் கட்டப்பட்டன. இவை இந்திய இயந்திரக் கட்டுமானத் துறையின் உட்கருவாயின.

இதனால் பொருளாதார சுதந்திரத்தை அடையும் பாதையில் குறுகிய காலகட்டத்திலேயே இந்தியா கணிசமான வெற்றிகளை அடைந்தது. இத்தொழிற்சாலைகள் பல்வேறு சிக்கலான உபகரணங்களை உற்பத்தி செய்யத் துவங்கியுள்ளன, பிலாய், பொக்காரோ மற்றும் விசாகபட்டினம் தொழிற்சாலைகளுக்கும் மின்நிலையங்களுக்கும் சுரங்கங்களுக்கும் துறைமுகங்களுக்கும் மற்ற அமைப்புகளுக்கும் தேவையான உபகரணங்களைத் தயாரிப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன.

* * *

''ஹெவி என்ஜினியரிங் கார்ப்பரேஷன்'' என்ற அரசு அமைப்பைச் சேர்ந்த ராஞ்சி கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலை ஆண்டிற்கு 80,000 டன் எடையுள்ள பல்வேறு கனரக உபகரணங்களை உற்பத்தி செய்ய வல்லது; உலோகத் தொழிற்துறை, எண்ணெய் தொழிற்துறை, சிமெண்ட் உற்பத்தி, மற்ற வகையான தொழிற்துறைகளுக்கு வேண்டிய உபகரணங்கள் இதிலடங்கும். 1961இல் இத்தொழிற்சாலையின் கட்டுமானம் துவங்கியது. 1963 நவம்பரில் இந்தியப் பிரதமர் ஜவகர்லால் நேரு இதைத் திறந்து வைத்தார்.

கூட்டு அரசாங்க உடன்படிக்கைக்கேற்ப சோவியத் ஸ்தாபனங்கள் ஆராய்ச்சிப் பணிகளையும் பொறியியல் திட்டப் பணிகளையும் நிறைவேற்றின, சுமார் 45,000 டன் எடையுள்ள நவீன தொழில்நுட்ப உபகரணங்களையும் மற்ற வகையான பொருட்களையும் அளித்தன, தொழிற்சாலையைக் கட்டுவதிலும் இயக்குவிப்பதிலும் உதவுவதற்காகத் தம் நிபுணர்களை அனுப்பின. 300க்கும் மேற்பட்ட இந்திய நிபுணர்கள் சோவியத் தொழிற்சாலைகளில் பயிற்சி பெற்றனர்.

ராஞ்சி கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலை உற்பத்தி செய்யும் பொருட்களின் எண்ணிக்கை மற்றும் ரகங்களைக் கொண்டு, இதை சோவியத் யூனியனில் உள்ள ''உரால்மாஷ்'', செச்கோஸ்லொவாக்கியாவில் உள்ள ''ஷ்கோதா'', ஜெர்மன் சமஷ்டிக் குடியரசில் உள்ள

''திமாக்'' போன்ற உலகின் மிகப்பெரும் தொழிற்சாலை களோடு ஒப்பிடலாம். ஆண்டிற்கு 10 லட்சம் டன் எஃகை உற்பத்தி செய்ய வல்ல ஒரு உலோகத் தொழிற்சாலைக்குத் தேவையான உபகரணங்களை இத்தொழிற்சாலை ஓராண் டில் தயாரிக்க வல்லது.

இத்தொழிற்சாலை சிக்கலான உலோக உற்பத்தி இயந்திரங்களையும் மற்ற உபகரணங்களையும் உற்பத்தி செய்கிறது. பிலாய், பொக்காரோ, விசாகப்பட்டினம் உலோகத் தொழிற்சாலைகளைக் கட்டவும் விரிவுபடுத்தவும் மட்டும் ராஞ்சியிலிருந்து 1985 இறுதிவாக்கில் 3,00,000 டன்னுக்கும் மேற்பட்ட உபகரணங்கள் வந்தன. இதனால் இவற்றின் இறக்குமதியை இந்தியாவால் கணிசமான அளவு குறைக்க முடிந்தது. இதுவரை ராஞ்சியில் பல்வேறு தொழிற் துறைகளுக்கும் அவசியமான 5,00,000 டன்னுக்கும் மேற் பட்ட சிக்கலான உபகரணங்கள் உற்பத்தி செய்யப்பட் டுள்ளன.

மிகச் சிக்கலான உபகரணங்களைத் தயாரிப்பதற்கான துணைப் பகுதிகள் சோவியத் யூனியனிலிருந்து வருகின்றன, தொழில்நுட்ப விவரங்கள் தொடர்ந்து அளிக்கப்படுகின்றன, நிபுணர்கள் தொடர்ச்சியாக அனுப்பப்படுகின்றனர்.

இந்த ஒத்துழைப்பில் புதிய அம்சங்கள் — உற்பத்தி கூட்டுறவு அம்சங்கள் – தோன்றின. பொருளாதார மற்றும் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய சோவியத்-இந்தியக் கூட்டு அரசாங்க கமிஷனின் 3வது அமர்வின் முடிவிற்கேற்ப சோவியத் ஸ்தாபனங்கள் மூன்றாவது நாடு களில் சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்படும் அமைப்புகளுக்கான உபகரணங்களுக்கு ராஞ்சி கனரக இயந் திரக் கட்டுமான தொழிற்சாலையிடம் ஆர்டர்களை 1976இல் சமர்ப்பித்தன. இதன்படி யூகோஸ்லாவிய அலுமினியத் தொழிற்சாலைக்காக மின்பகுப்புக் கலங்கள், கியூபாவில் உள்ள நிக்கல் தொழிற்சாலைக்காக இடம் விட்டு இடம் செல்லும் பாரந்தூக்கிகள், பல்கேரியா, எகிப்து, துருக்கி யில் உள்ள உலோகத் தொழிற்சாலைகளுக்கான ஊதுலை கள், துருக்கிய உலோகத் தொழிற்சாலையின் இடையறா வார்ப்புரு இயந்திரங்களுக்கான உபகரணங்கள், ஹங் கேரிக்காக பாரந்தூக்கி உபகரணங்கள் முதலியவை இங்கு உற்பத்தி செய்யப்பட்டன. இவற்றின் மொத்த எடை

சுமார் 20,000 டன்களாகும். ராஞ்சியில் உள்ள கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைக்கும் சோவியத் ஸ்தாபனங்களுக்கும் இடையிலான உற்பத்தி ஒத்துழைப்பு வளர்ந்து வருகிறது. 10,400 டன் எடையுள்ள உபகரணங்களை அளிப்பது சம்பந்தமாக சோவியத் யூனியனுடன் 1980இல் உடன்படிக்கைகள் செய்து கொள்ளப்பட்டன. இவை வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

உற்பத்திக் கூட்டுறவு என்பது பொருளாதார ஒத்துழைப்பின் புதிய வடிவமாகும். இதற்கு ராஞ்சி கனரக இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலை துவக்கமாக இருந்தது. இதன் நிறைவேற்றம் இந்திய இயந்திரக் கட்டுமானத் தொழிற்துறையின் அதிகரித்துள்ள வாய்ப்புகளுக்குச் சான்று பகர்கிறது, இது உலகச் சந்தைக்கு வர வழிகோலியது. இந்த வகையான ஒத்துழைப்பு இந்தியாவிற்கு பல தெட்டத் தெளிவான அனுகூலங்களைத் தருகிறது. இதன் நிறைவேற்றம் இந்தியத் தொழிற்துறை பொருட்களின் ஏற்றுமதி கூடுவதைக் குறிக்கும், இது இத்துறையில் அரசின் கொள்கைக்கு முற்றிலும் ஏற்றதாக உள்ளது, உலகச் சந்தையில் செல்வாக்கைப் பெறவும் தொழிற்சாலையின் உற்பத்தித் திறன்களைப் பெருக்கவும் இது உதவும்.

* * *

சோவியத் உதவியோடு துர்காபூரில் சுரங்க உபகரணத் தொழிற்சாலை கட்டப்பட்டது. ''மைனிங் அண்ட் அல்லைடு மஷினெரி'' என்ற அரசு கார்ப்பரேஷனுக்கு உட்பட்ட இது ஆண்டிற்கு 45,000 டன் உபகரணங்களை உற்பத்தி செய்யும் திறனுள்ளது. 1963 நவம்பரில் ஜவகர்லால் நேரு இதைத் திறந்து வைத்தார். இவ்விழாவின் போது வெளியிடப்பட்ட அதிகாரப் பூர்வமான அறிக்கையில், நிலக்கரியைத் தோண்டி எடுக்கும் உபகரணங்களை உற்பத்தி செய்ய வல்ல இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலை இல்லாததுதான் இந்திய சுரங்கப் பொறியியலர்களுக்கு முக்கியத் தடையாக இருந்தது; இவர்கள் அயல்நாட்டு உபகரணங்களை நம்ப வேண்டியிருந்தது, உள்ளூர் சூழ்நிலைகளுக்கு முற்றிலும் சிறந்ததாக இல்லாத முறைகளைப் பயன்படுத்த வேண்டியிருந்தது என்று கூறப்பட்டிருந்தது. இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண

பதற்காக அரசாங்கம் துர்காபூரில் சுரங்க உபகரணத் தொழிற்சாலையைக் கட்ட முடிவு செய்தது.

சுரங்கத் தொழிலுக்குத் தேவையான எல்லா இயந்திரங் களும் (அதாவது, நிலக்கரியைத் தோண்டியெடுக்கவும், வண்டிகளில் ஏற்றவும், பூமியடியில் வேறிடங்களுக்கு எடுத்துச் செல்லவும் தேவையான உபகரணங்கள், பாரம் தூக்கும் அமைப்புகள், காற்றோட்ட அமைப்புகள், தண்ணீரை இறைத்து வெளியேற்றும் உபகரணங்கள், இத்தியாதி) இத்தொழிற்சாலையில் உற்பத்தி செய்யப்பட்டன. இவை மிகச் சிறந்த சோவியத் மாதிரிகளின் அடிப்படையிலானவை, ஆனால் இவை இயன்ற அளவு அதிக பட்சம் இந்தியச் சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டுள்ளன.

இன்று துர்காபூர் தொழிற்சாலை இந்தியாவில் சுரங்கத் தொழில் உபகரணங்களை உற்பத்தி செய்யும் முக்கியத் தொழிற் சாலையாகும்.

நிலக்கரித் தொழிற்துறை மற்றும் சுரங்கத் தொழிற் துறைக்குத் தேவையான உபகரணங்களை சப்ளை செய் வதோடு கூட துர்காபூர் தொழிற்சாலை பிலாய், பொக் காரோ உலோகத் தொழிற்சாலைகளுக்குத் தேவையான உபகரணங்களையும் துறைமுகங்கள், மற்ற இடங்களுக்குத் தேவையான பாரந்தூக்கிகளையும் உற்பத்தி செய்கிறது. இத்தொழிற்சாலை இதுவரை *3,00,000* டன்னுக்கும் மேற் பட்ட எடையுள்ள உபகரணங்களை உற்பத்தி செய்துள்ளது. சுரங்க உபகரணத் தொழிற்சாலை உற்பத்திக் கூட்டுறவில் சோவியத் ஸ்தாபனங்களுடன் சேர்ந்து தீவிரப் பங்கேற்கிறது. சோவியத் ஆர்டர்களுக்கேற்ப இங்கு இதுவரை *19,000* டன் எடையுள்ள பல்வேறு விதமான உபகரணங்கள் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன.

* * *

*1970*ஆம் ஆண்டு சோவியத் யூனியனின் உதவியோடு ஹரித்வாரில் கட்டப்பட்ட கனரக மின் உபகரணத் தொழிற்சாலை இந்திய அனல் மற்றும் நீர் மின்நிலையங் களுக்குத் தேவையான உபகரணங்களை அளிப்பதில் முக்கியப் பங்காற்றுகிறது. ''பாரத் ஹெவி எலெக்ட்ரிக்கல்ஸ்'' அரசு கார்ப்பரேஷனுக்குச் சொந்தமான இத்தொழிற்சாலை

தெற்காசியாவிலேயே இத்துறையில் மிகப்பெரும் தொழிற் சாலையாகும். நீர் மற்றும் வெப்பச் சக்தியால் இயங்கும் டர்பைன்கள், இவற்றிற்கான ஜெனரேட்டர்கள், நடுத்தர மற்றும் பெரும் சக்தியுள்ள மின்சார மோட்டார்கள், பல்வேறு மின் தொழில்நுட்பக் கருவிகள், மற்ற இயந்திர சாதனங்களை உற்பத்தி செய்ய வல்ல இப்படிப்பட்ட ஒரு பெரும் தொழிற்சாலை பெரும் வளர்ச்சியடைந்த நாடு களில் கூட இல்லை. நாட்டின் டர்பைன் மற்றும் நீர் சக்தியால் இயங்கும் சாதனங்களின் மொத்த உற்பத்தியில் 57 % இத்தொழிற்சாலையைச் சேரும். மொத்தத்தில் இதன் திட்டத் திறன் பின்வருமாறு:

— நீராவி டர்பைன்கள், ஜெனரேட்டர்களின் உற்பத்தி — ஆண்டிற்கு 1,500 மெகாவாட்

— நீர் சக்தியால் இயங்கும் டர்பைன்கள் மற்றும் ஜெனரேட்டர்களின் உற்பத்தி — ஆண்டிற்கு 1,200 மெகா வாட்

— மின்சார என்ஜின்களின் உற்பத்தி — ஆண்டிற்கு 515 மெகாவாட்

சோவியத் யூனியன் இத்தொழிற்சாலையின் கட்டுமானத் திற்குத் தேவையான தொழில்நுட்ப விவரங்களைத் தயாரித் தளித்தது, தொழில்நுட்ப உபகரணங்களை வழங்கியது, தேர்ச்சி மிகு நிபுணர்களை அனுப்பியது. இது தவிர தேவையான துணை பொருட்கள், மற்ற சாதனங்களை சோவியத் ஸ்தாபனங்கள் முறையாக அனுப்புகின்றன. இதனால் மிகச் சிக்கலான எரிசக்தித் துறை உபகரணங் களின் உற்பத்தியை விரைவிலேயே ஆரம்பித்து லாபகரமாகச் செயல்பட முடிந்தது.

200 மெகாவாட் திறனுள்ள டர்பைன் ஜெனரேட்டர் களின் உற்பத்தியில் இந்தியா முதன்முதலாக தேர்ச்சி பெற்றது. இவை இன்று நாட்டின் பல்வேறு மின்நிலையங் களில் நிலைநாட்டப்படுகின்றன. இவற்றை நிறுவுவதி லும் இயக்குவிப்பதிலும் சோவியத் நிபுணர்கள் தொழிற் சாலைக்குப் பரவலாக உதவுகின்றனர். 1978 ஆகஸ்டில் ஓப்ரா அனல் மின்நிலையத்தில் (இதன் முதல் பகுதி சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்பட்டது) இந்தியாவிலேயே முதன்முதலாக உருவாக்கப்பட்ட 210 மெகாவாட் திற

னுள்ள டர்பைன் இயக்குவிக்கப்பட்டது. இதுவும் சோவியத் யூனியனின் உதவியோடு ஹரித்வார் கனரக மின் உபகரணத் தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு பின் இயக்குவிக்கப் பட்டது.

1985ஆம் ஆண்டின் இறுதி வரை இத்தொழிற்சாலை, 200 மற்றும் 210 மெகாவாட் திறனுள்ள சுமார் 45 டர்பைன்களை உற்பத்தி செய்துள்ளது. ராஞ்சி மற்றும் துர்காபூர் தொழிற்சாலைகளைப் போன்றே ஹரித்வார் தொழிற்சாலையும் சோவியத் ஸ்தாபனங்களுடன் தீவிர உற்பத்தி ஒத்துழைப்பில் ஈடுபட்டுள்ளது.

இவ்வாறாக இந்தியா சுதந்திரமடைந்த பின் நாட்டில் இயந்திரக் கட்டுமானத் தொழிற்துறை கணிசமாக வளர்ந் துள்ளது. நாட்டின் இயந்திரக் கட்டுமானம் உள்நாட்டு தேவைகளைக் கிட்டத்தட்ட முழுமையாகப் பூர்த்தி செய் வதாயும், இயந்திரக் கட்டுமானத் தொழில் உற்பத்திப் பொருட்கள் இன்று பாரம்பரியமல்லாத ஏற்றுமதியில் முக்கிய இடம் வகிப்பதாயும் 6வது ஐந்தாண்டு திட்டத்தில் கூறப் பட்டது. அதே சமயம் எரிபொருள்-எரிசக்தி துறைகள், மற்ற தொழிற்துறைகளின் வளர்ச்சி, விவசாய உற்பத்தி தீவிரமடைந்து வருவது, இதற்கேற்ற உள்கட்டமைப்பின் வளர்ச்சி ஆகியவற்றிற்கு கணிசமான அளவு இயந்திரங் களும் உபகரணங்களும் தேவைப்படுகின்றன. இதன் தொடர் பாக, 6வது ஐந்தாண்டு திட்ட காலத்தைப் போன்றே, 7வது ஐந்தாண்டு காலத்தின் போதும் அரசுத் துறையில் இயந்திரக் கட்டுமான வளர்ச்சிக்கு, குறிப்பாக இப்போதுள்ள தொழிற்சாலைகளின் உற்பத்தியை விரிவுபடுத்தி இவற்றின் பொருளாதாரக் குறியீடுகளை மேம்படுத்துவதற்காக இத் தொழிற்சாலைகளை வளர்த்து நவீனப்படுத்த பெரும் மூதலீடு கள் ஒதுக்கப்படும்.

இயந்திரக் கட்டுமானத் தொழிற்துறையில் எதிர்காலத்தில் சோவியத் யூனியனுடனான ஒத்துழைப்பின் வளர்ச்சி மேற்கூறிய லட்சியங்களை அடைய கணிசமான அளவு உதவுகிறது. 1980 டிசம்பர் 10இல் கையெழுத்தான உடன் படிக்கை ராஞ்சி, துர்காபூர், ஹரித்வாரில் உள்ள இயந் திரக் கட்டுமானத் தொழிற்சாலைகளுடன் சோவியத் ஸ்தாபனங்களுக்கு உள்ள உற்பத்தி ஒத்துழைப்பை மேலும் விரிவுபடுத்தத் திட்டமிடுகிறது. மேற்கூறிய ஸ்தாபனங்களுக்கு

இடையிலான உற்பத்தி உறவுகள் நீண்ட காலமாகத் தொடருகின்றன என்பதைக் குறிப்பிட வேண்டும். இதனால் உள்நாட்டுத் தேவைகளுக்கும் மற்றும் ஏற்றுமதிக்கும் தேவையான பல்வேறு வகையான பொருட்களை இந்தியத் தொழிற்சாலைகள் உற்பத்தி செய்கின்றன. இந்தியாவிற்கு நவீன தொழில்நுட்பம் மற்றும் உரிய தொழில்நுட்ப விவரங்களை அளிப்பது, பல்வேறு இயந்திர பாகங்களை வழங்குவது, தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பதில் உதவுவது, சோவியத் யூனியனுக்கும் சோவியத் யூனியனின் உதவியோடு மூன்றாவது நாடுகளில் கட்டப்படும் அமைப்புகளுக்கும் தேவையான உபகரணங்களுக்கு ஆர்டர்களைத் தருவது முதலியன இத்துறையில் முக்கியப் பங்காற்றுகின்றன.

1978 முதல் இதுவரை ராஞ்சி, துர்காபூர், ஹரித்வார் இயந்திரக் கட்டுமானத் தொழிற்சாலைகள், சோவியத் ஆர்டர்களுக்கேற்ப சுமார் 30,000 டன் எடையுள்ள பல்வேறு உபகரணங்களை உற்பத்தி செய்துள்ளன. அடுத்து வரும் ஆண்டுகளில் இந்த சோவியத் ஆர்டர்கள் அதிகரிக்கும், இது இந்தியத் தொழிற்சாலைகளின் வேலைத் திறனைக் கூட்டும், பொருளாதாரக் குறியீடுகளை அதிகரிக்கும்.

## நிலக்கரித் தொழிற்துறை

இந்தியாவில் ஏராளமான நிலக்கரி உள்ளது. இது நாட்டின் எரிசக்தி துறையில் முக்கியப் பங்காற்றுகிறது. இன்று எரிபொருள் என்ற வகையில் நிலக்கரியின் முக்கியத்துவம் இடையறாது கூடி வருகிறது.

நிலக்கரித் தொழிற்துறையின் வளர்ச்சியில் சோவியத் யூனியன் இந்தியாவிற்குத் தீவிர உதவியளித்து வருகிறது. சோவியத் உதவியோடு இந்தியாவில் பல நவீன நிலக்கரிச் சுரங்கங்கள் கட்டப்பட்டுள்ளன. ஆண்டிற்கு 6 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல பான்கா நிலக்கரிச் சுரங்கம், ஆண்டிற்கு 11 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல சுராக்கச்கர் நிலக்கரிச் சுரங்கம், ஆண்டிற்கு 10 லட்சம் டன் நிலக்கரி எடுக்க வல்ல மணிக்பூர் நிலக்கரிச் சுரங்கம், ஆண்டிற்கு 30 லட்சம் டன் நிலக்கரியைச் சுத்திகரிக்க வல்ல கட்டிஹார் நிலக்கரிச் சுத்திகரிப்பாலை முதலியன இவற்



12-637

றிலடங்கும். சுரங்க உபகரணங்களைப் பழுது பார்ப்பதற் காக கோர்பாவில் மத்திய மின் இயந்திரவியல் பட்டறைகள் கட்டப்பட்டுள்ளன. இங்கு ஆண்டிற்கு 7,500 டன் உபகரணங் கள் பழுதுபார்க்கப்படலாம்.

நிலக்கரித் தொழிற்துறையில் உற்பத்தி வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது. மத்திய பிரதேசத்தில் சிங்கரோலி எனுமிடத்திலிருக்கும் நிலக்கரிப் படிவங்களைப் பன்முக ரீதியாகப் பயன்படுத்தத் தேவையான தொழில்நுட்ப-பொருளாதார விவரங்களை 1978இல் சோவியத் நிபுணர்கள் தயாரித்தளித்தனர். ஆண்டிற்கு 80 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல சில சுரங்கங்களை இங்கு தோண்ட வாய்ப் புள்ளது. இந்த இடத்தில் ஆண்டிற்கு 10 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல ஜெயந்த் எனும் நிலக்கரிச் சுரங் கம், ராணிகஞ்சில் ஜன்ஜீரா-1 எனும் சுரங்கம் (28 லட்சம் டன்), ராம்கார்ஹில் கல்கரி சுரங்கம் (30 லட்சம் டன்), சிங்கரோலியில் இயந்திரவியல் பட்டறைகள் (ஆண்டிற்கு 21,000 டன் உபகரணங்கள்) முதலியவற்றைக் கட்டத் தேவையான தொழில்நுட்ப விவரங்களை சோவியத் மற்றும் இந்திய ஸ்தாபனங்கள் தயாரித்தளித்தன. இச் சுரங்கங்களை இந்தியா தானாகவே கட்டி வருகிறது. 1979 மார்ச்சில் கையெழுத்தான நீண்ட கால ஒத்துழைப்பு செயல்திட்டத்தை உருவாக்கும் போது, உலக எரிசக்தி நெருக்கடி ஆழமடைந்து வருவதைக் கணக்கில் கொண்டு நிலக்கரித் தொழிற்துறையில் ஒத்துழைப்பிற்கு விசேஷ முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. நாட்டின் இரும்பு உலோகத் தொழிற்துறையின் வளர்ச்சிக்குத் தேவையான வேகங் களுக்கு வழி கோல கல்கரி உற்பத்தியைப் பெருக்குவதன் மீது முக்கியக் கவனம் செலுத்தப்பட்டது.

இந்த நோக்கங்களுக்காக கல்கரி மற்றும் எரிசக்தி துறைக்கான நிலக்கரியை எடுக்கும் சுரங்கங்களைக் கட்டு வதிலும், புதிய சுத்திகரிப்பாலைகளைக் கட்டுவதிலும், இப்போதுள்ளவற்றை நவீனப்படுத்துவதிலும், நிலக்கரி எடுப்பதில் புதிய, பயன்மிகு தொழில்நுட்பத்தை (குறிப் பாக ஹைட்ராலிக் முறையை) புகுத்துவதிலும் ஒத்துழைக்க நீண்ட கால செயல்திட்டம் திட்டமிடுகிறது. இது தவிர, கரான்பூர் மற்றும் மாகும் என்னும் இடங்களில் நிலக்கரிச் சுரங்கங்களைக் கட்டவும் இப்போதுள்ள சுரங்கங்கள்,

சுத்திகரிப்பாலைகளை நவீனமயப்படுத்தவும் திட்டமிடப் பட்டுள்ளது.

கடுமையான எண்ணெய் நெருக்கடி நிலவும் போது நிலக்கரித் தொழிற்துறையின் தீவிர வளர்ச்சி, தொழிற்துறை உற்பத்தியில் அரசாங்கம் முன்வைத்துள்ள முக்கியக் கடமைகளில் ஒன்றாகும். 1984-85 நிதியாண்டில் 165 மில்லியன் டன்னாக உள்ள நிலக்கரி உற்பத்தியை 1989-90 நிதியாண்டில் 236 மில்லியன் டன் வரை உயர்த்தவும், புதிய நிலக்கரிப் படிவங்களைத் தேடும் பணியை மேலும் தீவிரமாகத் தொடரவும் ஏழாவது ஐந்தாண்டு திட்டம் முடிவு செய் துள்ளது.

நீண்ட கால ஒத்துழைப்பு செயல்திட்டம் மற்றும் 1980 டிசம்பர் 10இல் கையெழுத்தான பொருளாதார, தொழில் நுட்ப ஒத்துழைப்பு பற்றிய உடன்படிக்கையால் வரையறுக்கப்பட்ட திசையமைவுகளில் இத்துறைகளில் பொருளாதார ஒத்துழைப்பை தீவிரப்படுத்துவது மேற்கூறிய கடமையின் நிறைவேற்றத்தில் முக்கியப் பங்காற்றும்.

நிகாயி மற்றும் முக்கூண்டாவின் பெரும் நிலக்கரிச் சுரங்கங்கள் (இவற்றின் மொத்த உற்பத்தித் திறன் முறையே ஆண்டிற்கு 140 மற்றும் 120 லட்சம் டன்களாகும்) அடுத்து வரும் ஆண்டுகளில் நிலக்கரித் தொழிற்துறையில் முக்கிய ஒத்துழைப்பு அமைப்புகளாகத் திகழும். ஆண்டிற்கு 28 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல ஜன்ஜீரா சுரங்கம் (இதில் இரண்டு செங்குத்தான மற்றும் ஒரு கிடைமட்டமான அடுக்குகள் உள்ளன), புதிய நிலக்கரிச் சுத்திகரிப்பாலைகளைக் கட்டுவது, இப்போதுள்ளவற்றை மாற்றியமைப்பது, வட கரான்பூரில் நிலக்கரி கண்டுபிடிக்கப் பட்டுள்ள இடத்தில் நிலக்கரி எடுப்பதற்கான தொழில் நுட்பத் தயாரிப்புகள், புவியியல் ஆராய்ச்சிப் பணிகள் முதலியன இவற்றிலடங்கும்.

இது தவிர, திப்போங் சுரங்கத்தில் நிலக்கரியை எடுப் பதற்கான தொழில்நுட்ப விவரங்களைத் தயாரிக்கும் பணியை சோவியத் ஸ்தாபனங்கள் முடித்துள்ளன, உபகரணங்கள் தயாரிக்கப்பட்டு விட்டன, இப்பணிகளுக்கான நிபுணர் கள் அனுப்பப்பட்டு விட்டனர்; கட்டிஹார் மற்றும் பத்ரீஹ் நிலக்கரிச் சுத்திகரிப்பாலைகளை நவீனமயப்படுத்தும் தொழில் நுட்ப ரீதியான திட்ட நகல்கள் தயாராயுள்ளன; "சிங்

கரேனி கோலெரிஸ்'' என்ற நிலக்கரி கம்பெனியுடனான ஒத்துழைப்பு நன்கு வளர்ந்து வருகிறது.

சின்கூரி நிலக்கரிச் சுரங்கத்தில் நிலக்கரிப் படிவங்களை எடுப்பதற்காக நவீன தானியங்கி முறையைப் பயன்படுத்தும் பரிசோதனைச் சுரங்கத்திற்குத் தேவையான தொழில்நுட்ப நகலையும் சோவியத் நிபுணர்கள் தயாரித்து வருகின்றனர்.

இவ்வாறாக இரு தரப்புகளும் ஏற்கனவே மேற்கொண்ட உறுதிமொழிகளை வெற்றிகரமாக நிறைவேற்றி வருகின்றன. இந்த முக்கியமான துறையில் ஒத்துழைப்பை வளர்க்க நல்ல வாய்ப்புகள் உள்ளன.

மேற்கூறிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டதும், சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்பட்ட புதிய சுரங்கங்களின் மொத்த உற்பத்தித் திறன் ஆண்டிற்கு 300 லட்சம் டன் நிலக்கரியாக இருக்கும். சோவியத் யூனியனின் பங்கேற் போடு ஏற்கனவே கட்டப்பட்ட மற்றும் கட்டத் திட்டமிடப் பட்ட நிலக்கரிச் சுரங்கங்களையும் சேர்த்துக் கொண்டால் சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் பயனாய் நிலக்கரித் தொழிற்துறையில் தோன்றிய அமைப்புகளின் மொத்த உற்பத்தித் திறன் ஆண்டிற்கு 450 லட்சம் டன் நிலக்கரியாக இருக்கும். இது நாட்டின் எரிபொருள் பிரச்சினையின் தீர்வில் கணிசமான பங்காற்றும்.

## மருந்து உற்பத்தித் தொழிற்துறை

இந்தியா சுதந்திரமடைந்த பின் உடல் நலப் பாது காப்புத் துறையிலும் மருந்து உற்பத்தித் துறையிலும் கணிசமான வெற்றிகளை அடைந்துள்ளது. இதனால் நாட்டின் சராசரி வாழும் வயது கூடியுள்ளது, இறப்பு விகிதம் கணிசமாகக் குறைந்துள்ளது. இன்று மருந்து உற்பத்தித் துறையில் இந்தியா அடைந்துள்ள வளர்ச்சி இதை பல வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளுக்கு சமமான மட்டத்தில் வைக்கிறது.

இதிலும் சோவியத் யூனியனுடன் உள்ள ஒத்துழைப்பு பெரும் பங்காற்றுகிறது. இதன் உதவியால் இந்தியாவில் கட்டப்பட்டுள்ள மூன்று பெரும் தொழிற்சாலைகள்தான் இத்துறையில் அரசுத் துறையின் அடிப்படையாக விளங்கு கின்றன. ஹைதராபாதில் உள்ள இரசாயன மருந்து

உற்பத்தித் தொழிற்சாலை, ரிஷிகேஷில் உள்ள ஏன்டி பயாட்டிக் மருந்து உற்பத்தித் தொழிற்சாலை, சென்னையில் உள்ள அறுவைச் சிகிச்சைக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஆகியவை இந்த மூன்று தொழிற்சாலை களாகும். இவை மூன்றும் ''இண்டியன் டிரக்ஸ் அண்ட் ஃபார்மசுடிக்கல்ஸ்'' எனும் அரசுக் கார்ப்பரேஷனின் கீழ் உள்ளன.

சுதந்திரத்திற்கு முன் நாட்டிற்குத் தேவையான மருந்து களில் பெரும் பகுதி வெளிநாடுகளிலிருந்து வந்தது. இவற் றின் விலைகள் மிக அதிகமானவையாக, பெரும்பாலான மக்களுக்கு எட்டாதவையாக இருந்தன. சுதந்திர இந்திய அரசாங்கம் இந்நிலையை மாற்ற முடிவு செய்தது. தம் குடிமக்களுக்கு மலிவான விலையில் மருந்துகள் கிடைக்கு மாறு செய்வது சுதந்திர இந்தியாவிற்கு கடினமான கடமையாக இருந்தது; சொந்த மருந்து உற்பத்தித் தொழிற் துறையை ஏற்படுத்த வேண்டியிருந்தது; இதற்கு நாட்டிற்குப் பொருளாதார மற்றும் தொழில்நுட்ப உதவி தேவைப்பட்டது.

இக்கடமையின் நிறைவேற்றத்தில் அயல்நாட்டு உதவியைப் பெறுவதற்காக 1948இலேயே இந்திய அரசாங்கம் தன் நிபுணர்களை சில மேற்கத்திய நாடுகளுக்கு அனுப்பியது. ஆனால் இதனால் உரிய பயன்கள் கிட்டவில்லை — மேற்கத் திய கம்பெனிகள் இதில் உண்மையான அக்கறை காட்ட வில்லை, அல்லது முற்றிலும் ஏற்கவே முடியாத நிபந் தனைகளை முன்வைத்தன.

1950இல் பென்சிலின் மருந்தை உற்பத்தி செய்யும் சிறு தொழிற்சாலையைக் கட்ட **யூனிசெப்** மற்றும் சர்வதேச உடல் நலப் பாதுகாப்பு ஸ்தாபனத்தின் உதவி இந்தியா விற்கு கிட்டியது. இதன் விளைவாய் பூனா அருகே பிம்ப்ரி யில் அரசுத் துறையில் முதல் ஏன்டிபயாட்டிக் மருந்து உற்பத்தித் தொழிற்சாலை கட்டப்பட்டது. ஆனால் இதனால் நாட்டின் தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்ய இயலவில்லை.

1953இல் இந்திய விஞ்ஞானிகள், நிபுணர்கள் குழு சோவியத் யூனியனுக்கு வருகை தந்தது. சோவியத் விஞ் ஞானிகளும் மருத்துவ நிறுவனங்களும் தம் சாதனைகளை தொழில் ரகசியமாகக் கருதாமல் இவற்றைப் பகிர்ந்து கொள்ளத் தயாராக இருந்தது இவர்களைக் கவர்ந்தது.

விஞ்ஞானிகளின் சாதாரணத் தொடர்புகள் அதிகார பூர்வமான உறவுகளுக்கு வழியமைத்தன. பிலாய் தொழிற் சாலைக் கட்டுமான ஒத்துழைப்பு பற்றிய உடன்படிக்கை 1955இல் கையெழுத்தானதும் இந்திய அரசாங்கம் மருந்து உற்பத்தியில் அரசுத் துறையை உருவாக்கும் திட்டங்களைத் தீட்டும் பொருட்டு சோவியத் நிபுணர்களின் குழுவை வரவழைத்தது.

1956இல் இந்தியாவிற்கு வந்த சோவியத் நிபுணர்கள் தம் சிபாரிசுகளை முன்வைத்தனர். பிம்ப்ரி தொழிற் சாலையை விரிவுபடுத்துவது, மற்ற ஏன்டிபயாட்டிக்குகள், கூட்டிணைப்பு மருந்துகள், வைட்டமின்களை உற்பத்தி செய்ய பல புதிய தொழிற்சாலைகளைக் கட்டுவது முதலியன இவற்றில் அடங்கும்.

மிகப்பெரும் இந்தியச் சந்தையை இழந்து விடுவோமோ என்று அஞ்சிய மேற்கத்திய கம்பெனிகள் தம் கொள்கையை மாற்றிக் கொண்டு, இந்தியத் தனியார் துறை மருந்து கம்பொனிகளுடன் ஒத்துழைக்க இசைவு தெரிவித்தன. இதற்கான ஒரு சில அனுமதிகளை அரசாங்கம் வழங்கியது. ஆனால் இது பிரச்சினையைத் தீர்க்கவில்லை, ஏனெனில் இந்தியாவில் அடிப்படை மருந்துகளின் உற்பத்தியை ஆரம்பிக்க மேற்கத்திய கம்பெனிகள் விரும்பவில்லை; இவை தம் அடிப்படை மருந்துகளைக் கொண்டு மற்ற வகையான மருந்துகளை உற்பத்தி செய்வது சம்பந்தமாக மட்டுமே இந்திய கம்பெனிகளுடன் உடன்படிக்கைகளைச் செய்து கொண்டன.

இரண்டாண்டுகள் கழித்து 1958இல் இந்திய மருந்து உற்பத்தித் தொழிற்துறையின் வளர்ச்சி பற்றிய புதிய திட்டத்தைத் தீட்ட சோவியத் நிபுணர்கள் மீண்டும் இந்தியாவிற்கு அழைக்கப்பட்டனர். இத்திட்டத்தின்படி பல்வேறுவிதமான ஏன்டிபயாட்டிக்குகள், கூட்டிணைப்பு மருந்துகள், வைட்டமின்கள், இரசாயனப் பொருட்கள், மூலிகை மருந்துகள், அறுவைச் சிகிச்சைக் கருவிகள் முதலிய வற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளைக் கட்ட முடிவு செய்யப்பட்டது. இதற்கான பொறியியல் விவரங் களைத் தயார்படுத்துவது, உபகரணங்களை அனுப்புவது, ஊழியர்களைப் பயிற்றுவிப்பது தவிர தேவையான தொழில் நுட்பத்தையும் உற்பத்தி அனுபவத்தையும் அளிக்கவும்

சோவியத் யூனியன் தயாராக இருந்தது; இதற்காக, மேற்கத்திய கம்பெனிகளைப் போல் எவ்வித கட்டணத்தையோ, லாபத்தில் பங்கையோ கேட்கவில்லை. 1959 மே 29ஆம் தேதி கையெழுத்தான கூட்டு அரசாங்க உடன்படிக்கையின் படி இவற்றின் கட்டுமானத்திற்காக சோவியத் யூனியன் கடன்களை வழங்கியது.

விரைவிலேயே ரிஷிகேஷில் ஏன்டிபயாட்டிக் மருந்து உற்பத்தித் தொழிற்சாலையையும், ஹைதராபாதில் இரசாயன மருந்து உற்பத்தித் தொழிற்சாலையையும், சென்னையில் அறுவைச் சிகிச்சைக் கருவிகளைத் தயாரிக்கும் தொழிற்சாலையையும் கட்ட முடிவு செய்யப்பட்டது. இவற்றை நிர்வகிக்க அரசாங்கம் ''இண்டியன் டிரக்ஸ் அண்ட் ஃபார்மசுடிக்கல்ஸ் லிமிடெட்'' என்ற கார்ப்பரேஷனை ஏற்படுத்தியது.

ஹைதராபாதில் உள்ள இரசாயன மருந்து உற்பத்தித் தொழிற்சாலை ஆண்டிற்கு 850 டன் மருந்துகளையும் மற்ற பொருட்களையும் உற்பத்தி செய்ய வல்லது. 1968இல் இயக்குவிக்கப்பட்ட இது இந்தியாவில் மட்டுமின்றி தெற்காசியாவிலும் தென் கிழக்காசியாவிலும் மிகப்பெரியதாகும். காய்ச்சலைக் குறைக்கும் மருந்துகள், வலியை அகற்றும் மருந்துகள், காசநோய்க்கு எதிரான மருந்துகள், தூக்க மருந்துகள், வைட்டமின்கள் போன்ற 7 மருந்து வகைகளின் 30க்கும் மேற்பட்ட அடிப்படை மருந்துகளை இத்தொழிற்சாலை உற்பத்தி செய்கிறது. புதிய வகையான மருந்துகளை உற்பத்தி செய்யவும் இது தயாராகி வருகிறது. இப்போது இதன் உற்பத்தித் திறன் ஆண்டிற்கு 2,000 டன்னாக அதிகரிக்கப்பட்டுள்ளது.

ரிஷிகேஷில் உள்ள ஏன்டிபயாட்டிக் மருந்து உற்பத்தித் தொழிற்சாலை ஆண்டுக்கு 290 டன் மருந்துகளைத் தயாரிக்க வல்லது. 1967இல் இயக்குவிக்கப்பட்ட இது பென்சிலின், ஸ்ட்ரெப்டோமைசின், டெட்ராசைக்ளின், ஆக்ஸிடெட்ராசைக்ளின், கிரிசியோபுல்கின் உட்பட 8 முக்கிய ஏன்டிபயாட்டிக்குகளையும் உற்பத்தி செய்கிறது. இத்தொழிற்சாலையில் உற்பத்தியாகும் மருந்துகள் கேப்சல்கள், டேபலெட்கள், ஆயின்ட்மென்ட்கள், பவுடர்கள், ஊசி மருந்துகள் போன்றவற்றைத் தயாரிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. தொழில்நுட்ப முறையை மேம்படுத்துதல்,

மருந்து உற்பத்தியைப் பெருக்குதல், புதிய வகையான மருந்துகளின் உற்பத்தியைத் துவக்குதல் ஆகியவை சம்பந்த மாக இடையறா பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதனால் பென்சிலின், ஆக்ஸிடெட்ராசைக்ளின், டெட் ராசைக்ளின் போன்றவற்றின் உற்பத்தி திட்டமிடப்பட்டதை விடக் கூடியுள்ளது. செயற்கை ஏன்டிபயாட்டிக்குகளின் உற்பத்தியும் கூடும்.

சென்னையிலுள்ள தொழிற்சாலை ஆண்டிற்கு 25 லட்சம் அறுவை சிகிச்சைக் கருவிகளை உற்பத்தி செய்யும். இன்று இத்தொழிற்சாலை இந்தியாவில் உள்ள பல மருத்துவ நிறுவனங்களின் தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்கிறது.

மானுட நடவடிக்கையின் மனிதாபிமானம் மிக்கத் துறைகளில் ஒன்றாகிய மருந்து உற்பத்தித் தொழிற் துறையில் ஒத்துழைப்பு நல்ல பயன்களைத் தந்துள்ளது; இது தன் மருந்துத் தேவைகளை கணிசமான அளவு பூர்த்தி செய்ய இந்தியாவிற்கு உதவுகிறது.

## வேளாண்மைத் துறை

இந்தியாவில் உணவுப் பொருள் பிரச்சினை நாட்டின் மிக முக்கியப் பிரச்சினைகளில் ஒன்றாகும். அரசாங்கம் இப்பிரச்சினையின் தீர்வின் மீது நிரந்தரக் கவனம் செலுத்தி வருகிறது.

நன்கு இயந்திரமயப்படுத்தப்பட்ட, நவீன பண்ணை களின் மூலம்தான் விவசாய உற்பத்தியை உயர்த்த முடியும் என்பதால் இந்திய அரசாங்கம் பெரும் அரசு விவசாயப் பண்ணைகளை ஏற்படுத்துவதில் உதவுமாறு சோவியத் யூனியனிடம் வேண்டுகோள் விடுத்தது. 1956இல் ராஜஸ்தான் மாநிலத்தில் சூரத்கரில் முதல் அரசு விவசாயப் பண்ணை தோற்றுவிக்கப்பட்டது. சோவியத் யூனியனிலிருந்து இலவச மாக வந்த விவசாய இயந்திரங்களின் அடிப்படையில் உருவான சூரத்கர் பண்ணை நன்கு இயந்திரமயப்படுத்தப் பட்ட பெரும் பண்ணையாகியது; இது இந்திய வேளாண் மைத் துறையின் வளர்ச்சிக்குப் புதிய வாய்ப்புகளைத் திறந்து விட்டது. இந்தியாவில் மட்டும் 100 இப்படிப்பட்ட பண்ணைகள் இருந்தால் உணவுப் பொருள் பிரச்சினையைத்

தீர்த்து விடலாம் என்று ஜவகர்லால் நேரு ஒரு முறை குறிப்பிட்டார்.

பின்னால் மற்ற பண்ணைகளைத் தோற்றுவிப்பதிலும் சோவியத் யூனியன் உதவியது. சோவியத் யூனியன் பரிசாக வழங்கிய விவசாய இயந்திரங்களின் அடிப்படையில் ஹிசார், ராய்ச்சூர், லடோவால், கண்ணனூர், ஜேத்சர் ஆகிய இடங்களில் 5 அரசுப் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டன. இவை இப்போது சிறப்பாக இயங்கி வருகின்றன.

1969இல் இப்பண்ணைகளை நிர்வகிக்கவும் புதிய பண்ணை களைத் தோற்றுவிக்கவும் விவசாயப் பண்ணைகளின் அரசு கார்ப்பரேஷன் ஏற்படுத்தப்பட்டது. இன்று 14 பண்ணைகள் இதன் நிர்வகிப்பின் கீழ் உள்ளன, பல்வேறு மாநிலங்களில் புதிய பண்ணைகளைத் தோற்றுவிக்கத் திட்டமிடப்படுகிறது. இந்த ஆண்டுகளில் இக்கார்ப்பரேஷன் கணிசமான வெற்றிகளை அடைந்துள்ளது; லாபம் கூடி வருகிறது.

தானிய உற்பத்தியோடு கூட பல பண்ணைகளில் ஆடுகள், பன்றிகள் வளர்க்கப்படுகின்றன, இவை மீன் பிடிப்பில் ஈடுபடுகின்றன, பலவற்றில் பழத்தோட்டங்கள் உள்ளன. கார்ப்பரேஷனின், குறிப்பாக சோவியத் யூனி யனின் உதவியால் ஏற்படுத்தப்பட்ட பண்ணைகளின் செயல் வன்மை ஆண்டுதோறும் கூடி வருகிறது; இது நாட்டின் உணவுப் பொருள் உற்பத்தியில் கணிசமான பங்காற்றுகிறது.

வேளாண்மைத் துறையில் இரு நாடுகளுக்கும் இடையில் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றி 1971 ஜூலை யில் உடன்படிக்கை கையெழுத்தான பின் இந்த ஒத் துழைப்பு மேலும் வளர்ச்சியடைந்தது. இரு தரப்புகளும் விஞ்ஞான-தொழில்நுட்ப விவரங்களைப் பரிமாறிக் கொள்ள இது வகை செய்கிறது, வேளாண்மைத் துறையின் பல்வேறு பிரச்சினைகளின் தீர்வில் இரு நாடுகளின் விஞ்ஞான ஆராய்ச்சி ஸ்தாபனங்களும் ஒத்துழைக்க இது வழி கோலுகிறது.

நீண்ட கால செயல்திட்டத்திலும் வேளாண்மைத் துறையில் ஒத்துழைப்பிற்கு பெரும் கவனம் செலுத்தப்பட் டுள்ளது. பயிர்த்தொழில், கால்நடைத் துறை, நில மீட்பு ஆகியவற்றிலும், தாவர விதைகளையும் உயர் விளைச்சல் தரும் பயிர்மாதிரிகளையும் பரிமாறிக் கொள்வதிலும், பயிர்

பாதுகாப்பிலும், கால்நடை ரகங்களை மேம்படுத்துவதிலும், தானியப் பயிர்கள் மற்றும் எண்ணெய் பயிர்களை சாகுபடி செய்யும் முறைகளை ஆராய்வதிலும், பாலை நிலங்களையும் உப்பு அதிகமான இடங்களையும் மீட்பதிலும் உள்ள ஒத்துழைப்பை பரவலாக வளர்ப்பது என்று இரு தரப்புகளும் ஒப்புக்கொண்டன.

சூரத்கர் பண்ணைக்கு விவசாய இயந்திரங்களையும் மற்ற வகையான கருவிகளையும் இலவசமாக வழங்குவது குறித்து 1979 மார்ச்சில் சோவியத் யூனியனுக்கும் இந்தியா விற்கும் இடையே ஒரு உடன்பாடு கையெழுத்தானது.

இந்தியச் சூழ்நிலையில் விவசாய உற்பத்தியை உயர்த்த நீர்ப்பாசனக் கட்டுமானத்தின் பரவலான வளர்ச்சி மிக முக்கியக் காரணியாகும். எனவே நீர்ப்பாசனத் துறையில் ஒத்துழைப்பை அதிகப்படுத்த இரு தரப்புகளும் ஒப்புக் கொண்டுள்ளன. இதற்காக சோவியத் நிபுணர் குழு இந்தியா விற்கு வருகை தந்து இந்திய நிபுணர்களுடன் கூட் டாகச் சேர்ந்து ஒரு வேலைத் திட்டத்தைத் தீட்டியது. நீர்ப்பாசனக் கால்வாய்களைக் கட்டத் தேவையான கான் கிரீட் பாளங்களையும் கட்டமைப்புகளையும் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளைக் கட்டவும், அணைகளை கட்டும் போது கட்டுப்படுத்தத் தக்க வெடிப்புகளைப் பயன்படுத்தவும், ஆறுகளின் போக்கை மாற்றியமைக்கும் முறையையும் பூமியடி நீரைப் பயன்படுத்தும் முறையையும் பயிலவும், மூன்றாம் நாடுகளில் கூட்டாக ஒத்துழைக்கவும் இந்த வேலைத்திட்டம் வழிகோலுகிறது.

## தேசிய ஊழியர்களைப் பயிற்றுவித்தல்

தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பது பொரு ளாதார ஒத்துழைப்பின் முக்கியத் திசையமைவுகளில் ஒன்றாகும். சுதந்திரமடைந்த உடனேயே இந்திய அரசாங் கம் தொழிற்துறை வளர்ச்சியோடு கூட, பல்வேறு மட்டங் களில் தேசியப் பொருளாதாரத்தை வெற்றிகரமாக நிர்வகிக்க தன் தேசிய ஊழியர்களைப் பயிற்றுவிக்கும் கடமையை முன்வைத்தது.

உலகிலும் இந்தியாவிலும் தொழில்நுட்பம் முன்னேறி யதால், கட்டப்பட்ட தொழில் நிறுவனங்களின் உற்பத்தி

ஆற்றலை நன்கு பயன்படுத்தவும், நாட்டின் உள்ளே விஞ்ஞான ஆராய்ச்சிப் பணிகளைத் தீவிரமாக வளர்க் கவும், சொந்த சக்திகளைக் கொண்டு தொழில் நிறுவனங் களைத் திட்டமிடவும் தேவையான தேர்ச்சி மிகு ஊழியர் களின் பற்றாக்குறை பெரிதும் உணரப்பட்டது.

தேசிய ஊழியர்களைப் பயிற்றுவிப்பதில் இந்தியாவிற்கு சோவியத் யூனியன் அளித்த உதவி மொத்தத்தில் இரு நாடுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பின் கடமைகளுடன் — அதாவது இந்தியப் பொருளாதாரத்தின் முக்கியத் துறை களுக்கு, குறிப்பாக நாட்டுப் பொருளாதார வளர்ச்சியின் அடிப்படையாகிய கனரக தொழிற்துறைக்கு பொருளாதார, தொழில்நுட்ப உதவியை அளிப்பதுடன் — இடையறா தொடர் புடையதாகும்.

இரு நாடுகளுக்கும் இடையிலான பொருளாதார, தொழில் நுட்ப, விஞ்ஞான ஒத்துழைப்பு பற்றிய எல்லா உடன்படிக்கை களிலும், தொழில் நிறுவனங்கள், மற்ற அமைப்புகளைக் கட்ட உதவும் அம்சத்தோடு கூட, இந்திய நிபுணர்களையும் ஊழியர்களையும் பயிற்றுவிப்பதிலும் சோவியத் யூனியன் உதவும் என்ற அம்சமும் அடங்கியுள்ளது.

30 ஆண்டுகளுக்கும் மேற்பட்ட ஒத்துழைப்பு காலத்தில் சோவியத் யூனியனின் உதவியோடு 1,30,000க்கும் மேற்பட்ட இந்திய நிபுணர்கள் பயிற்றுவிக்கப்பட்டுள்ளனர். இந்தியத் தேசிய ஊழியர்களைப் பயிற்றுவிப்பதில் பின்வரும் வழிகளில் சோவியத் யூனியன் பங்கேற்கிறது:

1. புதிய தொழிற்துறை நிறுவனங்களின் கட்டுமானத்தின் போதும், இதற்கான உபகரணங்கள், கருவிகளை நிலை நாட்டி, இயக்குவிக்கும் போதும் பொறியியல்-தொழில்நுட்பப் பணியாளர்களையும் தேர்ச்சி மிகு ஊழியர்களையும் பயிற்றுவித்தல்.

சமீப ஆண்டுகளாக சோவியத்-இந்திய ஒத்துழைப்புக் கட்டுமானங்களில் சோவியத் நிபுணர்களின் எண்ணிக்கை 50ஆம் — 60ஆம் ஆண்டுகளில் இருந்ததை விடக் கணிசமான அளவு குறைவாகும் எனும் அம்சம் இத்துறையின் வெற்றிகளுக்கு நல்ல சான்றாகும். எனவே இந்தியப் பொறியியலர்களும் தொழில்நுட்பப் பணியாளர்களும் கட்டுமானத் தொழிலாளர் களும் வெற்றிகரமாகத் தம் பணிகளில் தேர்ச்சி பெற்று வருகின்றனர், புதிய தொழில் நிறுவனங்களைச் சுயமாக

கட்ட சோவியத் சக ஊழியர்களின் உதவியோடு கற்று வருகின்றனர் என்று தெரிகிறது.

2. சோவியத் யூனியனின் உதவியோடு கட்டப்பட்ட தொழில் நிறுவனங்கள் செயல்படும் போது இவற்றில் பொறியியல்-தொழில்நுட்பப் பணியாளர்களையும் தேர்ச்சி மிகு ஊழியர்களையும் பயிற்றுவித்தல், இவர்களின் தரத்தை உயர்த்துதல்.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் உதவியால் கட்டப் பட்ட கிட்டத்தட்ட எல்லா தொழிற்துறை அமைப்புகளின் வெற்றிகரமான பணி இதன் விளைவாகும். சோவியத் நிபுணர்களிடமிருந்து பெற்ற அனுபவத்தின் அடிப்படையில் இந்திய நிபுணர்கள் தாமாகவே இந்தத் தொழில் நிறுவனங் களை இயக்கி வருகின்றனர்.

இதுவரை, இவ்வாறு கட்டப்படும் மற்றும் கட்டி முடிக்கப்பட்டு செயல்படும் அமைப்புகளில் 90,000க்கும் மேற்பட்ட தேர்ச்சி மிகு இந்தியத் தொழிலாளர்களும் தொழில்நுட்பப் பணியாளர்களும் பயிற்றுவிக்கப்பட்டுள்ள னர். இவற்றில் தோற்றுவிக்கப்பட்ட கல்வி மையங்களில் ஆண்டு தோறும் ஒரு சில ஆயிரம் பேர் பயிற்சி பெறு கின்றனர்.

3. சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் அமைக்கப்பட்ட கல்விக் கூடங்களில் தேசிய ஊழியர்களைப் பயிற்றுவித்தல்.

இத்திசையில் சோவியத் யூனியனின் முதல் நடவடிக்கை, பம்பாய் தொழில்நுட்பக் கல்லூரியை ஏற்படுத்தியதில் இது ஆற்றிய பங்காகும். 1958இல் 100 மாணவர்கள் முதன் முதலாக இதில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இன்று இதில் சுமார் 2,500 மாணவர்களும் ஆராய்ச்சியாளர்களும் பயிலுகின்றனர், ஆண்டு தோறும் 8 துறைகளில் 300 நிபுணர் கள் பட்டம் பெறுகின்றனர்.

1966 டிசம்பர் 10இல் கையெழுத்தான கூட்டு அரசாங்க உடன்படிக்கை இந்த ஒத்துழைப்பை குணாம்ச ரீதியாகப் புதிய உயர்வான மட்டத்திற்கு உயர்த்த திட்டமிட்டது: அதாவது இப்போதுள்ள உயர் கல்விக் கூடங்களில் சில விசேஷ துறைகளில், குறிப்பாக இந்தியப் பொருளாதாரத் திற்கு மிகவும் தேவையான துறைகளில் சுயமான பிரிவு களை ஏற்படுத்த உதவுவதென முடிவு செய்யப்பட்டது.

இதன்படி ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக்கழகத்தில் புவி-பௌதீகப் பிரிவும், கரக்பூர் தொழில்நுட்பக் கல்லூரியில் உலோகத் துறைப் பிரிவும், பம்பாய் தொழில்நுட்பக் கல்லூரியில் விமானக் கட்டுமானப் பிரிவும், பங்களூர் விஞ்ஞானக் கேந்திரத்தில் தானியங்கித் துறை, கம்ப்யூட்டர் பிரிவும் ஏற்படுத்தப்பட்டன.

உலோகத் துறை (பிலாய்), இயந்திரக் கட்டுமானம் (ராஞ்சி), எண்ணெய், எரிவாயுத் தொழிற்துறை (பரோடா), மின்னணு மற்றும் எரிசக்தித் துறை (ஹைதராபாத்) போன்ற துறைகளில் சோவியத் யூனியனின் உதவியால் ஏற்படுத்தப்பட்ட தொழில்நுட்பக் கூடங்கள் உற்பத்தியை இயக்குவிக்கும் தொழில்நுட்ப பணியாளர்களைப் பயிற்றுவிப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன. இவற்றின் பாடத் திட்டங்கள் பெரும்பாலும் சோவியத் ஆசிரியர்களின் உதவியோடு உருவாக்கப்பட்டவை.

மொத்தமாக, சோவியத் யூனியனின் உதவியோடு இந்தியாவில் கட்டப்பட்ட உயர் மற்றும் தொழிற் கல்விக் கூடங்களில் 35,000க்கும் மேற்பட்டோர் பயிற்றுவிக்கப்பட்டுள்ளனர்.

4. சோவியத் யூனியனில் உள்ள தொழில் நிறுவனங்களிலும் உயர்கல்விக் கூடங்களிலும் இந்திய நிபுணர்களைப் பயிற்றுவித்தல்.

சோவியத் யூனியனில் 4,500க்கும் மேற்பட்ட இந்திய நிபுணர்கள் பயிற்சி பெற்றுள்ளனர்.

## விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு

விடுதலையடைந்த நாடுகள் சிக்கலான சமூக-பொருளாதார பிரச்சினைகளைத் தீர்க்கும் போது, சொந்தமான விஞ்ஞான-தொழில்நுட்ப அடித்தளத்தைத் தோற்றுவிக்கும் அவசியம் இவற்றின் முன் நிற்கிறது. இந்நாடுகளின் பொருளாதாரக் கட்டமைவின் பயன்மிகு வளர்ச்சி, இன்றைய சூழ்நிலைகளில் இந்த அடித்தளத்தின் அளவையும் பண்பு ரீதியான மட்டத்தையும் கணிசமான அளவு பொறுத்துள்ளது.

சமத்துவம் மற்றும் பரஸ்பர அனுகூலத்தின் அடிப்படையில் சோவியத் யூனியனுடனும் மற்ற சோஷலிச

நாடுகளுடனும் உள்ள இரு தரப்பு பொருளாதார, விஞ் ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு வளர்முக நாடுகள் தொழில்நுட்பத்தைப் பெறவும் இதன் மூலம் விஞ்ஞான மற்றும் தொழில்நுட்ப உள்ளாற்றலைப் பெருக்கவும் முக்கிய வழியாகத் திகழுகிறது.

சர்வதேச பொருளாதார உறவுகளின் நடைமுறையில் தொழில்நுட்பத்தை அளிப்பது என்பதற்குப் பரவலான பொருள் உண்டு. நவீன இயந்திரங்கள், உபகரணங்கள், தனிக்காப்புரிமைகள், லைசன்சுகள், தொழில்நுட்ப விவரங் கள் முதலியவற்றை விற்பது, ஆலோசனைகளையும் மற்ற வகையான தொழில்நுட்ப உதவியையும் அளிப்பது, தேசிய ஊழியர்களின் பயிற்சியில் உதவுவது ஆகியன எல்லாம் இதிலடங்கும். அதாவது, தொழில் நிறுவனங்களையும் மற்ற அமைப்புகளையும் கட்டுவதில் வளர்முக நாடுகளுக்கு சோவியத் யூனியன் உதவுவது பற்றிய அந்தந்த கூட்டு அரசாங்க உடன்படிக்கைகளில் குறிப்பிடப்பட்டுள்ள கிட்டத் தட்ட எல்லா அம்சங்களும் இதிலடங்கும். இரு தரப்பு ஒத்துழைப்பின் அடிப்படையில் தொழில் நிறுவனங்கள், மற்ற அமைப்புகளைக் கட்டி இவற்றை இளம் அரசுகளிடம் முழுமையாக ஒப்படைப்பது, இவற்றில் பரிசோதனைக் கூடங்கள், பொறியியல் வரைபட அமைப்புகள், தேசிய ஊழியர்களைப் பயிற்றுவிக்கும் மையங்கள் முதலியவற்றை ஏற்படுத்துவது, இந்த அமைப்புகளைக் கட்டும் போதும் இயக்குவிக்கும் போதும் ஸ்தல மூல ஊற்றுகளை அதிக பட்சம் பயன்படுத்துவது ஆகியன பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பில் வளர்முக நாடுகளுடன் சோவியத் யூனியனுக்கு உள்ள உறவுகளின் அம்சங்களாகும். இவை வளர்முக நாடுகளின் தொழில்நுட்ப ரீதியான பின்தங்கிய நிலையை அகற்ற உதவுகின்றன.

வளர்முக நாடுகளுக்கு சோவியத் யூனியன் தொழில் நுட்பத்தைப் பல்வேறு விதங்களில் அளித்து வந்துள்ளது. முதலில், தொழில்நுட்பத்தை வழங்குவது என்பது வளர்முக நாடுகளுக்குப் பொருளாதார, தொழில்நுட்ப உதவியை நல்கும் போக்கில் ஒரு துணை அம்சமாக மட்டுமே இருந் தது என்றால், பின்னால் இப்பிரச்சினைகளைப் பொருளா தார உறவுகளின் சுயமான பகுதியாக மாற்றும் அவசியம் ஏற்பட்டது. கூட்டு விஞ்ஞான ஆராய்ச்சி, மூலாதாரங்

களைப் பன்முக ரீதியாக மீட்கும் திட்டங்களைத் தீட்டுதல், தனிக்காப்புரிமைகள் மற்றும் லைசன்சுகளைப் பகிர்ந்து கொள்ளுதல், விஞ்ஞான ஊழியர்களைப் பயிற்றுவித்தல், அடிப்படை மற்றும் செயல்முறை விஞ்ஞானத் துறைகளிலும் திட்டமிடுதலிலும் ஒத்துழைப்பு முதலியன இப்பிரச்சினைகளில் அடங்கும்.

இவ்வாறாக இன்று வளர்முக நாடுகளுக்கு இரண்டு வழிகளில் விஞ்ஞான்-தொழில்நுட்ப விவரங்கள் அளிக்கப் படுகின்றன. தொழில் நிறுவனங்களையும் மற்ற அமைப்புகளையும் கட்ட உதவும் போதும், அந்தந்த கூட்டு அரசாங்க ஆவணங்களின் வரம்புகளுக்குள் நேரடியான விஞ்ஞான தொழில்நுட்ப தொடர்புகளின் மூலமும் இவை அளிக்கப்படுகின்றன.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார மற்றும் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு நாட்டில் பயன்மிகு விஞ்ஞான-தொழில்நுட்ப கட்டமைப்பின் வளர்ச்சி மீது இரு தரப்பு ஒத்துழைப்பு செலுத்தும் நல்ல செல்வாக்கிற்கு சான்றாகும். இந்த ஒத்துழைப்பின் 30ஆவது ஆண்டு நிறைவு 1985 பிப்ரவரி 2இல் கொண்டாடப்பட்டது.

இந்த ஆண்டுகளில் சோவியத்-இந்தியப் பொருளாதார, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு பொருளாதாரம், விஞ்ஞானம், தொழில்நுட்பத்தின் பல்வேறு துறைகளுக்கும் பரவி பெருமளவை எட்டியுள்ளது, நாட்டைத் தொழிற் துறைமயப்படுத்துவதில் கணிசமான பங்காற்றுகிறது. சோவியத் யூனியன் நவீன விஞ்ஞான-தொழில்நுட்ப சாதனைகளை அதிகபட்சம் பயன்படுத்தி இந்தியாவிற்கு விஞ்ஞான-தொழில்நுட்ப ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் உதவுகிறது எனும் அம்சம் நாட்டை தொழிற்துறைமயப் படுத்துவதில் இந்தியா அடைந்த வெற்றிகளுக்கான முக்கியக் காரணங்களில் அடங்கும்.

சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பின் சிறப்பு அம்சம் என்னவெனில் இதன் சர்வாம்சத் தன்மையாகும். அதாவது தொழில் நிறுவனங்கள் கட்டப்படும் அதே சமயம் உரிய மூலப்பொருள், மற்ற உள் கட்டமைப்பு நிறுவனங்களும், பொறியியல் வரைபட மற்றும் விஞ்ஞான-தொழில்நுட்ப ஸ்தாபனங்களும் கட்டப்படுகின்றன. ஏற்

கனவே குறிப்பிடப்பட்ட இம்மாதிரியான ஸ்தாபனங்களைத் தவிர, எண்ணெய் கிணறுகளைத் தோண்டும் தொழில் நுட்பம் குறித்த விஞ்ஞான ஆராய்ச்சி கேந்திரத்தை (டேராடூன்) தோற்றுவிப்பதிலும் எண்ணெய் கிணறுகளைப் பயன்படுத்தும் விஞ்ஞான ஆராய்ச்சி கேந்திரத்தை (அஹமதாபாத்) ஏற்படுத்துவதிலும் சோவியத் யூனியன் தீவிரப் பங்கேற்றது. மேற்கூறிய ஸ்தாபனங்களும் கேந்திரங் களும் அந்தந்தத் துறைகள் நவீன விஞ்ஞான தொழில்நுட்ப மட்டத்திற்கேற்ப வளர்ச்சியடைய வழிகோலும் முக்கிய மையங்களாகத் திகழுகின்றன.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு வெளிப் பொரு ளாதார உறவுகளின் தனித் துறையாக 70ஆம் ஆண்டுகளின் துவக்கத்தில்தான் உருவெடுத்தது. 1972இல் விஞ்ஞான, தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய முதல் கூட்டு அரசாங்க உடன்படிக்கை கையெழுத்தான பின் இது இன்னமும் பரவலானது.

1972இல் பொருளாதார, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய சோவியத்-இந்தியக் கூட்டு அரசாங்க கமிஷன் ஏற்படுத்தப்பட்ட பின் இதன் வரம்புகளுக்குள் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு மற்றும் திட்டமிடல் சம்பந்தமான கூட்டுக் குழுக்கள் உருவாக்கப்பட்டன; அந்தந்த விஞ்ஞான ஸ்தாபனங்கள் தீட்டிய செயல்திட்டங் களின் அடிப்படையில் இவை இயங்குகின்றன. இச்செயல் திட்டங்களின் நிறைவேற்றம் மேற்கூறிய குழுக்களின் சந்திப்பு களில் முறையாக விவாதிக்கப்படுகின்றது, பின் கூட்டு அரசாங்க கமிஷனின் முன் வைக்கப்படுகின்றது.

இதுவரை கூட்டு அரசாங்க மட்டத்திலும் இலாக் காக்களின் மட்டங்களிலும் பல உடன்படிக்கைகள் கை யெழுத்திடப்பட்டுள்ளன. பல்வேறு துறைகளில் பல வடிவங் களில் விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பை — கூட்டான நில நடுக்க ஆராய்ச்சிகள் முதல் அணு சக்தியை சமாதான நோக்கங்களுக்காகப் பயன்படுத்துவது மற்றும் விண்வெளி ஆராய்ச்சிகளில் ஒத்துழைப்பது வரை — இவை திட்டமிடு கின்றன.

உதாரணமாக 1972 அக்டோபரில் கையெழுத்தான கூட்டு அரசாங்க உடன்படிக்கை இயந்திரங்கள், அளவுமானி

கள் வெப்ப மண்டல சூழ்நிலைகளில் நன்கு இயங்குமாறு செய்வது, தொழிற்துறை ஆராய்ச்சிகள், காந்த நீர் இயக்க வியல், நீர் துறை, மென்மயிர் மிருக வளர்ப்பு, சூரிய காந்தியை இந்தியாவில் பரப்புவது, புதிய ஆட்டு ரகங்களை உண்டாக்குவது போன்றவற்றில் ஒத்துழைக்க வகை செய்கிறது.

. விண்வெளி ஆராய்ச்சித் துறையில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் பயன்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவையாகும். இரு நாடுகளின் விஞ்ஞானிகள், பொறியியலர்களின் பங்கேற்போடு மூன்று இந்திய செயற்கைத் துணைக் கோள்கள் செலுத்தப்பட்டுள்ளன, இந்திய விண்வெளி வலவர் சோவியத் விண்வெளி வலவர்களோடு சேர்ந்து விண்வெளியில் பறந்தார்.

விஞ்ஞான, தொழில்நுட்பத் துறையில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பு நீண்ட கால கூட்டு அரசாங்க உடன் படிக்கைகளின் வரம்புகளுக்குள் நிறைவேற்றப்படுகிறது.

விஞ்ஞான அடிப்படையில் திட்டம் தீட்டும் முறை ஏற்படுத்தப்பட்டதானது இந்தியப் பொருளாதாரத்தின் வெற்றிகரமான வளர்ச்சிக்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சோவியத் அரசு திட்ட கமிட்டிக்கும் இந்தியத் திட்ட கமிஷனுக்கும் இடையிலான உடன்படிக் கையின் வரம்புகளுக்குள் நிறைவேற்றப்படும் இந்த ஒத் துழைப்பு இப்பிரச்சினையின் தத்துவ ரீதியான தீர்விலும் நடைமுறைத் தீர்விலும் கணிசமான பங்காற்றுகிறது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத் துழைப்பு பற்றிய நீண்ட கால செயல்திட்டத்தில் விஞ்ஞான-தொழில்நுட்ப உறவுகளின் வளர்ச்சிக்குப் பெரும் முக் கியத்துவம் தரப்பட்டுள்ளது.

## சோவியத் யூனியனின் பொருளாதார உதவி — இந்தியப் பொருளாதாரத்தில் அரசுத் துறை தோன்றி வளர்ந்ததில் ஒரு முக்கியக் காரணி

அரசியல் சுதந்திரம் பெற்ற வளர்முக நாடுகளின் முன் பொருளாதார வளர்ச்சிப் பாதையைத் தேர்ந்தெடுக்கும் சிக்கலான கடமைகள் நிற்கின்றன. ஏனெனில் வளர்ச்சி

யடைந்த, சொந்தமான பொருளாதாரக் கட்டமைப்பை ஏற்படுத்தும் பிரச்சினையை நன்கு தீர்த்தால்தான் உண் மையான சுதந்திரம் நிலைத்து நிற்கும். சுதந்திரமான பொருளாதார வளர்ச்சிப் பாதையைத் தேர்ந்தெடுத்த நாடுகளில் இந்தியா ஒரு நல்ல உதாரணமாகும். இந்தியா சுதந்திரம் அடைந்த உடனேயே பொருளாதாரத்தைப் பெரிதும் மாற்றியமைக்கவும் துரிதமான வேகங்களில் நாட்டைத் தொழிற்துறைமயப்படுத்தவும் துவங்கியது.

நவீன உற்பத்தி முறைகளையும் விஞ்ஞான-தொழில்நுட்ப சாதனைகளையும் புகுத்தி, புதிய தொழில்நுட்ப அடிப் படையில் பொருளாதாரத்தை மாற்றியமைப்பதுதான் தொழிற்துறைமயப்படுத்துவதன் முக்கிய நோக்கமாகும். பொருளாதார சுதந்திரத்தை அடைவதில் ஒரு முக்கிய சாதனமாகிய தொழிற்துறைமயப்படுத்தல் என்பது ஒரு சிக்கலான, நீண்ட கால நிகழ்ச்சிப் போக்காகும், இதற்கு உள் சக்திகள் அனைத்தையும் அதிகபட்சம் அணி திரட்ட வேண்டும்.

பரவலான தொழிற்துறை கட்டுமானம், அரசு அடிப் படையில் கனரகத் தொழிற்துறையின் புதிய பிரிவுகளை ஏற்படுத்துவது, உற்பத்தி சாதனங்களின் உற்பத்தி, விவ சாயப் பொருட்களின் உற்பத்தியை அதிகப்படுத்துவது ஆகியவை இந்தியாவில் மேற்கூறிய நிகழ்ச்சிப் போக்கிற்கான தெட்டத் தெளிவான வெளிப்பாடுகளாகும்.

நாட்டைத் தொழிற்துறைமயப்படுத்த பெரும் தொழில் நிறுவனங்களையும் மற்ற அமைப்புகளையும் கட்ட வேண் டும், இதற்கு நிதி வேண்டும். உள்நாட்டின் மூலசக்தி களைக் கொண்டு மட்டும் பல சமயங்களில் இதற்கு வகை செய்ய முடியாது. எனவே, வளர்ந்து வரும் ஒரு நாட்டில் சுதந்திரமான பொருளாதாரத்தை ஏற்படுத்துவதில் அக் கறையுள்ள ஒரு அயல்நாட்டு கூட்டாளியைத் தேர்ந் தெடுக்கும் பிரச்சினை தோன்றுகிறது.

முதலில் இந்தியாவிற்கும், பின் சுதந்திர வளர்ச்சிப் பாதைக்கு வந்த மற்ற பல இளம் அரசுகளுக்கும் சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் இப்படிப்பட்ட கூட்டாளிகளாகின. இந்தியப் பொருளாதாரத்தின் முக்கியத் துறைகளில் அரசு அடிப்படையில் பல பெரும் தொழில் நிறுவனங்களையும் மற்ற அமைப்புகளையும் கட்ட சோவியத்

யூனியன் 50ஆம் ஆண்டுகளின் நடுப்பகுதியிலிருந்து இந்தியாவிற்கு கணிசமான பொருளாதார, தொழில்நுட்ப உதவியை அளித்து வருகிறது.

எனவே பல இந்திய சமூகவியலர்கள், அரசியல் பிரமுகர்கள், பொருளாதார நிபுணர்களின் கருத்துப்படி இந்தியப் பொருளாதாரத்தில் அரசுத் துறை தோன்றி, வலுவடைந்ததானது சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பின் வளர்ச்சியோடு கணிசமான அளவு தொடர்புடையது.

## சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பு — புதிய சர்வதேசப் பொருளாதார முறையை நிலைநாட்டும் பிரச்சினையின் தீர்வில் உண்மையான பங்காகும்

உலகப் பொருளாதார உறவுகளின் வளர்ச்சியின் இன்றைய கட்டத்தில் புதிய சர்வதேசப் பொருளாதார முறையை நிலைநாட்டுவதற்கான போராட்டம் சர்வதேச வாழ்வின் மிக முக்கியக் காரணிகளில் ஒன்றாகும்.

புதிய சர்வதேசப் பொருளாதார முறையைப் பற்றிய பிரகடனம் 1974 மே மாதம் ஐ. நா. சங்கப் பொதுச் சபையில் நிறைவேற்றப்பட்டது. இன்று நிலவும் சர்வதேசப் பொருளாதார உறவுகள் சமத்துவமற்றவை, இவற்றில் வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகள் ஆதிக்கம் செலுத்துகின்றன, வளர்முக நாடுகள் இந்நாடுகளைச் சார்ந்துள்ளன. இதற்குப் பதிலாக, நாடுகளின் சமூக-பொருளாதார அமைப்புகளைப் பார்க்காமல் நியாயம், சுய உரிமை, சமத்துவம், எல்லா நாடுகளின் பொது நலன்கள் மற்றும் ஒத்துழைப்பின் அடிப்படையிலான புதிய முறை உருவாக வேண்டுமென இப்பிரகடனம் கோருகிறது.

உலக உள்ளாற்றலை பயன்மிகு சமூக, பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் பொருட்டு நியாயம் மற்றும் நாடுகளின் பரஸ்பர மதிப்பின் அடிப்படையிலான சர்வதேசப் பொருளாதார ஒத்துழைப்பை விரிவுபடுத்த இந்தப் புதிய பொருளாதார முறை வழிகோலுகிறது.

புதிய பொருளாதார முறையை ஏற்படுத்துவது தொடர்பான வளர்முக நாடுகளின் கோரிக்கைகளை சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும் ஆதரிக்கின்றன,

இப்பிரச்சினைகளின் நடைமுறைத் தீர்வில் தமது நட வடிக்கைகளின் மூலம் கணிசமான பங்காற்றுகின்றன.

சோஷலிச நாடுகளுக்கு இடையிலான பொருளாதார உறவுகளின் நடைமுறை சமத்துவம், பரஸ்பர அனுகூலமுள்ள ஒத்துழைப்பின் அடிப்படையில் பொருளாதார உறவுகளை மாற்றியமைக்கும் வாய்ப்பிற்கும் இதன் பயன்களுக்கும் சான்று பகர்கின்றது.

சோஷலிச நாடுகளின் பொருளாதார ஒத்துழைப்பு சர்வதேச பொருளாதார உறவு முறை முழுவதன் மீதும் கணிசமான தாக்கம் செலுத்துகிறது. பல விடுதலையடைந்த நாடுகள் இந்த வளமான அனுபவத்தை தம் வெளிநாட்டுக் கொள்கையை உருவாக்குவதில் பயன்படுத்துகின்றன.

மறு புறம், வளர்முக நாடுகளுடனான பரஸ்பர அனு கூலமுள்ள பொருளாதார ஒத்துழைப்பை விரிவுபடுத்துவது சம்பந்தமாக சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடு களும் கடைபிடிக்கும் கொள்கை, புதிய சர்வதேசப் பொரு ளாதார முறையின் கோட்பாடுகளை நிறைவேற்றுவதில் இவற்றின் நிலைகள் நெருங்கி வர உதவுகின்றது. வளர் முக நாடுகளுக்கு சோவியத் யூனியன் பொருளாதார, தொழில்நுட்ப உதவியை வழங்கும் போது இந்நாடுகளின் பொருளாதார அடித்தளத்தின் சிறப்பியல்பையும் தேவை களையும் கணக்கில் கொள்கிறது. இதில் பொருளாதாரத்தின் உற்பத்தித் துறையை வளர்ப்பதன் மீதும் தேசிய ஊழியர் களைப் பயிற்றுவிப்பதன் மீதும் பெருங் கவனம் செலுத்தப் படுகிறது.

புதிய சர்வதேசப் பொருளாதார முறை செயல் திட்டத்தில் அடங்கியுள்ள முற்போக்கான, ஏகாதிபத்திய எதிர்ப்பு நிலைகளை ஆதரிக்கும் சோஷலிச நாடுகள், வளர்முக நாடுகளுடன் உள்ள இரு தரப்பு உறவுகளின் வரம்புகளுக்குள் இவற்றை நடைமுறையில் நிறைவேற்றப் பாடுபடுகின்றன. குறிப்பாக இது சோவியத் யூனியனுக்கும், வளர்முக உலகின் மிக பெரும் நாடுகளில் ஒன்றாகிய இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார-தொழில்நுட்ப ஒத்துழைப்பின் உதாரணத்தில் நன்கு வெளிப்படுகிறது.

இந்தியாவுடன் பொருளாதார ஒத்துழைப்பு நிலவும் காலகட்டம் பூராவும் — இது இன்று அளவில் பெரிதும் வளர்ந்து மிகப் பல்வேறான துறைகளைத் தழுவி நிற்

கிறது — சோவியத் யூனியன் இந்தியாவில் உள்ள இயற்கைச் செல்வங்களின் மீது இந்திய அரசின் உள்ள முழு உரிமை பலப்படவும், பொருளாதார சுதந்திரம் வலுவடையவும் நடைமுறையிலும் தீவிரமாக உதவியுள்ளது. இந்தியப் பொருளாதாரத்தில் சோவியத் யூனியன் நேரடியாக முதலீடு செய்வதில்லை. சோவியத் உதவியோடு கட்டப்பட்ட எல்லா அமைப்புகளும் முழுக்க முழுக்க இந்தியாவிற்குச் சொந்தமானவை; இவற்றைக் கட்டும் திட்டங்களைத் தீட்டுவதிலும், கட்டுமானத்திலும் இயக்குவிப்பதிலும் அவசியமான தொழில்நுட்ப உதவியை மட்டுமே சோவியத் யூனியன் அளிக்கிறது; இதிலும் உபகரணங்கள், மற்ற பொருட்களை சப்ளை செய்வதிலும் தொழில்நுட்ப விவரங்களைத் தயாரிப்பதிலும் இந்தியாவின் வாய்ப்புகள் முழுமையாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒத்துழைப்பின் போது, தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பதில் சோவியத் யூனியன் பங்கேற்கிறது; இதனால் இப்போது இயங்கும் இத்தகைய அமைப்புகளில் பெரும்பாலானவற்றை இந்திய ஊழியர்கள் தாமே, சோவியத் நிபுணர்களின்றி நிர்வகிக்கின்றனர்.

பரஸ்பர அனுகூல அடிப்படையில் இந்தியாவுடன் பொருளாதார ரீதியாகப் பெரிதும் ஒத்துழைக்கும் சோவியத் யூனியன் சலுகையான நிபந்தனைகளில் இதற்கு அளிக்கும் கடன்களுக்குப் பதிலாக இந்தியாவிடமிருந்து இதன் வழக்கமான விவசாயப் பொருட்களையும் மூலப் பொருட்களையும் கணிசமான அளவில் வாங்குகிறது. இரு நாடுகளுக்கும் இடையிலான பொருளாதார ஒத்துழைப்பு நீண்ட கால கூட்டு அரசாங்க உடன்படிக்கைகளின் அடிப்படையில் நிறைவேற்றப்படுகிறது. இரு நாடுகளுக்கும் இடையிலான வர்த்தகப் பரிமாற்றம் ஐந்தாண்டு வர்த்தக உடன்படிக்கைகளால் ஒழுங்குபடுத்தப்படுகிறது. எனவே சோவியத் யூனியன் வழக்கமான இந்தியப் பொருட்களுக்கு ஒரு நம்பகரமான, நிலையான வர்த்தக கூட்டாளியாக உள்ளது, இந்தியா தன் ஏற்றுமதியை நீண்ட காலத்திற்குத் திட்டமிட முடியும். தேயிலை, காப்பிக் கொட்டை, முந்திரி, சணல் போன்ற இந்தியச் சரக்குகளை வாங்கும் முக்கிய நாடுகளில் ஒன்றாக சோவியத் யூனியன் திகழுகிறது.

வெளி உதவியின் மூலமும், தயாரான பொருட்களை

வளர்ச்சியடைந்த நாடுகளின் சந்தைகளுக்கு கொண்டு வருவதை அதிகப்படுத்துவதன் மூலமும் வளர்முக நாடு களைத் தொழிற்துறைமயப்படுத்துவதை ஊக்குவிப்பது என்பது புதிய சர்வதேசப் பொருளாதார முறையின் அடிப்படை அம்சங்களில் ஒன்றாகும். ''பொதுவான மேலுரிமை முறையை'' விரிவுபடுத்தும் பிரச்சினையும் இந்த இறக்குமதிக்கான தடைகளை அகற்றும் பிரச்சினையும் முன்வைக்கப்படுகின்றன. மேற்கூறிய பிரச்சினைகளின் தீர்வில் சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பு மிகச் சிறந்த உதாரணமாகத் திகழுகிறது என்று உறுதியாக கூறலாம்.

## சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பின் எதிர்காலத் திசையமைவுகளும் வடிவங்களும்

30 ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடரும் சோவியத்-இந்தியப் பொருளாதார, தொழில்நுட்ப ஒத்துழைப்பின் வரலாற்றில் அற்புதமான சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் நடைபெற்றுள்ளன.

1985 மே மாதம் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி சோவியத் யூனியனுக்கு வருகை தந்தது இப்படிப்பட்ட சம்பவங்களில் ஒன்றாகும். 2,000ஆம் ஆண்டு வரையிலான சோவியத்-இந்திய பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பின் முக்கியத் திசையமைவுகளைப் பற்றிய உடன்படிக்கையும் திட்டவட்டமான அமைப்புகளில் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான பொருளாதார மற்றும் தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய உடன்படிக்கையும் இப்பயணத்தின் போது கையெழுத் தாயின.

முதல் உடன்படிக்கை அடிப்படைத் தன்மையை உடை யது, நீண்ட கால, பரஸ்பர அனுகூல அடிப்படையில் ஒத்துழைப்பின் வடிவங்களையும் முக்கியத் திசையமைவு களையும் இது நிர்ணயிக்கிறது. பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளில் புதிய அமைப்புகளைக் கட்டுவதோடு கூட, நவீன தொழில்நுட்பத்தைப் புகுத்துதல், உற்பத்தி

மட்டத்தையும் உழைப்பின் உற்பத்தித் திறனையும் உயர்த்து தல், பரஸ்பரம் ஒப்புக்கொள்ளும் துறைகளில் தொழில் நிறுவனங்களை நவீனமயப்படுத்துதல், புதுப்பித்தல், தேசிய ஊழியர்களைப் பயிற்றுவித்தல், புதிய உபகரணங்களையும் மற்ற பொருட்களையும் உருவாக்குதல், புது தொழில்நுட்ப முறைகளைக் கண்டுபிடித்தல், தொழிற்துறை ஆராய்ச்சிகளை மேற்கொள்ளுதல் ஆகியவற்றின் மூலம் ஒத்துழைப்பை மேற்கொண்டு வளர்த்து வலுப்படுத்துவதன் மீதும் இதில் முக்கியக் கவனம் செலுத்தப்படுகிறது.

எரிபொருள்-எரிசக்தித் துறைகள் உட்பட இந்தியப் பொருளாதாரத்தின் முக்கியப் பிரச்சினைகளை நிறை வேற்றுவதே இந்த உடன்படிக்கையின் நோக்கமாகும்.

உதாரணமாக, சோவியத் யூனியனின் உதவியால் கட்டப் பட்ட அல்லது சோவியத் வரைபடங்களுக்கு ஏற்ப இந்தியத் தொழில் நிறுவனங்களால் (குறிப்பாக ஹரித்வாரில் உள்ள கனரக மின் உபகரணத் தொழிற்சாலையில்) தயாரிக்கப் படும் உபகரணங்களைப் பயன்படுத்தும் இந்திய அனல் மின்நிலையங்களின் செயல்வன்மையை உயர்த்துவது, உதிரிப் பகுதிகளின் உற்பத்தியை இந்தியாவில் ஆரம்பிப்பதன் மூலமும் சோவியத் யூனியனிலிருந்து வரும் இவற்றின் சப்ளையை அதிகப்படுத்துவதன் மூலமும் மின்நிலையங் களுக்கு உதிரிப் பகுதிகளின் சப்ளையை மேம்படுத்துவது, எரிசக்தித் துறையின் உபகரணங்களைப் பழுதுபார்த்து பராமரிக்கும் விசேஷ சேவை மையங்களையும் ஸ்தாபனங் களையும் ஏற்படுத்துவது, மின்நிலையப் பராமரிப்பு மற்றும் பழுது பார்க்கும் பணிகளுக்காக அதிகப் பரவலான அளவில் இந்தியப் பணியாளர்களைப் பயிற்றுவித்தல், புதிய எரிசக்தித் துறை அமைப்புகளைக் கட்டுவதில் ஒத்துழைப்பு ஆகியவற்றை இந்த உடன்படிக்கை திட்டமிடுகிறது.

உடன்படிக்கைக்கு ஏற்ப, சோவியத் மற்றும் இந்திய ஸ்தாபனங்கள் புதிய சுரங்கங்கள், ஆழ் கிணறுகள், நிலக்கரிச் சுத்திகரிப்பு ஆலைகள் ஆகியவற்றைக் கட்டுவதோடு கூட இப்போதுள்ள நிலக்கரி எடுக்கும் அமைப்புகளை விரிவு படுத்துவது மற்றும் நவீனமயப்படுத்துவது, நிலக்கரியை எடுக் கும் பணியில் புதிய தொழில்நுட்பத்தையும் உபகரணங் களையும் பயன்படுத்துவது, நிலக்கரி எடுத்தல் மற்றும் இதைச் சுத்திகரிக்கும் துறையில் பொறியியல் திட்ட, விஞ்ஞான-

ஆராய்ச்சி அடித்தளத்தை வளர்த்தல், நிலக்கரியைத் தேடுவதில் நவீன புவியியல் முறைகளையும், பூமியடியில் நிலக்கரியை வாயுவாக்கும் முறையையும் பயன்படுத்துவது, நிலக்கரியை இரசாயன ரீதியாகப் பயன்படுத்துவது ஆகிய துறைகளிலும் ஒத்துழைக்கும்.

எண்ணெய் மற்றும் எரிவாயுவைத் தேடும் பணியில் ஒத்துழைப்பு விரிவடைந்து வருகிறது. தேக்கமடைந்துள்ள மற்றும் குறைவான உற்பத்தித் திறனை உடைய எண்ணெய் மற்றும் எரிவ்ாயுக் கிணறுகளில் இவற்றின் உற்பத்தித் திறனை கூட்டும் பணிகள் அதிகமாகும். இதனால் குறைந்த செலவுகளில் எண்ணெய் மற்றும் எரிவாயு எடுப்பதைக் கூட்ட முடியும். எண்ணெய் புவியியல், புவி-பௌதீகம், எண்ணெய் கிணறுகளைத் தோண்டுவது, எண்ணெய் எடுப்பது ஆகிய துறை களைத் தோண்டுவது, எண்ணெய் எடுப்பது ஆகிய துறை களில் சோவியத் மற்றும் இந்திய விஞ்ஞான, பொறியியல் திட்ட ஸ்தாபனங்களுக்கு இடையிலான ஒத்துழைப்பு அதிக பரவலான அளவுகளில் வளரும்.

இரும்பு உலோகத் துறையில் நவீன உபகரணங்கள் மற்றும் சமீப விஞ்ஞான, தொழில்நுட்ப சாதனைகளைப் பயன்படுத்தி புதிய தொழில்நுட்ப முறைகளைப் புகுத்தவும், இந்திய உலோகத் தொழிற்சாலைகளை நவீனமயப்படுத்த வும், புனரமைக்கவும், பிலாய், பொக்காரோ தொழிற் சாலைகளை விரிவுபடுத்தி, இவற்றின் செயல்வன்மையை அதிகப்படுத்தவும், விசாகபட்டினத்தில் உலோகத் தொழிற் சாலையின் கட்டுமானத்தைத் தொடரவும் உடன்படிக்கை வழிகோலுகிறது.

இயந்திரக் கட்டுமானத் துறை சம்பந்தமான உடன் படிக்கையிலும் இயங்கும் அமைப்புகளின் செயல்வன்மையையும் லாபத்தையும் அதிகரிக்கும் போக்கு காணப்படுகிறது. இத்துறையிலும் சோவியத் உதவியோடு கட்டப்பட்ட தொழில் நிறுவனங்களின் உற்பத்தியைப் பெருக்கவும், இவற்றை நவீனமயப்படுத்தவும், புதிய வகையான பொருட் களின் உற்பத்தியைத் துவக்கவும், உழைப்பின் உற்பத்தித் திறனையும் பொருட்களின் தரத்தையும் உயர்த்தவும் திட்ட மிடப்படுகிறது.

மேற்கூறிய வழக்கமான துறைகளைத் தவிர ஒத்துழைப் பின் புதிய வடிவங்களையும் போக்குகளையும் வளர்ப்பதன்

மீதும் உடன்படிக்கை கவனம் செலுத்துகிறது. பரஸ்பர அனுகூல அடிப்படையில், இரு நாடுகளின் வாய்ப்புகள் மற்றும் விஞ்ஞான, தொழில்நுட்ப சாதனைகளைக் கவனத் தில் கொண்டு இயந்திரங்கள், உபகரணங்களின் உற்பத்தியில் ஒத்துழைப்பை வளர்ப்பது பற்றிய முடிவு இவற்றில் ஒன்றா கும். ஆந்திர மாநிலத்தில் பாக்சைட்-அலுமினிய இணை யத்தைக் கட்டுவது பற்றி உடன்படிக்கை அடையப்பட்டுள் ளது, இதன் உற்பத்திப் பொருட்கள் சோவியத் யூனியனுக்கு நீண்ட கால அடிப்படையில் வழங்கப்படும். இது தவிர பரஸ்பர ஒப்புதலுக்கேற்ப சோவியத் யூனியனில் சிவில் மற்றும் தொழிற்துறை அமைப்புகளின் கட்டுமானத்திலும் இரு நாடுகளும் கூடுதலாக உடன்பாட்டிற்கு வரும் மற்ற சில துறைகளிலும் இந்திய ஸ்தாபனங்கள் பங்கேற்க உடன்படிக்கை வழிகோலுகிறது. இது ஒரு புதிய அம்சமாகும்.

விரைவிலேயே பொருளாதாரத்தின் தனிப்பட்ட துறை களில் நீண்ட கால ஒத்துழைப்புச் செயல்திட்டங்கள் தயாரிக் கப்படும். இவற்றின் அடிப்படையில் பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத்துழைப்பு சம்பந்தமான ஒரே நீண்ட கால செயல்திட்டம் தீட்டப்படும்.

2,000ஆம் ஆண்டு வரையிலான சோவியத்-இந்தியப் பொருளாதார, வர்த்தக, விஞ்ஞான-தொழில்நுட்ப ஒத் துழைப்பின் முக்கிய திசையமைவுகளைப் பற்றிய புதிய உடன்படிக்கையின் சிறப்பு அம்சங்களும் சாரமும் இவை தான்.

இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியின் சோவியத் பயணத் தின் போது கையெழுத்தான இரண்டாவது உடன்படிக்கை, இந்தியப் பொருளாதாரத்திற்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்த பல புதிய அமைப்புகளைக் கட்டுவதில் இரு நாடுகளுக்கும் இடையிலான ஒத்துழைப்பிற்கு வழிகோலு கிறது. பீஹார் மாநிலத்தில் கட்டப்பட இருக்கும் - 840 மெகாவாட் திறனுள்ள கெஹல்கவுன் எனும் பெரும் அனல் மின்நிலையம் இவற்றில் ஒன்றாகும்.

எண்ணெய் தொழிற்துறையில், இந்தியாவில் ஹைட் ரோகார்பன்களின் கண்டுபிடிப்பைத் துரிதப்படுத்தும் பொருட்டு புவியியல் ஆராய்ச்சி மற்றும் ஆழ் குழி தோண்டும் பணி களைப் புது விதமாக அணுக உடன்படிக்கை வழிகோலு கிறது. இதற்காக வடக்கு காம்பேய் (குஜராத்) மற்றும்

காவேரிப் படுகைகளில் சகலவிதமான வேலைகளையும் மேற்கொள்ள சோவியத் யூனியன் உதவும். அதாவது இந்த இடங்களில் சோவியத் ஸ்தாபனங்கள் அவசியமான எல்லா புவியியல் மற்றும் புவி-பௌதீக ஆராய்ச்சிகளை நடத்தும், கிடைக்கும் விவரங்களைப் பரிசீலிக்கும், எண்ணெய் கண்டு பிடிப்பதற்காக துளைகளை இடும், எண்ணெய் கண்டு பிடிக்கப்பட்டால் இந்த இடங்களில் தேவையான பொறியி யல் திட்டப் பணிகளை மேற்கொள்ளும். இது எண்ணெய் தொழிற்துறையில் கோட்பாட்டு ரீதியாகப் புதிய ஒத்துழைப்பு வடிவத்தைக் குறிக்கிறது.

இந்திய நிலக்கரித் தொழிற்துறை வளர்ச்சித் திட்டங் களுக்கேற்ப பின்வருபவற்றை உடன்படிக்கை திட்டமிடு கிறது: ஜரியா நிலக்கரிச் சரங்கத்தில் 5ஆவது பிளாக் கில் ஆண்டிற்கு 100 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல சுரங்கத்தையும், சுத்திகரிப்பாலைகளையும் கட்டுவதில் பெருமளவில் உதவுதல்; எரிசக்தித் துறைக்கான நிலக்கரி கிடைக்கும் சிங்கரோலியில் ஆண்டிற்கு தலா 100 லட்சம் டன் நிலக்கரியை எடுக்க வல்ல இரு சுரங்கங்களை மோஹர் மற்றும் காதியாவில் கட்ட உதவுதல்; ஜரியாவில் ஆண் டிற்கு 25 லட்சம் டன் அடுப்புக் கரியை எடுக்க வல்ல சீதானாளா சுரங்கத்தையும் சுத்திகரிப்பாலைகளையும் கட்ட உதவுவது; இப்போது பத்ரீஹ் எனுமிடத்திலுள்ள நிலக்கரிச் சுத்திகரிப்பாலையைப் புனரமைப்பதில் உதவுவது. இந்தியப் பொறியியல் திட்ட கட்டமைப்புத் தளத்தை யும் அனுபவத்தையும் வளர்க்கும் பொருட்டு ராஞ்சியில் நிலக்கரித் தொழில் நிறுவனங்களைத் திட்டமிடுவது மற்றும் வடிவமைப்பது பற்றிய மத்திய கேந்திரத்தில் நிலக்கரி சுரங்கங்களை வடிவமைப்பது சம்பந்தமான பிரிவை ஏற் படுத்துவதிலும் நிலக்கரிச் சுத்திகரிப்பாலைகளை வடிவமைப் பது பற்றிய கேந்திரத்தை இந்தியாவில் ஏற்படுத்துவதிலும் சோவியத் யூனியன் உதவியளிக்க உடன்படிக்கை வழிகோலு கிறது.

உடன்படிக்கைக்கேற்ப இரும்பு உலோகத் துறை மற்றும் இயந்திரக் கட்டுமானத்தில் புதிய தொழில் நுட்பத்தைப் புகுத்துதல், நவீனமயப்படுத்துதல், புனரமைத்தல் ஆகிய பணிகள் மேற்கொள்ளப்படும்.

இவைதான் பொருளாதார, தொழில்நுட்ப ஒத்துழைப்பு

உடன்படிக்கையின் கீழ் வரும் அம்சங்களாகும். இது இறுதிப் பட்டியல் அல்ல, இந்தியாவின் விருப்பங்கள், தேவைகளுக் கேற்ப இதில் மாற்றங்கள் செய்யப்படலாம்.

இந்த அமைப்புகளுக்காக இந்தியாவிற்கு சோவியத் அரசுக் கடன் கிடைக்க உடன்படிக்கை வழிகோலுகிறது. இக்கடனைத் திருப்பித் தர இந்தியாவிற்கு அன்னியச் செலாவணி தேவையில்லை என்பதை இன்னுமொரு முறை கூற வேண்டும்; இப்போதுள்ள சோவியத்-இந்திய வர்த்தக உடன்படிக்கையின் அடிப்படையில் இந்தியப் பொருட்களை சோவியத் யூனியனுக்கு வழங்குவதன் மூலம் இக்கடன் தீர்க்கப்படும். இவையெல்லாம் நம்மிரு நாடுகளுக்கிடையிலான வர்த்தக வளர்ச்சிக்கு உதவும்.

இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியை கௌரவிக்கும் முகமாக நடந்த விருந்துபசாரத்தில் உரையாற்றுங்காலை சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டி யின் பொதுச் செயலாளர் மி. செ. கர்பச்சோவ், "ஆண்டு கள் உருண்டோடுகின்றன, நம் நாடுகளில் தலைமுறை கள் மாறுகின்றன, ஆனால் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நல்லுறவுகளும் ஒத்துழைப் பும் முன்னோக்கிய திசையில் வளருகின்றன. ஏனெனில் இவை சமத்துவம் மற்றும் பரஸ்பர மதிப்பின் அடிப்படை யிலானவை, இன்றைய உலகின் முக்கிய பிரச்சினைகளில் நம் நிலைகள் ஒரே மாதிரியானவை அல்லது நெருக்கமானவை" என்று கூறினார்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 27வது காங்கிரசில் சோவியத் பிரதமர் நிக்கலாய் ரிஷ்கோவ் பின்வருமாறு கூறினார்:

"ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகளுடனான ஒத்துழைப்பை சோவியத் யூனியன் தொடர்ந்து வளர்க்கும். இந்நாடுகளுக்கு நாம் வழங்கும் பன்முக உதவி இவற்றின் தேசியப் பொருளாதாரத்தை வளர்க்கவும், காலனியாதிக்க மிச்ச சொச்சங்களைத் தூக்கியெறியவும், அவை பொருளாதார, சமூக வளர்ச்சிப் பாதையில் முன்னோக்கி நடைபோடவும் உதவுகிறது. இவற்றில் பலவற்றுடன், உதாரணமாக இந்தியாவுடன் சோவியத் யூனியனுக்கு உறுதியான, நீண்ட காலத் தொடர்புகள் ஏற்பட்டுள்ளன. இவை மேன்மேலும் பரஸ்பர ஆதாயமுடையவையாக மாறி வருகின்றன.

சர்வதேசப் பொருளாதார உறவுகளை நீதியான, ஜனநாயக அடிப்படையில் மாற்றியமைப்பதில் முக்கியக் காரணியாக மாறியுள்ள வளர்முக நாடுகளை ஆதரிக்கும் கொள்கையை நாங்கள் தொடர்ந்து கடைபிடிப்போம்...''

## விண்வெளி ஆராய்ச்சியில் ஒத்துழைப்பு

உலகின் முதல் விண்வெளி வீரராகிய யூரி ககாரின் 1961 நவம்பரில் இந்தியாவிற்கு வந்த போது டில்லியில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பின்வருமாறு கூறினார்: ''புதிய இந்தியாவை கட்டப் போகும் குழந்தைகளுக்கு என் விசேஷ வாழ்த்துகள்... அவர்கள் கல்வியில் வெற்றிகள் பெற, அவர்களது உடல் நலம் சிறக்க, அவர்கள் வாழ்வில் மகிழ்ச்சி பொங்க வாழ்த்துகிறேன். விண்வெளிப் பயணத் தைப் பற்றிக் கனவு காணும் பலர் அனேகமாக இவர் கள் மத்தியில் இருக்கக் கூடும். விண்வெளி வலவர் குடும் பத்தில் இந்தியக் குடிமகனும் சேரும் நாள் வருமென நான் உறுதியாக நம்புகிறேன்''.

அந்நாளும் வந்தது. 1984 ஏப்ரல் 3ஆம் தேதி ''சயூஸ்'' என்ற சோவியத் விண் கப்பல், இரண்டு சோவியத் விண் வெளி வலவர்களையும் இந்திய விண்வெளி வலவர் ராகேஷ் சர்மாவையும் ஏற்றிக்கொண்டு விண்வெளிக்குப் புறப்பட்டு சென்றது. ''சல்யூட்'' கோள நிலையத்துடன் இணைந்த இவர்கள் ஒரு வாரம் பறந்தனர், திட்டமிட்ட பணிகள் அனைத்தையும் முடித்து விட்டு நலமாக பூமிக்குத் திரும்பினர்.

ஆக, டில்லி பொதுக் கூட்டத்தில் யூரி ககாரின் சொன் னது தீர்க்க தரிசனம் மிக்கதாயிருந்தது. அடையாளச் சிறப்போடு சொன்னால், பன்முக சோவியத்-இந்திய ஒத்துழைப்புதான் இந்தியக் குடிமகனை விண்வெளிக்கு அனுப்பிய ஏவுதளமாக இருந்தது எனலாம்.

1982 செப்டெம்பரில் ராகேஷ் சர்மாவும் ரவீஷ் மல் ஹோத்ராவும் மாஸ்கோ அருகேயுள்ள நட்சத்திர நகரத்தை அடைந்தனர்; கடினமான, சுவாரசியமான பயிற்சிகள் ஆரம்பமாயின.

என்றாலும் நட்சத்திர நகரில் இதற்கு முன் இதே

மாதிரியான பயிற்சியைப் பெற்ற மற்ற சில நாட்டவரை விட இந்தியர்களுக்கு இது ஓரளவு எளிதானதாகவே இருந்தது. ராகேஷ் சர்மாவும் ரவீஷ் மல்ஹோத்ராவும் விமானப்படை விமானிகளாக இருந்து கடினமான பயிற்சிகளுக்கும் பெரும் உயரங்களுக்கும் பழக்கப்பட்டிருந்ததும், மற்ற நாடுகளைச் சேர்ந்த விண்வெளி வலவர்களைப் பயிற்றுவிக்கும் மையத்தில் சோவியத் ஆசிரியர்களுக்கு ஏற்கனவே நல்ல அனுபவம் கிட்டியிருந்ததும் மட்டும் இதற்குக் காரணமல்ல. பயிற்சி பெற வந்த இந்திய விமானிகள் பூஜ்ஜியத்திலிருந்து துவங்கவில்லை, விண்வெளி ஆராய்ச்சியில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பில் ஏற்கனவே நல்ல, உறுதியான பாரம்பரியங்கள் நிலவியதுதான் இதற்குக் காரணமாகும்.

இது 1963இல் தும்பா சர்வதேச பயிற்சி தளத்தில் ஆரம்பமாகியது. ராக்கெட் ஆராய்ச்சிகளின் மூலம் பூமியின் வளிமண்டலத்தின் மேல் அடுக்குகளைப் பற்றிய கூட்டு ஆராய்ச்சி துவங்கியது. இந்தியா, மற்ற நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞானிகளோடு கூட இதில் சோவியத் நாட்டவரும் பங்கேற்றனர். M-100B என்ற சோவியத் வானிலை ஆராய்ச்சி ராக்கெட்டுகள் உட்பட பல்வேறு வகையான வானிலை ஆராய்ச்சி ராக்கெட்டுகள் இங்கிருந்து ஏவப்பட்டன. இவற்றின் உதவியால் வளிமண்டலத்தின் மேல் அடுக்கில் வெப்ப மற்றும் காற்றுப் போக்குகள் ஆராயப்படுகின்றன. சோவியத் ராக்கெட்டுகள் இந்துப் பெருங்கடல் பகுதிக்கு மேலுள்ள வளிமண்டலத்தைப் பற்றியும் இப்பகுதியில் பருவக்காற்று பற்றியும் சுவாரசியமான, பயன்மிகு விவரங்களை அளித்தன. கூட்டு ஆராய்ச்சியின் முடிவுகளை சோவியத் மற்றும் இந்திய நிபுணர்கள் விஞ்ஞானப் பணிகளிலும் நடைமுறையிலும், உதாரணமாக பருவ நிலையைத் துல்லியமாகக் கணிப்பதில் பயன்படுத்துகின்றனர்.

மற்ற சர்வதேச திட்டங்களிலும் நம்மிரு நாட்டு விஞ்ஞானிகளும் கூட்டாகப் பங்கேற்றனர். ''இஸ்மெக்ஸ்-73'' என்ற இந்திய-சோவியத் பரிசோதனை பருவக்காற்றின் ஆராய்ச்சியில் நல்ல பலன்களையளித்தது. 1979இல் தெற்காசியப் பருவக்காற்றுகளைப் பற்றிய ''மோனெக்ஸ்-79'' என்ற சர்வதேச ஆராய்ச்சியின் போது பல முக்கிய விவரங்

கள் கிடைத்தன. இதிலும் இரு நாட்டு விஞ்ஞானிகளும் கலந்து கொண்டனர்.

1979ஆம் ஆண்டு சோவியத் முன்மொழிவின் பேரால், ''இன்மர்சாத்'' என்ற கடல் ஸ்புட்னிக் தொடர்பு என்ற சர்வதேச ஸ்தாபனத்தை ஏற்படுத்தும் உடன்பாடு அமலுக்கு வந்தது. இதில் மற்ற அரசுகளுடன் சேர்ந்து சோவியத் யூனியனும் இந்தியாவும் கலந்து கொண்டன. 1977 முதல் 1981 வரை சோவியத் காமா டெலிஸ்கோப்புகளின் உதவி யால் காமா வானவியல் துறையில் கூட்டு ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. இந்த டெலிஸ்கோப்புகள் உயரமான இடத்தில், இந்திய பலூன்களில் வைக்கப்பட்டன, இந்தியா வில் புவிக்காந்த நடுக் கோட்டுப் பகுதியில் பறக்க விடப் பட்டன. இந்த ஆராய்ச்சியின் போது சுவாரசியமான விஞ்ஞான விவரங்கள் கிடைத்தன.

1975இலிருந்து இந்தியப் பரப்பிலுள்ள (கவலூலு) நிலையத்தில் இருக்கும் தரை ஒளியியல் சாதனங்களின் உதவியால் பூமியின் செயற்கைத் துணைக்கோள்களைக் கண்காணிக்கும் கூட்டு செயல்திட்டங்கள் முறைப்படி நிறை வேற்றப்படுகின்றன. சோவியத் யூனியன் இதற்காகத் தானியங்கி புகைப்பட கருவியையும் லாசர் தொலைநோக் கியையும் வழங்கியது, கட்டிடங்களையும் துணைக் கருவிகளை யும் இந்தியா அளித்தது.

''லூனா-16'' மற்றும் ''லூனா-20'' தானியங்கி நிலையங் கள் சந்திரனிலிருந்து கொண்டு வந்த பாறைகளில் ஒரு பகுதியை 1972இல் சோவியத் யூனியன் இந்தியாவிற்கு வழங்கியதையும் இங்கு நினைவு கூறலாம்.

விண்வெளி ஆராய்ச்சியில் நமது தொடர்புகளின் துவக்கம் இப்படிப்பட்டதாயிருந்தது. இந்திய செயற்கைத் துணைக் கோள்கள் சோவியத் ராக்கெட்டுகளின் உதவியால் சோவி யத் விண்வெளித் தளத்திலிருந்து ஏவப்பட்டதையடுத்து இத்தொடர்புகள் மேலும் வலுவடைந்தன.

இந்திய விண்வெளியியலின் தந்தை விக்ரம் சாராபாய் பின்வருமாறு கூறினார்: ''சந்திரனையோ மற்ற கிரகங் களையோ ஆராய்வதிலும், விண்வெளி வலவர்களுடன் கூடிய விண்கப்பல்களை ஏவுவதிலும் பொருளாதார ரீதியாக வளர்ச்சியடைந்த நாடுகளுடன் போட்டியிடும் கற்பனை லட்சியங்களை நாம் முன்வைக்கவில்லை. ஆனால் நாம்

ஒரு முக்கியமான நாடாகத் திகழ வேண்டுமெனில், நம் நாட்டில் நிலவும் மானுட மற்றும் சமுதாய பிரச்சினைகளின் தீர்விற்கு நவீன தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துவதில் யாருக்கும் பின்தங்கி விடக் கூடாது என்று நாம் உறுதியாக நம்புகின்றோம்''.

விக்ரம் சாராபாயின் துணிவு மிக்க தொலைநோக்குப் பார்வை, சுறுசுறுப்பு, உற்சாகம் ஆகியவற்றின் பயனாய் இந்தியாவில் விண்வெளி ஆராய்ச்சி வளரத் துவங்கியது. இதற்கான மூல ஊற்று உலகிற்கு பல நாகரிக அதிசயங்களை வழங்கிய, மானுட ஞானம் எனும் பொக்கிஷத்திற்குப் பெரும் பங்காற்றிய, காவிய நாயகர்களை வானுயரத்திற்கு உயர்த்திய மக்களின் ஆக்கபூர்வமான மேதமையில் அடங்கியிருந்தது. ஆனால் - இந்தியாவால் தன் செயற்கைக் கோளை உருவாக்க முடியும் என்று நிரூபிக்க விக்ரம் சாராபாய்க்கு வீரமும் தேவைப்பட்டது.

''அமெரிக்காவின் உதவியை எதிர்பார்க்கின்றீர்களா?'' எனறு இவ்விஞ்ஞானியிடம் கேட்டனர்.

''நாங்கள் சோவியத் யூனியனை நாடுவோம்'' என்று இவர் பதிலளித்தார். ''ஏனெனில் சாதாரண செயற்கைக் கோள் மட்டும் எங்களுக்குத் தேவையில்லை, விண்வெளி அனுபவம், சொந்த செயற்கைக் கோள்களை உருவாக்கத் துணை புரியும் அனுபவம் எங்களுக்குத் தேவை. இப்பணியின் போது விண்வெளி ஆராய்ச்சித் துறையில் தன் நிபுணர்களை இந்தியா உருவாக்கும். ருஷ்யர்களால் மட்டுமே இப்படிப்பட்ட உதவியை அளிக்க முடியும்...''

இவர் சொன்னது சரியாயிருந்தது. அமெரிக்கர்கள், தயாராயிருந்த தம் கலங்களைப் பயன்படுத்துமாறு முன்மொழிந்தனர். இதில் நிறைய வர்த்தகமும் குறைவான விஞ்ஞானமும் இருந்தன. இந்த அணுகுமுறையில் விண்வெளி ஆராய்ச்சியில் இந்தியா நிரந்தரமாகப் பின்தங்கியிருந்திருக்கும், அது மட்டுமல்ல, தன் சுயநிலையையும் இழந்திருக்கும்.

இன்று தன் சொந்த விண்வெளித் தளத்திலிருந்து, சொந்த ராக்கெட்டுகள் மூலம் சொந்த செயற்கைக் கோள்களை இந்தியா செலுத்தும் போது, சாராபாயும் இந்திய விண்வெளி செயல்திட்டத்தை இவரோடு சேர்ந்து செயல்படுத்தத் துவங்கிய மற்றவர்களும் கூறியவை எவ்வளவு சரியானவை என்று மேன்மேலும் தெளிவாகி வருகிறது.

இந்தியாவின் முதல் செயற்கைக் கோளாகிய ''ஆரியபட்டா'' 1975 ஏப்ரல் 19ஆம் தேதி (இதை செலுத்துவது பற்றி சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே உடன் படிக்கை செய்து கொள்ளப்பட்டு மூன்று ஆண்டுகள் கழிந்த பின்) சோவியத் விண்தளத்திலிருந்து சோவியத் ராக்கெட்டின் மூலம் செலுத்தப்பட்டது. இன்று செயற்கைக் கோள்கள் அன்றாடம் செலுத்தப்படும் போது, உடன்படிக்கைக்கும் இதன் நிறைவேற்றத்திற்கும் இடையே மூன்றாண்டுகள் நிலவியது பெரும் இடைவெளியாகத் தோன்றக் கூடும். ஆனால் இந்திய விஞ்ஞானிகள், கட்டமைப்பாளர்கள், தொழில்நுட்ப நிபுணர்கள், பணியாளர்கள் ஆகியோருக்கு இந்த மூன்றாண்டுகளும் நவீன தொழில்நுட்பத்தை நோக்கிய ஒரு புரட்சிகரப் பாய்ச்சலாக இருந்தன என்று எவ்வித மிகைப்படுத்தலுமின்றி கூறலாம்.

''ஆரியபட்டா'' மிகத் துணிவான எதிர்பார்ப்புகளையும் விஞ்சியது. இது எதிர்பார்த்ததை விட நீண்ட காலம் இயங்கி விஞ்ஞானிகளுக்குத் தேவையான விவரங்களை அளித்தது. ஆனால் முக்கிய விஷயம் இது வல்ல.

செயற்கைக் கோளை வடிவமைத்த கட்டமைப்பாளர் பேராசிரியர் யூ. ஆர். ராவ் ''ஆரியபட்டாவின்'' பயன்களைப் பின்வருமாறு தொகுத்துரைத்தார்: ''ஆரியபட்டாவை'' செலுத்தியதும் இதன் வெற்றிகரமான பயணமும் விண் வெளி ஆராய்ச்சியில் இந்திய-சோவியத் ஒத்துழைப்பில் ஒரு பெரும் மைல் கல்லாகும். கூட்டாராய்ச்சிகளுக் கான புதிய, பரவலான வாய்ப்புகள் தோன்றியுள்ளன. நமக்கு இந்தச் செயற்கைக் கோள் பெரிதும் முக்கியமானது. இது விண்வெளித் தொழில்நுட்பவியலில் இந்தியாவின் மிகப்பெரும் பாய்ச்சலாகும். இப்போது நாமே சுயமாக விண்வெளி சாதனங்களை வடிவமைத்து சோதிக்க இயலும். மிக முக்கியமானது என்னவெனில் தம்மை முழுவதுமாக இந்த லட்சியத்திற்கு அர்ப்பணித்துக் கொண்ட இளம் விஞ்ஞானிகள் குழு உருவாகியுள்ளது, இவர்களால் உறுதி யோடு எதிர்காலக் கடமைகளை நிறைவேற்ற இயலும்.

ஆம் உண்மையில், இந்த ''ஆரியபட்டா'' (இதன் ஒரு சில அமைப்புகளை மட்டுமே சோவியத் யூனியன் வழங்கியது, மற்றபடி இது இந்திய விஞ்ஞானிகள், நிபுணர்களால் தோற்றுவிக்கப்பட்டது) செலுத்தப்பட்டதானது நவீன

விண்வெளி தொழில்நுட்பத்தைக் கிரகித்தல் எனும் ஒரு முக்கியப் பிரச்சினையைத் தீர்த்தது. ஆனால் இது தொடக்கமாக மட்டுமே இருந்தது. உடனடியான நடைமுறை பிரச்சினைகளின் தீர்விற்கு விண்வெளித் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தும் முக்கியமான கடமை முன் நின்றது. ''பாஸ்கரா-1'' என்ற அடுத்த செயற்கைக் கோள் இதைச் செய்ய வேண்டியிருந்தது.

இதுவும் சோவியத் பரப்பிலிருந்து 1979 ஜூன் 7இல் செலுத்தப்பட்டது. இந்தச் செயற்கைக் கோள் ''ஆரிய பட்டாவை'' விட அதிக எடையுள்ளதாக இருந்தது மட்டுமின்றி முற்றிலும் வேறு வகையைச் சேர்ந்ததாயும் இருந்தது. இது முதலாவதாக, நடைமுறை முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. இரண்டு தொலைக்காட்சி கேமிராக் களையும் மூன்று மைக்ரோ அலை வரிசை ரேடியோமீட்டர் களையும் கொண்டிருந்த இது கண்காணிப்பு, ஆராய்ச்சி செயற்கைக் கோளாயிருந்தது. இது நாட்டின் இயற்கை வளங்களை ஆராய்ந்தது. மலைத் தொடர்கள், நதிகள், வயல்வெளிகள், காடுகள், பாலை நிலங்களின் படங் களை இது பூமிக்கு அனுப்பியது. பருவக்காற்றுகள் தோன்றுவதைக் கண்டுபிடிக்கவும், புயல்கள் உருவாவதை முன்னறிவிக்கவும் இது உதவுகிறது. உதாரணமாக, விண் வெளியிலிருந்து எடுக்கப்பட்ட படத்தின் உதவியால பனிப் பாறைகள் எவ்வளவு பெரியவை, இவை உருகும் போது எவ்வளவு தண்ணீர் வரும் என்று கணிக்கலாம். இப்படங் களில் கடல் நீரடிப் பாறைகள் எப்படி காட்சியளிக்கின்றன என்பதை வைத்து என்ன விதமான இயற்கை கனிவளங்கள் கிடைக்குமென அதிகத் துல்லியமாகக் கூறலாம். இத்தகைய பாறைகளுக்கு அருகே சாதாரணமாக இக்கனிவளங்கள் இருக்குமென விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

இந்த செயற்கைக் கோளுக்கும் தேவையான பலவற்றை (சூரிய பாட்டரிகள், இரசாயன பாட்டரிகள், நிலைப் படுத்தும் கருவிகள், காந்த பதிவுக் கருவிகள்) சோவியத் யூனியன் வழங்கியது.

1981 நவம்பர் 20இல் சோவியத் யூனியனின் பங்கேற் போடு மூன்றாவது இந்திய செயற்கைக் கோள் ''பாஸ் கரா-2'' செலுத்தப்பட்டது.

இந்த செயற்கைக் கோள்களிலிருந்து கிடைத்த புகைப்

படங்கள், மற்ற விஞ்ஞான விவரங்களின் உதவியால் இந்திய விஞ்ஞானிகளும் நிபுணர்களும் இயற்கை நிகழ்ச்சிப் போக்கு களை நன்கறிந்தனர், துணைக் கண்டத்தில் பருவநிலை உருவாவதை அறிந்தனர், இங்குள்ள தாவரங்கள், மண் வகை கள், நீரூற்றுகள் மற்றும் பலவற்றைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொண்டனர்.

இந்த செயற்கைக் கோள்களின் செயல்வன்மையான பணி, இந்தியாவிற்கு விண்வெளி ஆராய்ச்சியின் பயனையும் அவசியத்தையும் தெட்டந்தெளிவாகக் காட்டியது எனும் அம்சமும் முக்கியமானது.

மற்ற உதாரணங்களும் இருந்தன. மிகவும் விலை யுயர்ந்த, சிக்கலான விண்கலமாகிய ''இன்ஸாட்'' என்ற செயற்கைக் கோள் இந்தியாவில் வடிவமைக்கப்பட்டது; தேசிய தகவல் தொடர்பு முறையை மேம்படுத்துவதே இதன் நோக்கம்; இது அமெரிக்காவில் ''போர்டு ஏரோ ஸ்பேஸ்'' என்ற கம்பெனியால் உருவாக்கப்பட்டது. இது 1982 ஏப்ரல் 10இல் விண்வெளியில் செலுத்தப்பட்டது. ஆனால் ஒரு சில மாதங்களிலேயே செயற்கைக் கோளுடனான தொடர்புகள் அறுபட்டன, விண்வெளியின் மூலம் இதைக் கொண்டு தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை நாடு முழுவதும் பரப்பும் பணி கைவிடப்பட்டது.

செயற்கைக் கோள் கட்டப்பட்ட போது தவறுகள் நடந்திருக்கலாம் அல்லது சதிவேலை கூட நடந்திருக்க வாய்ப்புண்டு என்று இந்தியப் பத்திரிகைகள் எழுதின. ''இன்ஸாட்'' இறந்ததா, கொலை செய்யப்பட்டதா? — என்று **பிளிட்ஸ்** பத்திரிகை எழுதியது. மற்ற நாடுகளுக்கு விண்வெளி தகவல் தொடர்பு சாதனங்களே இருக்கக் கூடாது என்ற வாஷிங்டனின் இரகசியக் கொள்கைக்கு இந்தியா பலியாகியது என்று செல்வாக்கு மிக்க வட்டங் களை மேற்கோள் காட்டி பிரஸ் ஏஷியா இன்டர்நேஷனல் செய்தி நிறுவனம் அறிவித்தது. தகவல் தொடர்பு சாதனங் களை, குறிப்பாக விண்வெளி சாதனங்களை வெள்ளை மாளிகையும் பெண்டகனும் மிக முக்கியத் துறையாக கருது கின்றன, இதில் ''இயன்ற அளவு அதிகபட்ச ஏகபோகம் நிலவுவது'' அமெரிக்காவிற்கு விரும்பத்தக்கதாயிருந்தது என்றும் இச்செய்தி நிறுவனம் சுட்டிக் காட்டியது. சொந்த விண்வெளி தகவல் தொடர்பு சாதனங்களை ஏற்படுத்து

வதிலும் இவற்றை நவீனமயப்படுத்துவதிலும் தன் நேட்டோ கூட்டாளிகளுக்கு கூட அமெரிக்கா பல்வேறு விதங்களில் இடையூறு விளைவிக்கிறது.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் இதனுடன் குறிப்பிட்ட துறையில் ஒத்துழைப்பது ''உகந்ததல்ல'' என்று முடிவு செய்யப்பட்டது. ''இன்ஸாட்'' பணியில் ஏற்பட்ட இடை யூறுக்கான குற்றத்தை, இதை நிர்வகித்த இந்திய விஞ்ஞானி களின் மீது சுமத்த செய்யப்பட்ட முயற்சிகளுக்கு ஆதாரமே இல்லையென பிரஸ் ஏஷியா இன்டர்நேஷனல் கோடிட்டுக் காட்டியது. கணிசமான செலவோடு கட்டப்பட்ட இச் செயற்கைக் கோளில் பல குறைபாடுகள் இருந்தன.

''இன்ஸாட்'' செயலற்று போனதும் ''ஸ்தத்தியோனார்'' என்ற சோவியத் செயற்கைக் கோளை வாடகைக்கு எடுக்க இந்திய தகவல் ஒலி பரப்புத் துறை முடிவெடுத்தது.

விண்வெளி ஆராய்ச்சியில் பல்வேறு நாடுகளின் அனுபவத் தையும் உதவியையும் பயன்படுத்த இந்தியா விரும்புவது இயற்கையே. இப்படிப்பட்ட சிக்கலான ஆராய்ச்சித் துறை யில் தோல்விகள் தவிர்க்க இயலாதவை என்பதும் சாத் தியமே; ஆனாலும் ஒத்துழைப்பை எப்படிப் புரிந்து கொண்டு அணுகுகிறோம் என்பதும் மிக முக்கியமாகும். இந்தியா ஏன் விண்வெளிக்குச் செல்கிறது என்பதை மேற்கே எல்லா சமயங்களிலும் புரிந்து கொள்ளவில்லை என்பதில் எவ்வித ரகசியமும் இல்லை. ''மாட்டு வண்டிகள்தான் முக்கிய போக்குவரத்து சாதனமாக உள்ள இந்தியா விண்வெளி மன்றத்தில் சேர்ந்துள்ளது'' என்று ராய்டர் செய்தி நிறு வனம் ஏளனமாகக் குறிப்பிட்டது. ஆனால் தோல்வி களாலோ, சந்தேக மனப்பாங்காலோ இந்தியாவை அது தேர்ந்தெடுத்துள்ள பாதையிலிருந்து தள்ள முடியாது. விண் வெளி செயல்திட்டம் நாட்டின் பொது முன்னேற்றத்தின் மிக முக்கிய உந்து கோல்களில் ஒன்று என்பதை இந்தியர் கள் மேன்மேலும் அதிகமாகப் புரிந்து கொள்கின்றனர். சொந்த செயற்கைக் கோள்களைத் தோற்றுவிப்பதன் மூலமும் விண்வெளி தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துவதன் மூலமும் இந்தியா விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்பத்தின் பல்வேறு துறைகளின் மட்டத்தை நவீன உலக தரத்திற்கு உயர்த்துகிறது. இந்நடவடிக்கைகள் இல்லாவிடில் நாடு என்றென்றும் பின்தங்கிய நிலையிலிருக்கும். விண்வெளி

செயல்திட்டத்தை நிறைவேற்றும் இந்திய விஞ்ஞானிகளின் இக்கருத்தை சோவியத் விஞ்ஞானிகளும் ஏற்றுக்கொள் கின்றனர். மக்களின் நன்மைக்காக விண்வெளியை ஆராய் வதில் இரு நாடுகளும் பயன்மிகு வகையில் ஒத்துழைக்க இது இன்னுமொரு காரணமாகும்.

விண்வெளி ஆராய்ச்சியில் இந்திய-சோவியத் ஒத்துழைப்பு இந்தியாவிற்கும் பெரிதும் பயனுள்ளது. சோவியத் யூனி யனின் ஒத்துழைப்பு சுயசார்பு நிலையை அடைய இந்தியா விற்கு உதவியது, நாட்டு வளர்ச்சிக்காக விண்வெளி தொழில் நுட்பத்தைப் பயன்படுத்துவது எனும் தேசிய லட்சியத்தை அடைவதை நோக்கமாகக் கொண்ட இந்தியச் செயல் திட்டத்தின் நிறைவேற்றத்தை துரிதப்படுத்த வழிகோலியது என்று இந்திய விண்வெளி ஆராய்ச்சி ஸ்தாபனத் தலைவர் பேராசிரியர் சதீஷ் தவான் கூறினார்.

விண்வெளி ஆராய்ச்சிக்காக இந்தியா பெரும் செலவு களைச் செய்யக் கூடாது என்று கூறியவர்களுக்குப் பதி லளிக்கையில் இந்திரா காந்தி, விஷயம் செலவுகளில் அடங்கியிருக்கவில்லையென திட்டவட்டமாயும் அடையாளச் சிறப்போடும் கூறினார். ஏனெனில் நாட்டின் மிக அத்தியா வசியப் பிரச்சினைகளின் தீர்விற்கு உதவுவதுதான் இந்த ஆராய்ச்சிகளின் லட்சியமாகும். இப்படிப்பட்ட செயல்திட்டங் களுக்கான செலவுகளைக் குழந்தைகளின் கல்விக்காகும் செலவுகளுடன் ஒப்பிடலாம் – இவை விரைவிலேயே சரி கட்டப்பட்டு விடும். விண்வெளி ஆராய்ச்சியில் இந்தியாவின் முதல் நடவடிக்கைகள் இந்தியத் தவப்புதல்வியின் பெயரி லிருந்து பிரிக்க இயலாதவை. இவர் பிரதமராக இருந்த போதுதான் முதல் இந்திய செயற்கைக் கோள்கள் ஏவப் பட்டன, முதல் இந்தியக் குடிமகன் விண்வெளியில் பறந்தார்.

1980ஆம் ஆண்டின் ஆரம்பத்தில்தான் முதல் சோவியத்-இந்தியக் கூட்டு விண்வெளிப் பயணத்தைப் பற்றிய பேச்சு வந்தது. பல நாடுகளில் இது ஒரு பரபரப்பை ஏற்படுத் தியது. ஆனால் ''ஆரியபட்டா'' மற்றும் ''பாஸ்கரா'' செயற் கைக் கோள்களைத் தோற்றுவித்து விண்வெளியில் செலுத் தியவர்களுக்கு இது பரபரப்பாக இருக்கவில்லை, மாறாக விண்வெளி ஆராய்ச்சியில் இரு நாடுகளின் ஒத்துழைப்பை மேற்கொண்டு வளர்ப்பதில் தர்க்க ரீதியான, நியதியான நடவடிக்கையாக இருந்தது.

இந்த முன்மொழிவின் விஞ்ஞான முக்கியத்துவத்திற்காக மட்டுமின்றி, இந்திய விண்வெளி வலவரின் பயணம் நாட்டின் இளைய தலைமுறைக்கு ஒரு ஊக்கமளிக்கும் உதாரண மாயும் இருக்கும் என்பதால் இந்தியா இதை ஏற்றதாக நாடாளுமன்றத்தில் உரையாற்றிய போது இந்திரா காந்தி குறிப்பிட்டார். இந்தியப் பிரதமர் எதிர்காலத்தைப் பார்த் தார்.

இந்தியாவின் மீது பெரும் அக்கறையைக் காட்டும் சோவியத் யூனியனில், ராகேஷ் சர்மாவையும் ரவீஷ் மல்ஹோத்ராவையும் புதிய இந்தியாவின் தக்க பிரதிநிதி களாக, சுதந்திர இந்தியாவின் சமகாலத்தவராகப் பார்த் தனர். சுதந்திரம் தான் ராகேஷிற்கும் ரவீஷிற்கும் இறக்கைகளையளித்து வானிற்கு இட்டுச் சென்று விண் வெளிக்கான பாதையைக் காட்டியது. இந்தியாவுடனான நட்பை எல்லா மக்களும் உணர்ந்து ஏற்றுக்கொண்டுள்ள ஒரு நாட்டில் இந்தியப் பிரதிநிதிகளை எப்படிப்பட்ட உள்ளார்ந்த அன்போடும் மகிழ்ச்சியோடும் வரவேற்றனர் என்பதைப் பற்றிக் கூறவே தேவையில்லை.

இது மிக முக்கியமானதாயிருந்தது. இந்திய விமானிகள் பெரும், சிக்கலான செயல்திட்டத்திற்கேற்ற பயிற்சியைப் பெற வேண்டியிருந்தது மட்டுமின்றி, ஆரம்பத்தில் இந்தியர் கள் புதிய சூழ்நிலைகளுக்கு நன்கு பழக வேண்டியிருந்தது. இதை சோவியத் நண்பர்கள் நன்கே புரிந்து கொண்டனர்.

நட்சத்திர நகரில் விண்வெளிப் பயணத்திற்கான முழு பயிற்சியை முடிக்க 1 – 2 ஆண்டுகளாகும். இந்திய விமானி களுக்கு முன் இங்கு பயிற்சி பெற்ற பிரெஞ்சு நாட்டவருக்கு கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகளாயின. இது எதிர்கால விண்வெளி வலவர்களின் தனித் திறமைகளைப் பெரிதும் பொறுத்துள்ளது, அதே சமயம் விண்வெளியில் நடத்த வேண்டிய பரிசோதனைகளின், செய்ய வேண்டிய வேலை களின் தன்மையும் இதில் கணிசமான பங்காற்றும். ஆம், உண்மையிலேயே வேலை செய்யத்தான் விண்வெளிக்குச் செல்கின்றனர்.

இந்த அர்த்தத்தில் சோவியத்-இந்திய கூட்டுப் பறத் தலுக்கு பலர் தம்மை தயார்படுத்திக் கொண்டனர். விஞ்ஞான பரிசோதனைகளின் செயல்திட்டத்தை உருவாக் கிய இரு நாடுகளின் விஞ்ஞானிகளும் நிபுணர்களும் இவர்

களில் அடங்குவர். பல கூட்டுச் சந்திப்புகள் நடத்தபபட்டன, இந்தியாவில் ஒரு கருத்தரங்கிற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. எக்ஸ்ரே வானியல் ஆராய்ச்சி, விண்வெளியிலிருந்து பூமியின் பரப்பை ஆராயும் பணி, விண்வெளி உலோகவியல், விண் வெளி உயிரியல் மற்றும் மருத்துவம் சம்பந்தமான ஆராய்ச்சி கள் இச்செயல்திட்டத்தில் அடங்கியிருந்தன.

இந்திய விமானிகள் இரண்டு கட்டங்களில் பயிற்சி பெற்றனர். முதல் கட்டத்தில் பொதுவான பயிற்சித் திட்டம் இருந்தது. விண்வெளியியல் பற்றிய அடிப்படைகளை இருவரும் பயின்றனர், வலவர்களுடன் கூடிய பல்வேறு வகையான விண்கப்பல்கள், கோள் நிலையங்களின் கட் டமைப்புகளைப் பற்றி அறிந்து கொண்டனர். பொதுவான உடலியல் பயிற்சி, விசேஷ மற்றும் மருத்துவ-உயிரியல் பயிற்சி ஆகியவற்றைப் பெற்றனர். இரண்டாவது கட்டத்தில் இவர்கள் அவரவர் வலவர் தொகுதியில் பயிற்சி பெற்றனர்.

இந்திய விமானிகளுக்கு வகுப்பறை விஞ்ஞான கல்விக்கு ஆறு மாதங்கள் தேவைப்பட்டன. ராகேஷும் ரவீஷும் விண்வெளிப் பயணங்களின் இயக்கவியலையும் விண்வெளி வானூர்தி நெறிநிலை அடிப்படைகளையும் ரேடியோ கதிரிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் முறைகளையும் விண்கப்பலைச் செலுத்தும் முறைகளையும் பயின்றனர். இக்கட்டத்தை ஒப்பீட்டளவில்தான் வகுப்பறைப் பாடம் என்று கூறலாம். இருவரும் ஏராளமான உடற்பயிற்சிகள், விளையாட்டுகளில் ஈடுபட்டனர், பயிற்சி பயணங்களில் கலந்து கொண்டனர். ஒரு சில பரிசோதனைக் கூட விமா னங்களில் செயற்கையாக குறுகிய காலத்திற்கு எடை யின்மையை ஏற்படுத்தலாம். இந்திய விமானிகள் இவற்றில் பயிற்சி பெற்றனர்.

பயிற்சிகள் கடினமானவையாக இருந்தன. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிமிடமும் ஏதாவது வேலை இருக்கும். இவர்களின் வேண்டுகோளின்படி ஒரு சில உடற்பயிற்சி களுக்குப் பதில் மற்றவற்றை அனுமதித்ததைத் தவிர விருந்தினர்களுக்காக எவ்வித சலுகைகளும் காட்டப்பட வில்லை; சொந்தப் பயணத்திற்காக மட்டுமின்றி, பொறுப்பு மிக்க, சிக்கலான, இந்தியாவிற்கு அவசியமான பணிக்காக வும் இவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.

இன்று விண்வெளி விஞ்ஞானம், தொழில்நுட்பத்தின்

சாதனைகளின் காரணமாயும், விண்வெளியில் மனிதர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் மேன்மேலும் சிக்கலாகி வருவதாலும் விண்வெளி வலவர்கள் மேன்மேலும் நவீன பயிற்சியைப் பெற வேண்டியுள்ளது, இவர்கள் விண்கப்பல், கோள நிலையத்தைப் பற்றி மேன்மேலும் திட்டவட்டமாக, பரிபூரணமாக அறிய வேண்டியது அவசியமாகிறது, மற்ற பல விசேஷ விஞ்ஞான அறிவும் இன்றியமையாததாகிறது. ஆகவே பயிற்சி மேன்மேலும் சிக்கலானதாய், கடினமான தாய், பொறுப்புள்ளதாய் ஆனால், அதே சமயம் சுவாரசிய மானதாகி வருகிறது.

இரண்டாவது கட்டத்திற்கு முன் இருவருக்கும் தாயகம் சென்று வர விடுமுறை அளிக்கப்பட்டது. இவர்கள் மீது இந்தியாவில் பெரும் அக்கறை செலுத்தப்பட்டது. ராகேஷும் ரவீஷும் ஓய்வெடுத்ததோடு கூட, கோள நிலையத்தில் நடத்த வேண்டியிருந்த ஒரு சில பரிசோதனைகளுக்கு பங்களூர் விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் தம்மை நன்கு தயார்படுத்திக் கொண்டனர்.

இவர்களைப் பற்றி இந்தியப் பத்திரிகைகள் விவரமாக எழுதின. இவர்கள் பிரபலமாயினர். ஏராளமானவர்களின் கனவுகளை நிறைவேற்றப் போகும் இவர்களை உவகை யோடு பார்த்தார்கள். ஆக விண்வெளிப் பயணத்திற்கான பயிற்சியே நாட்டின் இளம் தலைமுறைக்கு உற்சாகம் தரும் உதாரணமாகியது; இந்த இளம் தலைமுறையினர் தான் மக்களின் நலன்களுக்காக விண்வெளி ஆராய்ச்சிகளில் இறங்கப் போகின்றனர்.

விண்வெளிப் பறத்தல் இந்திய விண்வெளி செயல் திட்டத்தின் வளர்ச்சிக்குப் பெரும் ஊக்கமளித்தது. இன்று ராகேஷ் சர்மா, ரவீஷ் மல்ஹோத்ரா, இவர்களது விண் வெளி சகோதரர்களாகிய யூரி மாலிஷெவ், கினாதி ஸ்திரிக் காலவ், இந்திய விண்வெளி வலவரை கோள நிலையத்தில் எதிர்கொண்ட லியோனித் கிஸிம், விக்டர் சலவியொவ், ஒலேக் அத்கோவ் ஆகியோரின் பெயர்கள் சோவியத்-இந்திய நட்புறவின் வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட்டுள்ளன. ''சயூஸ்'' விண்கப்பலில் பயணம் செய்த மாலிஷெவ், ஸ்திரிக்காலவ், ராகேஷ் சர்மா ஆகிய மூவருக்கும் உயர் சோவியத் மற்றும் இந்திய விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.

இப்பயணத்தின் நடைமுறைப் பயன்கள் மகத்தானவை. இப்பயணத்திற்குப் பின் ராகேஷ் சர்மா பத்திரிகையாளர் மகாநாட்டில் உரையாற்றினார். ''தெர்ரா'' என்ற பரிசோதனை திட்டத்தின் கீழ் விண்வெளியில் புவி-பௌதீக ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டதைப் பற்றி அவர் கூறினார். இந்த ஆராய்ச்சிகளின் போது இந்தியப் பரப்பு மற்றும் இந்துப் பெருங்கடலின் தனிப்பட்ட பகுதிகள் பார்வையிடப் பட்டன, விண்வெளியிலிருந்து புகைப்படங்கள் எடுக்கப் பட்டன; அதே சமயம் பூமியில் விமானத்திலிருந்து இதே இடங்கள் ஒரே நேரத்தில் புகைப்படமெடுக்கப்பட்டன. இதனால் கிடைத்த விவரங்கள் நிலத்தைப் பயன்படுத்தும் வரைபடங்களை உருவாக்கும் போதும், கரையோர மண்டலங்களின் நிலைகளைக் கண்காணிக்கும் போதும், பெருங்கடல் ஆராய்ச்சிகள், காடுகள், உள்நாட்டு நீர்நிலைகள், வயல்வெளிகளின் ஆராய்ச்சிகள் ஆகியவற்றிற்கும் பெரிதும் பயன்படும். இந்த ஆராய்ச்சிகளின் போது இமாலய மலைப் பகுதி, பாலை நிலங்கள், அரைப் பாலை நிலங்கள் போன்ற செல்வதற்கு கடினமான பிரதேசங்களின் ஆராய்ச்சிக்குப் பெரும் கவனம் செலுத்தப்பட்டது, மலைகளில் உள்ள நீரின் அளவு நிர்ணயிக்கப்பட்டது.

இவை ஒரு சில எடுத்துக் காட்டுகள் மட்டுமே. விண்வெளியில் வேறு பல ஆராய்ச்சிகளும் நடத்தப்பட்டன. ராகேஷ் சர்மா விண்வெளியில் பறந்த போது நடத்தப் பட்ட ஆராய்ச்சிகள் மட்டும் இந்தியாவிற்கு 7 பில்லியன் ரூபாய்கள் மதிப்புள்ள பயன்களை அளித்ததாக இந்திய விஞ்ஞானிகள் கணக்கிட்டுள்ளனர். இது தவிர பயணத்தின் போது எடுக்கப்பட்ட புகைப்படங்கள் இந்தியாவிற்குத் தரப்பட்டன. இவற்றின் மதிப்பு மிகவும் அதிகம். விஞ்ஞான பரிசோதனைகளின் மதிப்போ அளவிட முடியாதது.

நிச்சயமாக, இப்பயணத்தின் மதிப்பு முழுவதையும் ரூபாய்களிலோ ரூபிள்களிலோ அளவிட முடியாது. இப் பயணத்தின் விளைவாய் இந்தியா ''விண்வெளி மன்றத்தில்'' முழு உரிமையுள்ள உறுப்பு நாடாகியுள்ளது. இது விண்வெளி ஆராய்ச்சியில் இரு நாடுகளின் புதிய கூட்டுப் பணிகளுக்கு உந்து சக்தியாக அமைந்தது. உதாரணமாக, ''லித்சேன்ஸின்தோர்க்'' என்ற சோவியத் ஸ்தாபனத்திற்கும் இஸ்ரோ (ISRO) விற்கும் இடையிலான உடன்படிக்கையின்

படி இந்திய தொலைதூரக் கண்காணிப்பு செயற்கைக் கோள் சோவியத் ராக்கெட்டின் உதவியால் செலுத்தப் படும். இயற்கைச் செல்வங்களை ஆராய்ந்து, பயன்படுத்து வது சம்பந்தமான இந்திய விண்வெளி செயல்திட்டத்தின் முக்கியப் பகுதியின் நிறைவேற்றம் இப்படிப்பட்ட செயற் கைக் கோள்களுடன் தொடர்புடையது. இவற்றிலிருந்து கிடைக்கும் விவரங்கள் வேளாண்மைத்துறை, வானிலை முன்னறிவிப்பு, நீரியல், வரைபட இயல், புவியியல் படத் துறை, மீன்பிடிப்பு, மற்ற விஞ்ஞான, பொருளாதாரத் துறைகள் ஆகியவற்றில் பரவலாகப் பயன்படுத்தப்படும். இப்படிப்பட்ட விஷயங்களில் செயற்கைக் கோள்களின் செயல்வன்மையும் நடைமுறைப் பயனும் மகத்தானவை. உதாரணமாக கனிவளங்களை ஆராய்வதற்காக "MKF-6" என்ற பல்மண்டல புகைப்படக் கருவியைப் பயன்படுத்தி 4 நிமிடங்கள் படமெடுப்பது பூமியில் விமானங்களைப் பயன்படுத்தி இரண்டாண்டுகள் புவி இயலர்கள் பாடுபடு வதற்கு ஒப்பானது. இன்று இந்தியப் பொருளாதாரம் செயற்கைக் கோள்களை உருவாக்குவது மட்டுமின்றி, செயற்கைக் கோள்கள் இந்தியப் பொருளாதாரத்தை "உருவாக்குகின்றன".

இஸ்ரோவிற்கும் சோவியத் யூனியனின் விஞ்ஞானப் பேரவைக்கும் இடையில் புதிய பத்தாண்டுகளுக்கு ஒத் துழைப்பைத் தொடருவது சம்பந்தமாக கையெழுத்தான உடன்படிக்கையின்படி, வானியல், வானியல் பௌதீகம், பருவநிலை முன்னறிவிப்பு, புவி-பௌதீகம், விண்வெளி சாதனங்களைத் தோற்றுவிக்கும் தொழில்நுட்பம், பூமியைப் பற்றிய ஆராய்ச்சி முறைகளை உருவாக்குவது, இன்ன பிற துறைகளில் கூட்டு ஆராய்ச்சிகள் நடத்தப்படும். கூட்டான, சுவாரசியமான பெரும் பணி முன் நிற்கிறது, பல இளைஞர் கள், திறமை மிகு நிபுணர்களை இது விண்வெளி ஆராய்ச்சி களில் ஈடுபடுத்தும். இது ஞானம், சக்தி, திறமை ஆகியவற்றிற் கான புதிய நடவடிக்கைக் களமாகும். இத்திசையமைவில் தான் இந்தியா 21வது நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்கும்.

இந்திய விண்வெளி வலவரின் பயணம் கோடிக்கணக்கான இந்தியர்களின் கனவுகளை நனவாக்கியது, புதிய விண் வெளிப் பயணங்களுக்கு உந்து கோலாக அமைந்தது.

இப்படிப்பட்ட திட்டங்கள் உள்ளன. ஒரு சில ஆண்டு களுக்கு முன் ''ஆரியபட்டாவை'' செலுத்தும் ஏற்பாடுகள் நடைபெற்று வந்த போது பங்களூரில் விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் நடைபெற்ற கலந்துரையாடலை இங்கு நினைவு கூறலாம். இச்செயற்கைக் கோளைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்த விக்ரம் சாராபாயின் சீடர்கள் இந்தக் காரியத்திற்குத் தம்மை முற்றிலுமாக அர்ப்பணித்துக் கொண்டதோடு கூட எதிர்காலத்தின் அடியாழத்தை அறிந்துணர அயராது பாடுபட்டனர், இதைப் பற்றி கனவு கண்டனர். வி. ஆர். கட்டி எனும் ஒரு இளம் பொறியியலரின் கூற்று வியப்பை ஏற்படுத்தியது. ''2000ஆம் ஆண்டு வாக்கில் விண்வெளி ஆராய்ச்சிகள் உலகந் தழுவிய அளவில் நடக்கும். நம் நாடு விண்வெளி வல்லரசுகளின் மத்தியில் உரிய இடத்தை வகிக்கும். நாம் விண்வெளி தொழில்நுட்பவியலில் வீறு நடை போடுவோம், சொந்தத் தகவல் தொடர்பு செயற்கைக் கோள்களை உருவாக்குவோம். ஒரு வேளை 2,000ஆம் ஆண்டு வாக்கில் சந்திரனுக்கோ மற்ற கிரகங் களுக்கோ இந்தியா தன் விண்வெளி வலவர்களை அனுப்பக் கூடும்'' என்று அவர் கூறினார்.

அவர் அன்று கூறியவற்றில் பல ஏற்கனவே எதார்த்த மாகியுள்ளன. இன்னும் சில கனவுகளாகவே உள்ளன. 1975 ஏப்ரலில் ''ஆரியபட்டா'' செலுத்தப்பட்ட போது இந்திய விண்வெளி வலவரின் விண்வெளிப் பயணம் இதே போன்ற கனவாகத்தானே இருந்தது. ''ஆரியபட்டா'' சோவியத்-இந்திய கூட்டு விண்வெளிப் பயணத்தை நெருங்கி வரச் செய்ததைப் போன்றே இக்கூட்டு விண்வெளிப் பயணம் மற்ற விண்வெளித் திட்டங்களின் நிறைவேற்றத்தை நெருங்கி வரச் செய்தது. விண்வெளியை மனிதகுல நன்மைக்காகப் பயன்படுத்துவதில் நம்மிரு நாடுகளின் மக்களும் கொண்டுள்ள அக்கறையும் இரு நாட்டு மக்களின் காலத்தால் சோதிக்கப்பட்ட நட்புறவும் புதிய கூட்டு விண்வெளி ஆராய்ச்சிகளுக்கு, சாதனைகளுக்கான அடிப்படை யாகும்.

யூரி ககாரின் முதன்முதலாக விண்வெளியில் பறந்த போது ஜவகர்லால் நேரு இதன் முக்கியத்துவத்தைப் பற்றி பின்வருமாறு கூறினார்: ''சோவியத் விஞ்ஞானிகளின் மகத்தான சாதனை இயற்கைச் சக்திகளின் மீது மனிதன்

அடைந்துள்ள பெரும் வெற்றியாகும். மானுடப் பார்வை இவ்வளவு அகன்ற எல்லைகளுக்குச் செல்லும் போது நமது சின்னஞ் சிறிய பூமியில் யுத்தங்களைப் பற்றி திட்ட மிடுவது முட்டாள் தனமாகும், குறுகிய மனப்பாங்காகும். எனவே இந்த மாபெரும் வெற்றியை சமாதான லட்சியத்தின் வெற்றியாகப் பார்க்க வேண்டும்''.

விண்வெளி ஆராய்ச்சியில் முதலடிகளை எடுத்து வைத்த சோவியத் யூனியன், சமாதானமான விண்வெளியின் ஆதரவாளனாகத்தான். இருந்தது, இன்றும் இருந்து வருகிறது, விண்வெளி ஆராய்ச்சிகளை சமாதான நோக் கங்களுக்காகப் பயன்படுத்தும் பொருட்டு சர்வதேச ஒத் துழைப்பிற்காகப் பாடுபடுகிறது. சோவியத் யூனியனின் பங்கேற்போடு நிறைவேற்றப்படும் எல்லா கூட்டு விண்வெளி செயல்திட்டங்களும் இதற்குத்தான் அர்ப்பணிக்கப்பட்டவை. ''சயூஸ்''-அப்பலோ'' கூட்டுப் பயணம், ''இண்டர்காஸ்மஸ்'' திட்டத்தின் கீழ் சோஷலிச நாடுகளின் விண்வெளி வலவர் களின் பயணங்கள், சோவியத்-பிரெஞ்சு கூட்டுப் பயணம் ஆகியவை இப்படிப்பட்டவைதான்.

விண்வெளி ஆராய்ச்சி பற்றிய சோவியத்-இந்திய செயல் திட்டம் முழுவதும் சமாதான லட்சியத்தை நோக்கமாகக் கொண்டுள்ளது. நம்மிரு நாடுகளும் அமைதியான விண் வெளிக்காகப் போராடுகின்றன, விண்வெளிப் பரப்பை ''நட்சத்திர யுத்தங்கள்'' என்றழைக்கப்படும் களமாக மாற்ற ஏகாதிபத்திய வல்லரசுகள் செய்யும் முயற்சிகளுக் கெதிராக குரல் எழுப்புகின்றன. விண்வெளி இராணுவப் பயிற்சிக் களமாகக் கூடாது, இது முன்னேற்றப் பரி சோதனைக் கூடமாக, மனித நன்மைக்கான மிகப் பிரம் மாண்டமான நடவடிக்கை மண்டலமாகத் திகழ வேண்டும். சோவியத்-இந்தியக் கூட்டு விண்வெளிப் பயணம் இந்த நல் லட்சியத்தைத் தான் நோக்கமாகக் கொண்டிருந்தது. இப்பயணம் நம் நட்புறவில் ஒரு முக்கிய அம்சமாகியது. இரு நாடுகளின் மைந்தர்களும் இந்த நட்புறவை விண் வெளிக்கு உயர்த்தினர். மனிதனின் பேரால், சமாதானத்தின் பேரால் அவர்கள் விண்வெளியில் தம் பணிகளை நிறை வேற்றினர். இவர்கள் யூரி ககாரினின் கனவை நனவாக் கினர். ''ருஷ்யர்கள், இந்தியர்கள், அமெரிக்கர்கள் போன்ற பல நாடுகளைச் சேர்ந்த இளம் விண்வெளி வலவர்

களோடு விண்கப்பலில் பறக்க நான் ஆசைப்படுகிறேன். இது சமாதானமான, விஞ்ஞான விண்வெளிக் கப்பலாயிருக்கும். ஆனால் இது தற்போது ஒரு கனவு மட்டுமே என்பது உங்களுக்குப் புரியக் கூடும். இந்தக் கனவு நனவாக எல்லோரும் கூட்டாகச் சேர்ந்து பாடுபடுவோம் வாருங்கள். உண்மையில், பிரபஞ்சத்தில் பறக்கும் இத்தகைய விண்கப்பலாக நம் பூமியே இருக்கவில்லையா என்ன! இக்கப்பல் நம் அனைவருக்கும், உலக மக்கள் அனைவருக்கும் சொந்தமானது, இதில் உள்ளவர்கள் அனைவரும் சமாதானமாக, நட்பு கொண்டு வாழ வேண்டும்'' என்றார் யூரி ககாரின்.

## அத்தியாயம் ஐந்து

# இரு மாபெரும் மக்களினங்களின் ஆன்மீக ஒற்றுமைக்குப் பாலம் சமைப்பவர்கள்

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான நட்புறவும் ஒத்துழைப்பும் இரு நாடுகளிலும் ஆழ்ந்து வேரூன்றியுள்ள மக்கள் பாரம்பரியமாகியுள்ளது. சோவியத்-இந்திய உறவுகளின் நிலையான, சீரிசைவான வளர்ச்சியைப் பெரிதும் நிர்ணயிக்கும் சிறப்பு அம்சம் இதுதான் என்பதில் சந்தேகமில்லை. உண்மையிலேயே, நெஞ்சார்ந்த நட்புணர்வும் பரஸ்பர அன்பும் இந்திய மற்றும் சோவியத் மக்களின் உள்ளுணர்வில் ஆழப் பதிந்துள்ளன. வாழ்க்கை, கலாசாரம் மற்றும் கலையின் பால் சோவியத் மக்களும் இந்தியர்களும் பரஸ்பரம் காட்டும் பெரும் அக்கறையின் காரணங்கள் இதில்தான் அடங்கியுள்ளன. இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் ராஜதந்திர உறவுகள் நிலைநாட்டப் பட்டு 40 ஆண்டுகள் கழிந்துள்ளன. இந்த காலகட்டத்தை, கலை, கலாசாரம், விஞ்ஞானம், கல்வி ஆகிய துறைகளில் இரு நாடுகளின் பரஸ்பர செழுமைப்படுத்தும் தொடர்புகள் தீவிர வளர்ச்சி பெற்ற கட்டமாக உரிமையோடு அழைக்கலாம்.

இத்தொடர்புகளின் முக்கியத்துவம் மதிப்பிடுவதற்கே கடினமானது. ஏனெனில் இவை இரு நாடுகளின் மக்களும் நெருங்கி வரவும் இவர்களின் இடையில் பரஸ்பர மன ஒற்றுமை வளரவும் துணை புரிகின்றன, இவர்களின் வாழ்வை செழுமைப்படுத்துகின்றன.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையிலான கலாசாரத் தொடர்புகளை வளர்ப்பதில் திரைப்படம் பெரும் பங்காற்றுகிறது. பிமல் ராய், ராஜ்கபூர், மிருனாள் சென், ஷியாம் பெனெகல் போன்றவர்களின் படங்களை லட்சோபலட்சம் சோவியத் மக்கள் கண்டு களித்தனர்.

இந்திய யதார்த்தத்தையும் இந்த யதார்த்தத்தின் சிக்கல்களையும் பிரச்சினைகளையும் அப்படியே காட்டியது, பாமர மக்களின் வாழ்க்கை மற்றும் இவர்களது தேவைகளின் மீதான அனுதாபத்தோடு கூடிய கவனம் — இந்தியத் திரைப்படக் கலைஞர்களின் இத்தகைய தலைசிறந்த உதாரணங்களின் பயனாய் சோவியத் மக்கள் இப்படங்களை நன்கு புரிந்து கொண்டனர். 1954இல் சோவியத் நாட்டில் நடந்த முதல் இந்தியத் திரைப்பட விழா பலருக்கு இந்தியாவை அப்படியே திறந்து காட்டியது. ''அவாரா'', ''தோ பீகா ஜமீன்'', ''ராஹி'', ''பய்ஜூ பாவ்ரா'' போன்ற படங்கள் சோவியத் ரசிகர்களால் பெரிதும் வரவேற்கப்பட்டு பாராட்டப்பட்டன. அது முதற்கொண்டு இந்தியப் படங்கள் சோவியத் நாட்டில் அடிக்கடித் திரையிடப்படலாயின. சோவியத் யூனியனில் முறையாக நடக்கும் திரைப்பட விழாக்கள் இதற்குப் பெரிதும் உதவுகின்றன.

இந்தியா சுதந்திரமடைந்த பின், இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவு வலுவடைந்த சூழ்நிலையில், சோவியத் திரைப்படத் துறையின் சாதனைகள், உலக திரைப்படத் துறையில் இதன் பெரும் பங்கு ஆகியவற்றைப் பற்றி உண்மையாக அறியும் வாய்ப்பு இந்திய மக்களுக்கு கிட்டியது. 1950ஆம் ஆண்டிலேயே பம்பாயிலும் கல்கத்தாவிலும் சோவியத் திரைப்பட விழாக்கள் நடந்தன என்பது குறிப்பிடத்தக்கது. 1950 டிசம்பரில் சோவியத் திரைப்படக் கலைஞர்களின் தூதுக் குழு இந்தியாவிற்குப் பயணம் செய்தது. பிரபல இயக்குநர் வி. புதோவ்கின், நடிகர் என். சிர்க்காசவ் ஆகியோர் இதிலிருந்தனர். சோவியத் திரைப்படத் துறையினர் முதன்முதலாக இந்தியத் திரைப்படத் துறையினருடனும், இந்திய கலை, கலாசாரத்துடனும் நேரடியாக அறிமுகம் செய்து கொண்டனர். இவர்களின் ஏராளமான சந்திப்புகள் சோவியத் திரைப்படத் துறையின் வளர்ச்சிப் பாதைகளைப் பற்றி அறியும் வாய்ப்பை இந்திய மக்களுக்கு அளித்தன.

பின்னால் இந்தியாவில் ''நாரைகள் பறக்கின்றன'', ''போர்வீரனைப் பற்றிய கதை'', ''போர்வீரனின் தந்தை'', ''போரும் சமாதானமும்'', ''விடுதலை'' போன்றவை வெற்றிப் படங்களாக விளங்கின. 1985ஆம்

ஆண்டு டில்லி சர்வதேச திரைப்பட விழாவில் முக்கியப் பரிசாகிய ''தங்க மயில்'' பரிசை வென்ற ''கொடுமையான காதற்காவியம்'' என்ற படம் இந்தியாவில் பெரும் வரவேற்பைப் பெற்றது.

சோவியத் மற்றும் இந்தியத் திரைப்படத் துறையினரின் ஒத்துழைப்பு நன்கு வளர்ந்து வருகிறது. இது இரு நாடுகளுக்கும் இடையிலான பன்முக கலாசாரத் தொடர்புகளின் பிரிக்க இயலா அங்கமாகும். ''அபனாசி நிக்கீத்தின்'' (''மூன்று கடல்களுக்கு அப்பால்'') என்ற கூட்டுப் படத்திலிருந்து இது துவங்கியது. இதில் பால்ராஜ சாஹினி, நர்கீசோடு சேர்ந்து முக்கியப் பாத்திரத்தில் பிரபல சோவியத் நடிகர் ஒலேக் ஸ்திரிஷேனவ் நடித்தார். இந்தக் கூட்டுப் படத் தயாரிப்பின் போது கிடைத்த நல் அனுபவம், சோவியத் யூனியனிலும் இந்தியாவிலும் பிரபலமான ''மேரா நாம் ஜோக்கர்'', ''அலிபாபாவும் நாற்பது திருடர்களும்'', ''காதல் கதை'' போன்ற படங்களின் தயாரிப்பின் போது சோவியத் மற்றும் இந்தியத் திரைப்படக் கலைஞர்களுக்கிடையில் ஒத்துழைப்பு வளர வழிகோலியது. 1984இல் ''நேரு'' என்ற கூட்டு சோவியத்-இந்திய செய்தித் திரைப்படம் வெளி வந்தது. இது இரு நாடுகளின் கலாசார வாழ்வில் முக்கியச் சம்பவமாகியது. இப்படத் தயாரிப்பு பிரபல இயக்குநர்கள் யூ. அல்தோஹின், ஷியாம் பெனெகலின் மேற்பார்வையில் நடந்தது. இந்தியத் தவப்புதல்வனும் சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமருமான ஜவகர்லால் நேருவின் வாழ்க்கைப் பாதையை கோடிக் கணக்கானோர் திரையில் கண்டனர்.

இந்தியத் திரைப்படத்துறையினருடனான ஒத்துழைப்பை சோவியத் கலைஞர்கள் உயர்வாக மதிப்பிடுகின்றனர். கூட்டுத் தயாரிப்புகளில் பங்கேற்ற உஸ்பெக் திரைப்பட இயக்குநர் லத்தீப் பய்ஸியெவ் **சோவியத் லேண்ட்** இதழுக்கு அளித்த பேட்டியில் பின்வருமாறு கூறினார்: ''நம்மிரு நாட்டுத் திரைப்படத்துறையினருக்கும் இடையிலான ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது. இந்தியத் திரைப்படத்துறைக்கு தனிச் சிறப்புகள் உண்டு. இதன் இசையும் மானுட தன்மையும் நடிகர்களின் அற்புதமான நடிப்பும் ரசிகர்களை மயக்குகின்றன. நமது ஆக்க பூர்வமான தொடர்புகள் இயல்பானவை, அவசியமானவை என்று

நான் கருதுகிறேன்''* .

இந்திய எழுத்தாளர்கள், நாடகக் கலைஞர்களின் படைப்புகளின் அடிப்படையில் நடத்தப்படும் நாடகங்கள் சோவியத் மக்கள் மத்தியில் மேன்மேலும் அதிக ஆர்வத்தை ஏற்படுத்துகின்றன. இவை மக்களின் வாழ்க்கை, பழக்க வழக்கங்கள், பாரம்பரியங்கள், இந்தியாவின் கடந்த காலம், நிகழ்காலத்தை நன்கு அறிய உதவுகின்றன.

50ஆம் ஆண்டுகளின் நடுப்பகுதியிலிருந்து சோவியத் நாட்டில் இந்தியக் கலாசாரத்துடனான பரவலான அறிமுகம் ஆரம்பமாகிறது. இது முற்றிலும் நியதியானதே. இக்காலத்தில்தான் பொருளாயத மற்றும் ஆன்மீக வாழ்வின் பல்வேறு துறைகளில் சோவியத்-இந்திய உறவுகள், ஒத்துழைப்பின் வளர்ச்சி பெரும் உந்து சக்தியைப் பெறு கிறது. பாக்கூவில் உள்ள அஸீஸ்பெக்கவ் நாடக மன்றமும் மாஸ்கோவில் உள்ள புஷ்கின் நாடக மன்றமும் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் ஷூத்ரக்கா எழுதிய ''மிரிச்சகட்டகம்'' எனும் பிரபல பண்டைய இந்திய படைப்பை நாடகமாக்கியது தற்செயல் அல்ல. அக்காலத்தில் தாஷ்கன்ட்டில் உள்ள ஹம்சா நாடக மன்றத்தில் தாகூரின் ''வீழ்ச்சி'' முக்கிய நாடகமாகத் திகழ்ந்தது. தாஜிகிஸ்தான் நாடக மன்றம் தாகூரின் இன்னொரு படைப்பாகிய ''பலி'' என்னும் நாடகத்தை நடத்தியது.

60—70ஆம் ஆண்டுகளில் சோவியத் இசையமைபபாளர்கள் இந்திய நாடகத்துறையை மேன்மேலும் அணுகினர். இவர்கள் அதை வைத்து பல அற்புதமான பாலே நடனங்களையும் மற்ற இசைப் படைப்புகளையும் உரு வாக்கினர்.

தாகூரின் ''சித்ரா'' எனும் படைப்பை அடிப்படையாகக் கொண்ட பாலே நடனமும் (இதற்கு இசையமைத்தது நியாசி), எம். அஷ்ராபியின் ''காதல் எனும் வித்தை'' என்ற நடனமும் இவற்றிலடங்கும். பிரபல இசையமைப் பாளர் சி. பாலசன்யானால் தோற்றுவிக்கப்பட்ட ''சகுந் தலை'' பாலே நடனம் சோவியத் மக்களிடையே குறிப்பாகப் பிரபலமானது. முதலில் ரீகா ஒப்பேரா, பாலே அரங்கத்தில் தோற்றுவிக்கப்பட்ட இது நாட்டின் பிரபல இசை நாடக

* *Soviet Land*, February 1984, № 4, p. 46.

மன்றங்களில் ஒன்றாகிய மாஸ்கோ ஸ்தனிஸ்லாவ்ஸ்கி மற்றும் நெமிரோவிச்-தான்சென்கோ நாடக மன்றத்தில் இரண்டு முறை புதிதாக மாற்றி அமைக்கப்பட்டது. இந்நாடகத்தை தயாரித்தவர்கள் இந்திய சாஸ்திரிய நாடக பாரம்பரியங்களைக் கவனமாக அணுகி, இவற்றை பாலே நடனத்திற்கே உரித்தான ஒய்யாரம், பாவ நடையுடன் திறமையாக இணைத்துள்ளதால் இது சோவியத் ரசிகப் பெருமக்களின் மத்தியில் நிரந்தரமாகப் பிரபலமாகி யுள்ளது. ''சகுந்தலை'' பாலே நடனம் பிரபலமானதற்கு இதன் தயாரிப்பில் பங்கேற்ற உதய சங்கர், சாந்தி வரதன், மிருனாளினி சாராபாய், பத்மா சுப்ரமணியம் ஆகிய பிரபல இந்தியக் கலைஞர்களுக்கும் இது பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

1981இல் மாஸ்கோ பால்ஷாய் நாடக மன்றத்தில் ''இந்தியக் காவியம்'' எனும் பாலே நடனம் நடந்தது. இதற்கு யூ. முசாயெவ் இசையமைத்தார். இந்திய சாஸ் திரியக் கலையின் அடிப்படையிலான இசைப்படைப்புகள் சோவியத் நாட்டில் மேன்மேலும் பிரபலமானதற்கு இது ஒரு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். இந்தியக் கலாசாரத்தின் வளம் மிகு பாரம்பரியங்கள், உயர்ந்த ஆன்மீக லட்சியங்கள், அன்பு, சமாதானம், நீதி ஆகிய லட்சியங்களின் மீது இந்திய மக்களுக்குள்ள பெரும் பிடிப்பு ஆகியவற்றை ரசிகர்கள் நன்கு புரிந்து கொள்வதற் காக இந்த நடனத்தை உருவாக்கியவர்கள் பெரிதும் பாடுபட்டனர். ''இந்தியா மற்றும் இந்தியர்களின் வர லாற்றை நடனங்களின் மூலம் எடுத்துரைப்பதுதான் இந்த பாலே நடனத்தை உருவாக்கியவர்களின் பிரதான லட்சியமாக இருந்தது''* என்று சோவியத் ஆராய்ச்சியாளர் என். அலீக்கவா கூறுகிறார். இந்திய எதார்த்தங்களை சோவியத் மக்கள் முன் நன்கு வெளிப்படுத்தும் பொருட்டு இந்நடனத்தில் முக்கியப் பாத்திரமேற்று ஆடியவர் பிரபல நாட்டிய மங்கை ருக்மிணி தேவியிடம் பரதநாட்டியம் பயின்றவர்**.

மாஸ்கோவில் உள்ள மத்திய குழந்தைகள் நாடக மன்றத்தில் இருபதாண்டுகளுக்கும் மேலாக ''ராமாயணம்''

---

* *Soviet Land*, Octrober 1983, № 20, p. 43.

** *Ibid.*

நாடகம் நடைபெற்றது. இதனால் பல்லாயிரக்கணக்கான சோவியத் குழந்தைகள் இந்தியக் காவியத்தைப் பற்றித் தெரிந்து கொண்டனர், ஆண்மை, விசுவாசம், நம்பிக் கையின் உருவமாயுள்ள ராமர், சீதை, லட்சுமணன் ஆகியோரை பெரிதும் நேசித்தனர். 1961இல் இந்த நாடகக் குழு இந்தியாவில் பயணம் செய்த போது ஜவகர்லால் நேரு இதைக் கண்டு களித்தார். இந்தியக் கலாசாரத்தின் மீது ஆர்வம் செலுத்துவதற்காகவும் அற்புதமான நடிப்பிற்காகவும் இவர் சோவியத் கலைஞர் களுக்கு ஆழ்ந்த நன்றி தெரிவித்தார்.

பிரபல இந்திய இசைக் கலைஞர்கள், நாட்டியக் கலைஞர்கள் மற்றும் இசை நாடக குழுக்கள் சோவியத் நாட்டிற்கு வருகை தரும் போது இவர்கள் பெரும் அன்பான வரவேற்பைப் பெறுகின்றனர். உலகப் புகழ் பெற்ற ரவி சங்கரின் நிகழ்ச்சிகள் 1985இல் சோவியத் யூனியனில் வெற்றிகரமாக நடைபெற்றன. இவர் பன்முறை சோவியத் நாட்டிற்கு வருகை தந்திருக்கின்றார். சீதாரா தேவி, இந்திராணி ரஹ்மான், வைஜெயந்தி மாலா, ராணி கருணா போன்ற பிரபல இந்திய நாட்டியக் கலைஞர்கள் சோவியத் நாட்டிய ரசிகர்களிடையே பெரிதும் அறிமுகமானவர்கள். இந்திய சாஸ்திரிய நடனத்தின் பல்வேறு பாணிகளைப் பயிலும் பொருட்டு சோவியத் யூனியனில் பல மன்றங்களிலும் கலைக் கூடங்களிலும் அமெச்சூர் குழுக்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. சோவியத் நாட்டின் ஒரு சில இசைக் கல்விக் கூடங்களில், உதாரணமாக மாஸ்கோ கினேசின் இசை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பாடத்திட்டத்தில் இந்திய இசை சேர்க்கப்பட்டுள்ளது.

இந்திய பாலே ரசிகர்களுக்கும் சோவியத் பாலே நடனங்களைக் கண்டு களிக்கும் வாய்ப்பு தொடர்ந்து கிட்டி வருகிறது. உதாரணமாக 1977இலும் 1984இலும் பெரும் இந்திய நகரங்களில் சோவியத் பால்ஷாய் நாடகக் குழு பெரிதும் வெற்றிகரமாகப் பல நிகழ்ச்சிகளை நடத் தியது. சமீப ஆண்டுகளில் கீவ் நகரில் உள்ள த. கி. ஷெவ்ச் சேன்கோ ஒப்பேரா, பாலே நாடகக் குழு, மாஸ்கோ ஸ்தனிஸ்லாவ்ஸ்கி மற்றும் நெமிரோவிச்-தான்சென்கோ நாடகக் குழு, லெனின்கிராத் ''நடன நாடகக்'' குழு முதலியன இந்தியாவிற்கு வருகை தந்தன.

ருஷ்ய மற்றும் சோவியத் நாடகங்களின் மீது இந்திய நாடக ரசிகர்கள் பெரும் ஆர்வம் காட்டுகின்றனர். கோகல், டால்ஸ்டாய், செகவ், கோர்க்கி ஆகியோரின் படைப்புகளை பிரபல இந்திய நாடகக் குழுக்கள் அடிக்கடி நாடகங்களாக்குகின்றன. உதாரணமாக செகவின் நாடகங்கள் பல்வேறு நகரங்களில் ஆங்கிலத்தில் மட்டுமின்றி வங்க மொழியிலும் இந்தி, உருது மொழிகளிலும் மற்ற இந்திய மொழிகளிலும் நடத்தப்படுகின்றன. இவை ''இந்திய மக்கள் நாடக மன்றம்'', ''யாட்ரிக்'', ''ராஷ்டிரிய நாட்டிய வித்யாலயா'' போன்றவற்றில் நடத்தப்படுகின்றன.

செகவின் நாடகங்கள் இந்தியாவில் பெரிதும் பிரபலமாகியுள்ளதைப் பிரபல இந்திய நாடகக் கலைஞர் மனோகர் சிங் பின்வருமாறு விளக்குகிறார்: ''இவரது எழுத்துத் திறமைதான் நுட்பமான உணர்வுள்ளவர்கள் அனைவரையும் கவர்ந்திழுக்கும் அம்சமாகும். இவரது நாடகங்களில் வரும் காட்சிகள் இந்திய யதார்த்தத்தை ஒத்துள்ளதை நன்கு புரிந்து கொள்ள முடிகிறது, இவருடைய பாத்திரங்கள் அன்னியமானவைகளாகவே தெரியவில்லை, இந்த நாடகங்களுக்கே உரித்தான உள் அழகும் நகைச் சுவையும் ஆழமும் சோகமும் சேகவைப் பற்றியும் இவரது படைப்புகளைப் பற்றியும் ஆழ்ந்த மனப்பதிவை ஏற்படுத்துகின்றன''*.

ருஷ்ய, சோவியத், இந்தியக் கலைஞர்களை ''கலாசார தூதுவர்கள்'' என்று நிச்சயமாகக் கூற முடியும். இரண்டு மாபெரும் மக்களினங்களையும் இணைக்கும் ஆன்மீகப் பாலத்தை மேலும் பலப்படுத்த இவர்கள் பெரும் பணியாற்றுகின்றனர்.

இப்பொருளில், இந்தியா மற்றும் சோவியத் யூனியனின் கலாசாரங்களைப் பரஸ்பரம் செழுமைப்படுத்தவும் இரு நாட்டு மக்களின் பரஸ்பர மன ஒற்றுமையை வளர்க்கவும் ரேரிஹ் குடும்பத்தினர் ஆற்றியுள்ள பெரும் பங்கு உண்மையிலேயே மகத்தானது.

இக்குடும்பத்தின் தலைவராகிய நிக்கலாய் ரேரிஹ் மாபெரும் ருஷ்ய ஓவியர், விஞ்ஞானி, எழுத்தாளர். இவர் தன் வாழ்வின் பெரும் பகுதியை இந்தியாவில் கழித்தார். இவருடைய அடையாளச் சிறப்பு மிக்க

* *Soviet Land*, January 1985, № 2, p. 39.

வார்த்தைகளில் சொன்னால் உலகை மாற்றியமைத்து, மக்களை நெருங்கி வரச் செய்யும் ''ஒளிமயமான தூதுவனாகிய'' கலையின் மகத்தான சக்தி மீது இவர் தன்னலமற்ற, ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்தார். ருஷ்ய தேசியக் கலையின் பெரும் ஆதரவாளராயிருந்த இவர் இதைப் பேணிக் காத்து, வளர்ப்பதற்காக நிறைய செய்தார்; இந்த வளர்ச்சி தனியே நடைபெறவில்லை, இது பொது உலக நிகழ்ச்சிப் போக்கின் ஒரு அங்கம் என்று உறுதியாக நம்பினார். ருஷ்யாவிலும் இந்தியாவிலும் தம் பணியில் ஈடுபட்ட ரேரிஹ், ஒவ்வொரு மக்களினத்தின் கலைக்கும் சிறப்பு அம்சங்கள் இருந்தாலும் இதில் மற்ற மக்களினங்களின் கலையுடனான பொது அம்சங்கள் நிறைய உள்ளன என்றும், உண்மையையும் அன்பையும் நோக்கிய இதன் உயர் லட்சியம் தேசிய வேறுபாடுகள், தடைகளுக்கு அப்பாற்பட்டது என்றும் தம் ஆக்கபூர்வமான நடவடிக்கைகளால் மெய்ப்பித்தார்.

இந்த நம்பிக்கைதான் இந்தியக் கலாசாரம் மற்றும் தத்துவஞானத்தின் ஆழத்தினுள் புக நிக்கலாய் ரேரிஹிற்கு உதவியது. இவருடைய சித்திரங்களில் இந்திய நாகரிகம் மற்றும் இந்திய தேசியக் கலையின் சிறப்பு அம்சங்களை இவர் எப்படி வியத்தகு முறையில் புரிந்து கொண்டிருக்கிறார் என்பது வெளிப்படுகிறது. நிக்கலாய் ரேரிஹை நெருக்கமாக அறிந்திருந்த ஜவகர்லால் நேரு இதைத் துல்லியமாகச் சுட்டிக் காட்டினார். நிக்கலாய் ரேரிஹின் படங்கள் ''நம் வரலாறு, நம் சிந்தனை, நம் கலாசார, ஆன்மீகச் செல்வம் ஆகியவற்றிலிருந்து பலவற்றை நமக்கு நினைவுபடுத்துகின்றன'' * என்று நேரு கூறினார்.

ஆம், உண்மையில் ரேரிஹின் படங்களில் ஈடு இணையற்ற இந்திய இயற்கை அழகு, குறிப்பாக இமாலயத்தின் அழகு வெளிப்படுத்தப்பட்டுள்ளதோடு கூட முக்கியமாக இந்தியாவின் சாரம் காட்டப்பட்டுள்ளது.

ரேரிஹின் ஆக்கபூர்வமான பணி ருஷ்ய மற்றும் இந்தியக் கலாசாரங்களுக்கு இடையிலான முக்கிய தொடர்பு அங்கமாக இருந்தது என்பதற்கு ரேரிஹின் சித்திரங்கள்

* வி. சி. கேமெனவ், ''நிக்கலாய் கன்ஸ்தன்தீனவிச் ரேரிஹ்'', நி. க. ரேரிஹ், வாழ்க்கையும் செயலும், மாஸ்கோ, 1978, பக்கம் 20 (ருஷ்ய மொழியில்).

மட்டும் ஒரே உதாரணம் அல்ல. ரேரிஹின் ஆரம்பக் கால கவிதைகளை ஆராய்ந்த சோவியத் ஆராய்ச்சியாளர் எஸ். கார்ப்பவா, இவற்றில் ரவீந்தரநாத் தாகூரின் கவிதை நடையை ஒத்த பாணியின் அம்சங்கள் காணப் படுவதாகக் கூறுகிறார். ''ரேரிஹ் மற்றும் தாகூரின் வருணிப்பு முறைகளிலும் உலகக் கண்ணோட்டங்களிலும் பல பொது அம்சங்கள் உள்ளன. ருஷ்யா மற்றும் இந்தியா வின் வரலாற்று வளர்ச்சிகளில் வெவ்வேறு சிறப்பு அம்சங் கள் இருந்த போதிலும், ரேரிஹும் தாகூரும் ஒன்றிற் கொன்று நெருக்கமான இலக்கியப் படைப்புகளைத் தோற்றுவிக்க இவை இடையூறாக இருக்கவில்லை''* என்று கார்ப்பவா கோடிட்டுக் காட்டுகிறார்.

இந்திய தேசிய சாரத்தின் பல்வேறு வெளிப்பாடுகளின் மீது நிக்கலாய் ரேரிஹ் கொண்டிருந்த உண்மையான ஆர்வமும், இவற்றை இவர் நுட்பமாக அணுகியதும் இந்திய வரலாறு, கலாசாரம், தத்துவஞானம் சம்பந்தமாக பல மதிப்பு மிக்க ஆராய்ச்சிப் படைப்புகளை எழுத உதவின. **நீதிநெறி மற்றும் அழகியல் சம்பந்தமான இந்தியக் கண்ணோட்டம்** என்ற பிரபல கட்டுரை, ராமகிருஷ்ணர், விவேகானந்தர், ரவீந்தரநாத் தாகூர், மகாத்மா காந்தி, ஜவகர்லால் நேரு ஆகியவர்களைப் பற்றிய கட்டுரைகள் முதலியன இவற்றில் அடங்கும்.

உலகக் கலாசார நினைவுச் சின்னங்களைப் பேணிக் காக்க வேண்டுமென்று குரல் எழுப்பிய மாபெரும் முனைப் பார்வலர் என்ற வகையிலும் சோவியத் மக்களும் இந்திய மக்களும் நிக்கலாய் ரேரிஹ் மீது பேரன்பு செலுத்து கின்றனர். 1929இல், ஆயுத மோதல்களின் போது மக்களின் கலாசார சொத்தைப் பேணிக் காக்கும் பிரச்சினையை இவர் உலக மக்கள் முன் திட்டவட்டமாக வைத்தார். இந்நோக்கத்தோடு இவர் உருவாக்கிய சர்வதேச சட்ட வரையளவுகளின் தொகுப்பு உலகம் முழுவதும் ரேரிஹ் உடன்பாடு என்றழைக்கப்படுகிறது. அச்சமயம் தலை தூக்கிய ஜெர்மானியப் பாசிசமும், பின்னர் ''மேலைய ஜனநாயகங்களின்'' ஆதரவோடு இது கட்டவிழ்த்து விட்ட இரண்டாவது உலக யுத்தமும் இந்த உடன்பாட்டின்

---

* *Soviet Land*, August 1985, № 15, p. 15.

நிறைவேற்றத்திற்கு இடையூறு விளைவித்தன என்றாலும், யுத்தத்திற்குப் பிந்தைய காலகட்டத்தில் இந்த உடன் பாட்டின் அடிப்படையிலுள்ள கருத்துகள் மேற்கொண்டு வளர்க்கப்பட்டன. யுத்தம் முடிந்ததும் இவர் இந்த உடன்பாடு சம்பந்தமான தன் பணியைத் தொடர்ந்தார்; ''வரலாற்றின் சோகமயமான படிப்பினை வீணாகிப் போகாமலிருக்க இன்னமும் புகைந்து கொண்டிருக்கும் இடிபாடுகளின் மீது பரவலான மக்களின் கவனத்தைத் திருப்புமாறு''* உலக மக்களுக்கு அறைகூவல் விடுத்தார்.

சோவியத் யூனியன், இந்தியாவில் உள்ள கலைஞர்களும் சமூக ஸ்தாபனங்களும் உடனடியாக இந்த மாபெரும் மனிதாபிமானியின் முயற்சிகளுக்கு முழுமையாக ஆதர வளித்தனர். பிரபல சோவியத் சிற்பி செர்கேய் கனேன்கவ் கலாசார நினைவுச் சின்னங்களைப் பாதுகாக்கும் நி. ரேரிஹின் நடவடிக்கையை உயர்வாக மதிப்பிட்டு பின்வருமாறு எழுதினார்: ''கலாசாரப் பாதுகாப்பு, தாயகப் பாதுகாப்பு, மனித மேன்மையின் பாதுகாப்பு ஆகியவை வலுக்கட்டாய ஆக்கிரமிப்பை பற்றி எண்ணுவதே யில்லை... 'மீர்' எனும் ருஷ்யச் சொல் ஒரே நேரத்தில் சமாதானத்தையும் உலகையும் குறிப்பது வியப்பல்லவோ. ஏதோ மொழியின் ஏழ்மை இதற்குக் காரணமல்ல. ருஷ்ய மொழி வளம் மிக்கது. சாராம்சத்தில்தான் இப்பொருட்கள் நெருக்கமானவை. உலகமும் சமாதானமான படைப்பாற்ற லும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க இயலாதவை''**. 1946இல் அகில இந்திய கலாசார ஒற்றுமை மகாநாடு ரேரிஹ் உடன்பாட்டிற்கு ஆதரவு தெரிவித்தது. இந்தியா சுதந்திரமடைந்த பின் ஜவகர்லால் நேருவின் தலைமை யிலான இந்திய அரசாங்கம் இவ்வுடன்பாட்டை ஆமோதித் தது. நி. ரேரிஹின் லட்சியங்களை நிறைவேற்றுவதற்காக உலக மக்களின் ஆதரவைத் திரட்டுவதில் சோவியத் யூனியனும் இந்தியாவும் பெரும் பங்காற்றின. 1954இல் ஏற்கப்பட்ட ''ஆயுத மோதல்கள் நடைபெற்றால் கலாசார

---

* பி. எஃப். பேலிக்கவ், ''கலாசார நினைவுச் சின்னங்களைப் பாது காப்பது சம்பந்தமான ரேரிஹ் உடன்பாடு'', நி. க. ரேரிஹ், 'வாழ்க்கையும் செயலும், மாஸ்கோ, 1978, பக்கம் 190 (ருஷ்ய மொழியில்).

** அதே நூல், பக்கம் 191.

செல்வங்களைப் பாதுகாப்பது பற்றிய ஹேக் உடன் படிக்கையில்'' இந்தக் கருத்துகள் அடங்கியிருந்தன.

ரேரிஹ் குடும்பத்தினர் கீழைய நாடுகளின் மீது, இந்தியாவின் மீது கொண்டிருந்த ஆழ்ந்த அக்கறை நிக்கலாய் ரேரிஹின் மகனாகிய யூரி ரேரிஹ் தன் வாழ்க் கைப் பாதையைத் தேர்ந்தெடுப்பதன் மீது செல்வாக்கு செலுத்தியது. இவர் பின்னால் மாபெரும் கீழைய நாடுகளைப் பற்றிய ஆராய்ச்சியாளரானார். இவர் இந்தியா, மற்ற ஆசிய நாடுகளின் கலாசாரங்களை ஆழப் பயின்றார். யூரி ரேரிஹ் இந்தியிலும் மங்கோலிய மொழியிலும் சரளமாகப் பேசினார், சமஸ்கிருதத்திலும் பாலி மொழி யிலும் புலமை பெற்றிருந்தார், சீன மற்றும் பாரசீக மொழிகளை ஓரளவு அறிந்திருந்தார், திபெத்திய மொழியின் ஒரு சில பேச்சு வழக்குகளில் திறமை பெற்றிருந்தார்.

திபெத்தியல் பற்றிய படைப்புகள் யூ. ரேரிஹிற்கு உலகப் புகழைத் தேடித் தந்தன. 15ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட திபெத்திய வரலாற்றைப் பற்றிய அடிப்படை படைப்புகளில் ஒன்றை மொழி பெயர்த்து, கருத்துரையுடன் **நீல வரலாற்றுப் பதிவேடுகள்** எனும் பெயரில் வெளிவந்த நூல் குறிப்பிடத்தக்கது. 7—9ஆம் நூற்றாண்டுகளில் திபெத் திய வரலாற்றிலிருந்த பல சிக்கலான பிரச்சினைகளை யூ. ரேரிஹ்தான் முதன்முதலாகத் தெளிவுபடுத்தினார்.

இவர் இந்தியாவிற்கும் ருஷ்யாவிற்கும் இடையிலான கலாசாரத் தொடர்புகளின் ஆராய்ச்சி மீது பெரும் கவனம் செலுத்தினார். தன் வாழ் நாள் முழுவதும் அவர் இதில் ஈடுபட்டிருந்தார். 1945இல் இவர் **ருஷ்யாவில் இந்தியவியல்** எனும் தன் பிரபல படைப்பை வெளியிட்டார். இதில் இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சித் துறையில் ருஷ்ய விஞ்ஞான சிந்தனையின் வளர்ச்சியின் வரலாறு தரப்பட்டுள்ளது. சுமார் 30 ஆண்டுகள் இந்தியாவில் வாழ்ந்த யூரி ரேரிஹ் வி. அலெக்சேயெவ், பி. விளதீமிர்த்சவ், எஃப். ஷெர்பத்ஸ்கோய், வி. கோலுபெவ், கி. வெர்னாத்ஸ்கி போன்ற பெரும் சோவியத் கிழக்கத்திய ஆராய்ச்சியாளர் களுடன் நெருங்கிய விஞ்ஞானத் தொடர்பு வைத்திருந்தார். இவர் சோவியத் யூனியனின் மீது பேரார்வம் காட்டினார், புதிய வாழ்வின் கட்டுமானத்தில் சோவியத் மக்களின் வெற்றிகளை ஆர்வத்தோடு கவனித்து வந்தார். சோவியத்

யூனியனின் மீது நாஜி ஜெர்மனி தாக்குதல் தொடுத்த போது பெரிதும் துடிதுடித்தார், ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிரான தாய்நாட்டவரின் போராட்டத்திற்கு உதவ மனதார பாடுபட்டார். செஞ்சேனையில் சேர தனக்கு விருப்பமுள்ளதாயும் இவ்வாறு சேர்த்துக் கொள்ளுமாறும் கோரி **1941** கோடையில் பிரிட்டனிலிருந்த சோவியத் தூதுவருக்கு தந்தி அனுப்பினார்.

தன் கடைசி இரண்டரை ஆண்டுகளை யூ. ரேரிஹ் தன் தாயகமாகிய சோவியத் நாட்டில் கழித்தார். சோவியத் விஞ்ஞானப் பேரவையைச் சேர்ந்த கீழைய நாடுகளின் ஆராய்ச்சிக் கல்லூரியில் பணி புரிந்த இவர் சோவியத் கீழைய ஆராய்ச்சியை வளர்ப்பதில், குறிப்பாக திபெத்திய இயலையும் தொன்மை இந்திய நாகரிகம் பற்றிய ஆராய்ச்சி களையும் வளர்ப்பதில் பெரும் பங்காற்றினார். முதன்முதலாக சோவியத் நாட்டில் இவர் வேத மொழியை போதிக்கத் துவங்கினார். இவருடைய பதிப்புரையோடு, இவரது தீவிர பங்கேற்போடு புத்தர் கூறியதாகச் சொல்லப்படும் செறிமொழிகளின் தொகுப்பு நூலாகிய **தம்மபத** வெளியிடப் பட்டது. இதில் ஆரம்பக்கால பௌத்தத்தின் அடிப்படை தார்மீக-நீதிநெறிக் கோட்பாடுகள் திரட்டு வடிவத்தில் தரப்பட்டுள்ளன. யூரி ரேரிஹ் தன் ஆக்கபூர்வமான பன்முக நடவடிக்கையின் மூலம் பல்வேறு நாடுகளின், முக்கியமாக சோவியத் யூனியன், இந்தியாவின் விஞ்ஞானி களிடையே ஒத்துழைப்பு பலம் பெறவும், கிழக்கத்திய கலாசாரம் பற்றிய விவரங்கள் பரவவும் பெரிதும் உதவினார். மக்களை நெருங்கி வரச் செய்யவும், சர்வதேசப் பரஸ்பர மன ஒற்றுமை மற்றும் நம்பிக்கையை உறுதிப்படுத்தவும் இது முக்கிய வழிகளில் ஒன்று எனக் கருதினார். மாஸ் கோவில் நடைபெற்ற கிழக்கத்திய ஆராய்ச்சியாளர்களின் 25வது சர்வதேசக் காங்கிரசிற்காக யூரி ரேரிஹ் பின்வருமாறு எழுதினார்: "புதிய வாழ்வைத் துவக்கியுள்ள ஆசிய மக்கள் தம் கலாசார செல்வங்களைக் கவனமாகப் பேணிக் காக்கின்றனர், புதிய சாதனைகளுக்கான ஊக்கத்தை இவற்றிலிருந்து பெறுகின்றனர். இதற்கு சகல விதங்களிலும் உதவுவதுதான் நம் கடமையாகும். இப்படிப்பட்ட உதவி சமாதானத்தைப் பலப்படுத்தும், விஞ்ஞானத்திற்கும் எல்லா நாடுகளின் விஞ்ஞானிகளுக்கிடையே சமாதான ஒத்துழைப்

பிற்கும் துணை புரியும்'' * .

நிக்கலாய் ரேரிஹின் இரண்டாவது மகனாகிய ஸ்வித் தஸ்லாவ் ரேரிஹ் ருஷ்ய, இந்திய கலாசாரங்களின் அற்புதமான பரஸ்பர செல்வாக்கின் அறிகுறியாகத் திகழ்ந்தார். இந்த மாபெரும் ஓவியர் 50 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவில் வாழ்கிறார், இதைப் பன்முக நோக்கில் ஆழப் பயின்று வருகிறார். இவர் தன் ஈடு இணையற்ற ஓவியங்களில் இந்தியக் கலாசாரத்திற்கே உரித்தான ''வேற்றுமையின் ஒற்றுமையை'' சித்தரிக்க முயலுகிறார். பல்வேறு விதமான ஓவியக் கலைத் துறைகளில் சிறப்புற பணி புரியும் இவர் இந்திய யதார்த்தத்தின் சிறப்பியல்புகளை அழகுபட எடுத்துக் காட்டவும் இந்தியாவின் பரந்த, அற்புதமான இயற்கையழகை வெளிப்படுத்தவும் முயலுகிறார். ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் படைப்புகள் முழுவதிலும் இந்தியாவின் கலாசார வரலாற்று வளர்ச்சியில் தலைமுறைகளின் தொடர்ச்சி பற்றிய கருத்து தெட்டத் தெளிவாகத் தென்படுகிறது.

''இந்திய கலாசாரப் பாரம்பரியத்தைப் பயிலும் நிகழ்ச்சிப் போக்கு முடிவற்றது... ஆனால் இந்தியக் கலை முழுவதையும் ஒன்றாக, ஒரே பொதுவானதாக இணைக்கும் ஒரு பொது அம்சம் உள்ளது. இந்தியாவின் ஒரே முகத்தை வெளிப்படுத்தும் இது சிந்தனையின் ஒற்றுமையாகும்... மாறிய கலைஞர்களின் தலைமுறைகளின் பணியில் முழு தொடர்ச்சி உள்ளது, எவ்விதத் தற்செயலும் கிடையாது, பல நூற்றாண்டுகளாக சிந்தனையின் முழு தொடர்ச்சி நிலவி வருகிறது'' * * என்று 1960இல் சோவியத் யூனியனுக்கு வருகை தந்த போது ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் கூறினார்.

இந்திய மக்களின் அசாதாரண ஜீவாதார பலம், கடந்த கால செல்வத்தின் மீதான அக்கறை, இவர்களின் தத்துவஞான அறிவு ஆகியவற்றைக் கண்டு ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் வியந்தார். ''கலையின் மூலமாக மட்டுமின்றி, வாழ்க்கையின் மூலம், முற்றிலும் அசாதாரணமான புலப்பாடாக விளங்கிய இந்திய சிந்தனையின் மூலம் நான் இந்தியாவை அணுகினேன். இது பல நூற்றாண்டு

---

* எஸ். இ. தியுல்யாயெவ், ''ஸ்வித்தஸ்லாவ் நிக்கலாயெவிச் ரேரிஹ்'', நி. க. ரேரிஹ், வாழ்க்கையும் செயலும், மாஸ்கோ, 1978, பக்கம் 240.

* * அதே நூல்.

களாக, பல ஆயிரமாண்டுகளாக உருவானது. அங்கே அற்புதமான தத்துவஞான முறைகள் உள்ளன. இவற்றை இந்திய வாழ்வின் உண்மையான திறவுகோல்களாக நான் கருதுகிறேன். இவையெல்லாம் கலை முழுவதும் ஊடுருவியுள்ள தொன்மைக் கலாசாரத்தைப் பற்றிக் கூறுகின்றன. இது முற்றிலும் உயர்ந்த கலாசாரமாகும், இது தான் இந்தியாவை ஒரு மாபெரும் நாடாக்குகிறது'' * என்று 1960இல் மாஸ்கோவில் பேசுங்காலை ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் கூறினார்.

தன் படைப்பாற்றலின் அடிப்படைகளைச் சுட்டிக் காட்டிய போது ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ், ருஷ்ய யதார்த்த வாதம், மொத்தமாக ருஷ்ய கலை தனக்கு எவ்வளவு பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியதென பன்முறை குறிப்பிட்டார். இந்தியாவின் ''சாரத்தை'', திறமை மிகு இந்திய மக்களின் வாழ்வை ஆழப் புரிந்து தன் ஓவியங்களில் வெளிப்படுத்த இது சந்தேகத்திற்கிடமின்றி இவருக்கு உதவியது, இப்போதும் உதவி வருகிறது. ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் மற்றும் இவரது தந்தை, சகோதரரின் படைப்பாற்றலில் இந்த சிறப்பு அம்சத்தை சோவியத் யூனியனின் மக்கள் கலைஞர் ஏ. அ. பிலஷோவா சரிவர சுட்டிக்காட்டினார். 1960 மேயில் ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் ஓவியக் கண்காட்சியை மாஸ்கோவில் திறந்து வைத்த போது இவர் பின்வருமாறு கூறினார்: ''ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் ருஷ்ய மனதிற்கே உரித்தான ஆழத்துடன், இந்த மாபெரும் நாட்டு மக்களின் வாழ்வை இவ்வளவு சிறப்பாகப் புரிந்து, இவர்களின் ஆன்மீக அம்சங்களையும் கலாசாரத்தையும் ஈடு இணையற்ற இந்திய இயற்கைச் சூழலையும் தன் படைப்புகளில் இவர் வெளிப்படுத்தியுள்ளது குறித்து நாம் பெருமைப் படுகிறோம்'' * *.

ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் படைப்பு முழுவதும் இந்திய, ருஷ்ய கலாசாரங்களை இணைக்கும் ஆன்மீகத் தொடர்புகளையும், மனிதாபிமானம், அன்பு மற்றும் நீதி எனும் லட்சியங்களின் பால் இரு நாடுகளின் மக்களுக்கும் உள்ள

---

* அதே நூல்.

** அதே நூல், பக்கம் 246.

நாட்டத்தையும் பிரதிபலிக்கிறது. ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் திறமையில் வெளிப்பட்ட இந்த அம்சங்களைத் தான் கிருஷ்ண மேனன் சுட்டிக்காட்டினார். சோவியத் யூனியனில் இந்தியத் தூதுவராக இருந்த கிருஷ்ண மேனன் இவருடைய ஓவியக் கண்காட்சியைத் திறந்து வைத்த போது உரையாற்றி னார்: ''கலை என்பது தேசிய எல்லைகளுக்கு மேலாக உயர்வதை ரேரிஹின் ஓவியங்கள் ஆணித்தரமாக மெய்ப்பிக் கின்றன. ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் கலையில் இந்தியா, ருஷ்யா எனும் இரு உலகங்கள் காணப்படுகின்றன. இதில் வியப்பேதுமில்லை, ஏனெனில் இவரே இந்த இரண்டு உலகங்களுக்கும் சொந்தமானவர். பிறப்பால் இவர் ருஷ்யர், வளர்ப்பால் இந்தியர். இந்த இரண்டு அம்சங்களும் ருஷ்யாவையும் இந்தியாவையும் ஊக்கு விக்கும் லட்சியங்களும் அழகாக, சீரிசைவாக இணைந் துள்ளன. இந்தியா மற்றும் ருஷ்யாவின் சாதனை களில் பல பொது அம்சங்கள் உள்ளன என்ற என் நீண்ட கால நம்பிக்கையை இது மெய்ப்பிக்கிறது''*.

பல சோவியத் நகரங்களில் பன்முறை நடந்த ஸ்வித்தஸ் லாவ் ரேரிஹ் மற்றும் நிக்கலாய் ரேரிஹின் ஓவியக் கண்காட்சிகள் எப்போதுமே சோவியத் யூனியனின் கலாசார வாழ்வில் முக்கியச் சம்பவங்களாகத் திகழ்ந்தன. லெனின்கிராதில் உள்ள ஹெர்மிடேஜ் கலைக் கூடம், மாஸ்கோவில் உள்ள திரியத்திக்கோவ் ஓவியக் கூடம், கிழக்கத்திய கலாசார கலைக் கூடம், நவசிபீர்ஸ்க் ஓவியக் காட்சிக் கூடம் போன்ற நாட்டின் தலைசிறந்த கலைக் கூடங்களில் இவர்களின் ஓவியங்கள் இருப்பது பற்றி இவை பெருமை கொள்கின்றன. இவற்றைச் சுற்றி எப்போதுமே மக்கள் கூட்டம் நிறைய இருக்கும். பல்வேறு வயதுப் பிரிவினரும் வேலைப் பிரிவினரும் ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹ் மற்றும் இவரது தந்தையின் படைப்புகளை நெருக்கமாக அறிந்துணரவும் இவற்றின் மூலம் இந்தியாவின் கலாசாரத் தையும் வாழ்க்கையையும் அறியவும் விழைகின்றனர்.

இந்திய, சோவியத் மக்களிடையேயான பரஸ்பர மன ஒற்றுமையையும் நட்புறவையும் வளர்த்து வலுப்படுத்துவதில் ஆற்றும் பெரும் பங்கிற்காக ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹிற்கு

---

* K. P. S. Menon, *A Diplomat Speaks*, New Delhi, 1974, p. 75.

1985இல் மக்களிடையேயான நட்புறவிற்கான சோவியத் விருது வழங்கப்பட்டது. இவர் சோவியத் கலைப் பேரவையின் கௌரவ உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

ஸ்வித்தஸ்லாவ் ரேரிஹின் படைப்புகள் இந்தியாவிலும் பிரபலமானவை. இந்திய அரசாங்கம் இவருக்கு பத்ம பூஷன் விருதளித்து கௌரவித்தது. ஜவகர்லால் நேரு மறைந்த பின் இவர் வரைந்த நேருவின் படம் இந்திய நாடாளுமன்றம் கூடும் அறையில் மாட்டப்பட்டுள்ளது இவருக்குப் பெரும் பெருமையைத் தருகிறது.

இந்தியா சுதந்திரமடைந்த பின், இந்திய யதார்த்தத்தை அறியும் நாட்டமும் இந்திய மக்களின் வாழ்வின் மீதான ஆழ்ந்த அக்கறையும் புகழ்பெற்ற பல சோவியத் ஓவியர்களின் படைப்புகளுக்கும் உரித்தானவை. சோவியத் யூனியனின் மக்கள் கலைஞர்களாகிய சுய்கோவ் மற்றும் நளபந்தியானின் படைப்புகளில் இந்திய காட்சிகள் முக்கிய இடம் வகிக்கின்றன. சாதாரண இந்திய மக்கள் இவர்களுடைய பல படங்களின் மையத்தில் உள்ளனர். விவசாயிகள், சிறு தொழில் புரிவோர், சாதாரண ஊழியர்கள் ஆகியோரின் வாழ்க்கை மீது இவர்களின் பார்வை சென்றுள்ளது. சுய்கோவும் நளபந்தியானும் தம் படைப்புகளில் வெளிப்படுத்தியுள்ள பன்முக இந்திய இயற்கையழகின் அற்புதமான காட்சிகளுக்கு எவ்விதத்திலும் குறையாத வகையில் இவர்கள் அன்றாட இந்திய நகர, கிராம வாழ்க்கையைப் பற்றி அழகுபடத் தீட்டியுள்ள ஓவியங்கள் பெரும் மனப் பதிவை ஏற்படுத்துகின்றன.

ஓவியக் கண்காட்சிகளின் பரிமாற்றமும், சோவியத் மற்றும் இந்தியக் கலைப் பொருட்களின் பரிமாற்றமும் இரு நாடுகளுக்கும் இடையிலுள்ள கலாசாரத் தொடர்புகளை வளர்ப்பதில் மேன்மேலும் பரவி வருகின்றன. இந்திய ஓவிய ரசிகர்களுக்கு அரசு ஹெர்மிட்டேஜ் கலைக் கூடம், லெனின்கிராத் ருஷ்ய கண்காட்சிக் கூடம், மாஸ்கோவிலுள்ள புஷ்கின் நுண்கலை காட்சிக் கூடம், திரியத்திக்கோவ் ஓவியக் கூடம் ஆகியவற்றின் தலைசிறந்த படைப்புகளைக் கண்டுகளிக்கும் வாய்ப்பு கிட்டியது. சோவியத் மக்கள் சாஸ்திரிய மற்றும் நவீன இந்திய ஓவியங்களையும் இந்தியக் கைவினைஞர்களின் அற்புதமான படைப்புகளையும் (குறிப்பாக தந்த, தாமிர வேலைப்பாடுகளை)

கண்டுகளித்தனர். இத்தகைய கண்காட்சிகள் மாஸ்கோ விலும் மற்ற சோவியத் நகரங்களிலும் நடத்தப்படுகின்றன. உதாரணமாக 1984இல் லெனின்கிராத் அரசு ஹெர்மிட் டேஜ் மற்றும் டில்லி தேசிய கலைக்கூடங்களில் உள்ள 16—19ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஒப்பனை-பயன் முறைக் கலை படைப்புகளின் கண்காட்சிகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. மாஸ்கோவிலுள்ள கிழக்கத்திய கலாசார கலைக் கூடத்தில் உள்ள இந்தியக் கலைப் படைப்புகளின் நிரந்தரக் கண்காட்சி அன்றாடம் நூற்றுக் கணக்கானோ ரைக் கவருகிறது.

டில்லியில் நடைபெறும் சர்வதேச நுண்கலை கண்காட்சி யில் சோவியத் யூனியன் வழக்கமாக கலந்து கொள்ளும். 1982இல் சோவியத் ஓவியர் ஒருவருக்கு பிரதானப் பரிசு வழங்கப்பட்டது.

சோவியத் யூனியனில் ஏராளமான இந்திய நூல்கள் மொழிபெயர்த்து வெளியிடப்படுகின்றன. இந்தியாவின் மீது சோவியத் மக்கள் காட்டும் பேரார்வத்திற்கு இது தக்கதொரு சான்றாகும். பல்வேறு சோவியத் மொழிகளில் இந்நூல்கள் 40 மில்லியனுக்கும் மேற்பட்ட பிரதிகளில் அச்சாகியுள்ளன. நூற்றுக் கணக்கான நூல்கள் இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பத்தாண்டுகளுக்கு முன், ஆண்டுதோறும் 12—14 புதிய இந்திய நூல்கள் வெளிவந்தன என்றால், இன்று இவற்றின் எண்ணிக்கை 30க்கும் அதிகமாகும். இவை உடனுக்குடன் வாங்கப்படுகின்றன. இந்திய தேசிய விடுதலை இயக்கத் தலைவர்களின் நூல் களையும் சுதந்திர இந்தியாவின் அரசு, அரசியல் தலைவர் களின் படைப்புகளையும் சோவியத் வாசகர்கள் விரும்பிப் படிக்கின்றனர். மகாத்மா காந்தியின் *My Experiments in Truth* மூன்று முறை ருஷ்ய மொழியில் வெளி வந்தது. பல சோவியத் மக்களுக்கு இந்தியாவுடனான அறிமுகம் ஜவகர்லால் நேருவின் **இந்திய தரிசனம்** மற்றும் **சுயசரிதையிலிருந்து** துவங்கியது. இவை 1950ஆம் ஆண்டுகளின் நடுவிலேயே ருஷ்ய மொழியில் வெளிவந்தன. ஜவகர்லால் நேருவின் பிரபல படைப்பாகிய **உலக சரித்திரம்** 1975இல் மூன்று தொகுதிகளில் வெளிவந்தது. இப்பதிப்பிற்காக சோவியத் வாசகர்களுக்காக எழுதிய விசேஷ முன்னுரையில் இந்திரா காந்தி பின்வருமாறு குறிப்பிட்டார்: ''நவீன

இந்திய சிந்தனையின் இந்த மூலச் சிறப்புள்ள படைப்பு ருஷ்ய மொழியில் வெளிவருவதை நான் வரவேற்கிறேன். விஞ்ஞானத் துறையில் இந்திய-சோவியத் ஒத்துழைப்பிற்கு இது தலைசிறந்த எடுத்துக்காட்டாகும்'' *.

நாட்டு வளர்ச்சியின் சிக்கலான, பொறுப்பு மிக்க கட்டத்தில் பிரதமர் பதவி வகித்த இந்திரா காந்தி இந்தியாவின் வெளிநாட்டு கொள்கை மற்றும் சோவியத்-இந்திய உறவுகள் சம்பந்தமாக ஆற்றிய உரைகள் அடங்கிய தொகுப்பு நூலை ருஷ்ய மொழியில் படிக்கும் வாய்ப்பு லட்சோப லட்சம் சோவியத் மக்களுக்கு கிட்டியது.

சாஸ்திரிய மற்றும் நவீன இந்திய கவிதைகள், உரை நடைகளின் மொழிபெயர்ப்புகள் சோவியத் மக்களிடையே மேன்மேலும் பிரபலமாகி வருகின்றன. உதாரணமாக ரவீந்தரநாத் தாகூரின் படைப்புகள் சோவியத் யூனியனின் 15 குடியரசுகளின் மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சமீபத்தில் இவரது படைப்புகள் 4 தொகுதிகளில் 3,00,000 பிரதிகளில் வெளியிடப்பட்டன. பிரேம் சந், முகமது இக்பால், வள்ளத்தோல், அலி சர்தார் ஜாப்ரி, முல்க் ராஜ் ஆனந், கிருஷ்ணன் சந்தர், கே. ஏ. அப்பாஸ், அமிரித பிரிதம் ஆகியோரின் படைப்புகள் சோவியத் ரசிகர்களிடையே பெரிதும் பிரபலமானவை. சோவியத் பேரவை விஞ்ஞானி பி. எல். ஸ்மிர்னோவ் சமஸ்கிருதத்திலிருந்து ருஷ்ய மொழியில் மொழிபெயர்த்துள்ள **மகா பாரதத்தை** சோவியத் யூனியனில் உள்ள இந்திய காவிய ரசிகர்கள் படித்து மகிழலாம். பிரபல ஜார்ஜியக் கவிஞரும் ஜவகர்லால் நேரு விருது பெற்றவருமான இராக்ளி அபஷீத்சேவின் கூற்றுப்படி **ராமயணத்தின்** ஜார்ஜிய மொழிபெயர்ப்பை வைத்திராத ஒரு குடும்பத்தைக் கூட ஜார்ஜியாவில் காண முடியாது. இந்த மாபெரும் இந்தியக் காப்பியத்தின் அடிப்படையிலான வானொலி ஒலிபரப்பு ஜார்ஜியாவில் 27 ஆண்டுகளாக நடப்பது குறிப்பிடத்தக்கது.

பண்டைய தமிழ் இலக்கியப் படைப்புகள் ருஷ்ய மொழியில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டதானது பல்தேசிய

---

* ஜவகர்லால் நேரு, உலக சரித்திரம், மாஸ்கோ, 1975, தொகுதி 1, பக்கம் 31 (ருஷ்ய மொழியில்).

இந்திய இலக்கியம் பற்றிய சோவியத் வாசகர்களின் கண்ணோட்டத்தை விரிவுபடுத்தியது. 1974இல் முதன்முதலாக **திருக்குறள்** மொழிபெயர்க்கப்பட்டது. சோவியத் யூனியனில் வெளிவந்த **உலக இலக்கியம்** தொடரின் ஒரு தொகுதியில் 1977இல் பல பண்டைய தமிழ் இலக்கியப் படைப்புகள் இடம் பெற்றன. 1980இல் சோவியத் கவிஞர் அனதோலி நாய்மானின் மொழிபெயர்ப்பில் **ஓலைப் பாடங்கள்** எனும் தமிழ் நூல் வெளிவந்தது. 1982இல் பண்டைய தமிழ்க் கவிஞர்களின் கவிதைகள் தொகுப்பு **முல்லைப் பாட்டு** என்ற பெயரில் வெளிவந்தது. நவீன தமிழ் எழுத்தாளர் களின் படைப்புகளும் சோவியத் வாசகர்கள் முன் உள்ளன. புதுமைப்பித்தன், கல்கி, ரகுநாதன், அழகிரிசாமி, மு. வரதரா சனார், ஜெயகாந்தன், அகிலன், கி. வா. ஜெகந்நாதன், அசோகமித்ரன், இந்திரா பார்த்தசாரதி, ஆதவன் ஆகியோரின் படைப்புகள் ருஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

பண்டைய மற்றும் நவீன இந்திய இலக்கியப் படைப்புகள் மட்டும் சோவியத் புத்தகச் சந்தையில் விரும்பி வாங்கப் படுவதில்லை. இந்திய விஞ்ஞான-தொழில்நுட்ப சாதனை கள, 21ஆம் நூற்றாண்டின் இந்தியாவைக் கட்ட உதவும் விஞ்ஞானிகள், ஆராய்ச்சியாளர்களின் படைப்புகள் மீதும் சோவியத் நாட்டில் பலர் அக்கறை காட்டுகின்றனர். பௌதீகம், கணிதம், புவியியல், பூகோளம், எரிசக்தித் துறை, நுகர்வுப் பொருள் துறை, வேளாண்மைத் துறை சம்பந்தமான இந்திய விஞ்ஞானிகள், நிபுணர்களின் படைப்புகள் 1984இல் ருஷ்ய மொழியில் மொழிபெயர்க்கப் பட்டன.

ஆங்கில மொழியிலும் இந்திய மொழிகளிலும் இந்திய வாசகர்களுக்காக வெளிவரும் நூல்களின் எண்ணிக்கையும் பெருகி வருகிறது. புஷ்கின், கோகல், தஸ்தயேவ்ஸ்கி, லேவ் டால்ஸ்டாய், கோர்க்கி, மயக்கோவ்ஸ்கி, நவீன சோவியத் ஆசிரியர்களின் படைப்புகள் பல இந்தியர்களுக்கு அறிமுகமானவை. அடிப்படை விஞ்ஞானங்கள் மற்றும் பயன்முறை விஞ்ஞானங்கள் சம்பந்தமான சோவியத் விஞ்ஞான, தொழில்நுட்ப படைப்புகள் இந்தியாவில் மேன்மேலும் பிரபலமடைந்து வருகின்றன. மாபெரும் சோவியத் படைத்தளபதிகளின் நினைவுக் குறிப்புகள்

மீதான ஆர்வம் கூடியுள்ளது; பிரபல சோவியத் படைத் தளபதி கி. கா. ஜூக்கவ் எழுதிய ''நினைவுகளும் சிந்தனை களும்'' எனும் படைப்பின் ஆங்கில மொழிபெயர்ப்பு இந்திய வாசகர்களிடையே பிரபலமாகியுள்ளது.

தென்னிந்தியாவிலும் சோவியத் நூல்கள் மேன்மேலும் பிரபலமாகி வருகின்றன. 1958இல்தான் சோவியத் நூல் தமிழில் முதன் முதலாக வெளிவந்தது. இது குழந்தைகளுக் கான நூலாக இருந்தது. இன்று பிரபல ருஷ்ய இலக்கியம் முதல் கணிதத்தின் அடிப்படை பிரச்சினைகள் சம்பந்தமான விஞ்ஞானப் படைப்புகள் வரை பல்வேறு நூல்கள் வெளிவருகின்றன.

இந்திய உயர்கல்விக் கூடங்களுக்கு பாட நூல்களைத் தேர்ந்தெடுப்பதற்காக 1965இல் தோற்றுவிக்கப்பட்ட இந்திய-சோவியத் கமிஷன் பெரும் பணியாற்றி வருகிறது. இக்கமிஷனனின் பங்கேற்போடு இந்திய உயர் கல்விக் கூடங்களுக்காக சுமார் 500 சோவியத் பாட நூல்களும் துணை நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன. சோவியத், இந்திய மாணவர்களுக்காக கூட்டுப் பாட நூல்களை தயாரிப்பது பற்றி உடன்பாடு அடையப்பட்டுள்ளது.

டில்லி, கல்கத்தா, பம்பாய், சென்னையில் உள்ள சோவியத் விஞ்ஞான, கலாசார கேந்திரங்களில் சிறந்த சோவியத் விஞ்ஞான, தொழில்நுட்ப, கலை கலாசாரப் படைப்புகளுடன் அறிமுகம் செய்து கொள்ளலாம், ருஷ்ய, சோவியத் எழுத்தாளர்கள், கவிஞர்களின் படைப்பு களைப் படிக்கலாம். உதாரணமாக டில்லியில் உள்ள சோவியத் விஞ்ஞான, கலாசார கேந்திரத்தின் நூலகத்தில் இலக்கியம், இயற்கை விஞ்ஞானங்கள், தொழில்நுட்பம், விண்வெளியியல், சுற்றுப்புறச் சூழல், சட்டம், சர்வதேச உறவுகள், ருஷ்ய, சோவியத் வரலாறு போன்ற பல்வேறு விஷயங்கள் சம்பந்தமாக ருஷ்ய, . ஆங்கில, இந்தி, உருது, பஞ்சாபி மொழிகளில் 35,000க்கும் மேற்பட்ட வெளியீடுகள் உள்ளன. சோவியத் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் பரஸ்பர விஞ்ஞான, கலை, கலாசார சாதனைகளின் மீது உள்ள ஆர்வம் எவ்வளவுக்கெவ்வளவு ஆழமானதோ அவ்வளவுக்கவ்வளவு இரு நாடுகளின் மக்களுக்கும் இடை யிலான நட்புறவும் ஒத்துழைப்பும் உறுதியானவை. இது ஒரு மகத்தான சக்தியாகும்,. சர்வதேசப் பாதுகாப்பும்

சமாதானமும் பரஸ்பர மன ஒற்றுமையும் வலுப்படுவதும் இச்சக்தியைப் பெரிதும் பொறுத்துள்ளன.

இந்தியாவில் ருஷ்ய மொழியும் சோவியத் யூனியனில் இந்திய மொழிகளும் பயிலப்படுவது இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் நட்புறவும் பன்முக ஒத்துழைப்பும் வெற்றிகரமாக வளருவதில் பெரும் முக்கியத் துவம் வாய்ந்தது என்பதில் சந்தேகமில்லை. ருஷ்ய மொழியின் மீது ஜவகர்லால் நேரு அக்கறை காட்டியது தெரிந்ததே. **சோவியத் ருஷ்யா** எனும் தன் நூலில் அவர் பின்வருமாறு எழுதினார்: ''மகத்தான சக்திகள் புதிய உலகைத் தோற்றுவித்துள்ள ருஷ்யாவைப் பற்றி, மதிப்புகள் முழுமையாக மாறியுள்ள ருஷ்யாவைப் பற்றி ருஷ்ய மொழியின் மூலம் அதிகம் தெரிந்து கொள்ளலாம்'' * .

இந்தியா சுதந்திரமடைந்த பின் இந்திய அறிவுத் துறையினரின் மத்தியில், குறிப்பாக இளைஞர்கள் மத்தியில் ருஷ்ய மொழியைப் ப்யிலுவதன் மீதான ஆர்வம் பெரிதும் அதிகரித்துள்ளது. ருஷ்ய மற்றும் சோவியத் கலாசாரத்தை அறியவும் மாபெரும் சோவியத் விஞ்ஞான, தொழில்நுட்ப சாதனைகளுடன் அறிமுகமாகவும் இது ஒரு முக்கிய சாதனமாகப் பயன்படும். 40ஆம் ஆண்டுகளின் இறுதியில் இந்தியாவில் ருஷ்ய மொழி போதிக்கப்பட்ட கல்விக் கூடங்களின் எண்ணிக்கையை விரல் விட்டு எண்ணி விடலாம் என்றால் இன்று இவற்றின் எண்ணிக்கை 500க்கும் அதிகம். பூனா, உஸ்மானியா, பெனாரஸ் இந்து பல்கலைக்கழகங்கள், டில்லியில் உள்ள நேரு பல்கலைக் கழகம் போன்ற பெரும் கல்விக் கூடங்கள் இவற்றிலடங்கும்.

துல்லியமான தொழில்நுட்ப விஞ்ஞானங்கள் மற்றும் இயற்கை விஞ்ஞானங்களைப் பயிலும் மாணவர்கள் மத்தியிலும் எதிர்கால விஞ்ஞானிகள், பொறியியலர்கள், மருத்துவர்கள் மத்தியிலும் சமீப ஆண்டுகளாக ருஷ்ய மொழியின் மீதான ஆர்வம் வளர்ந்து வருகிறது. இது இயற்கையானதே. ஏனெனில் ருஷ்ய மொழியின் மூலம் விஞ்ஞான, தொழில்நுட்ப சிந்தனையின் நவீன கண்டுபிடிப்பு களைப் பற்றி அறியலாம், நவீன தொழில்நுட்பத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம். விசேஷ துறைகளுக்கான பாடநூல்கள், விஞ்ஞான சஞ்சிகைகளின் எண்ணிக்கையில்

* *Soviet Land,* August 1985, № 16, p. 39.

ருஷ்ய மொழி ஆங்கிலத்திற்கு அடுத்தபடியாக உலகில் இரண்டாவது இடத்தை வகிக்கிறது. இன்று பல இந்தியர்கள் இந்தியாவின் மலர்ச்சியையும், முன்னோக்கிய இதன் இயக்கத்தைத் துரிதப்படுத்துவதையும் தொழிற்துறை உற்பத்தியிலும் பொருளாதாரத்தின் மற்ற துறைகளிலும் நவீன தொழில்நுட்பத்தைப் புகுத்துவதுடனும் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் விஞ்ஞான-தொழில்நுட்ப முன்னேற்றத்தின் சாதனைகளைப் பரவலாகப் பயன்படுத்துவதுடனும் தொடர்புபடுத்துகின்றனர்.

சோவியத்-இந்திய நட்புறவுகளின் வெற்றிகரமான வளர்ச்சி ருஷ்ய மொழியைப் பயிலும் வாய்ப்புகளை அதிகமாக்குகிறது. இந்தியப் பல்கலைக்கழகங்கள், கல்லூரிகளிலிருந்து ருஷ்ய மொழியை நன்கு பயில விரும்பும் திறமை மிகு ஆராய்ச்சி மாணவர்களும் பயிற்சியாளர்களும் சோவியத் யூனியனுக்கு அனுப்பப்படுகின்றனர். பிரபல புஷ்கின் ருஷ்ய மொழிக் கல்லூரி ருஷ்ய மொழியைப் போதிக்கும் முறையியலை செழுமைப்படுத்துவது சம்பந்தமாக இந்தியர்களுக்கும் மற்ற அயல் நாட்டு மாணவர்கட்கும் பயிற்சியளிக்கிறது. இக்கல்லூரியின் பிரதிநிதிகள் கருத்தரங்குகளை நடத்துவதற்காக முறையாக இந்தியாவிற்குச் செல்கின்றனர். ருஷ்ய மொழியைப் போதிக்கும் இந்திய ஆசிரியர்களும் இலக்கியவாதிகளும், சோவியத் யூனியனில் புஷ்கின் ருஷ்ய மொழிக் கல்லூரியும் லுமும்பா நட்புறவுப் பல்கலைக்கழகமும் நடத்தும் சர்வதேச ருஷ்ய இயலர்கள் சந்திப்புகளுக்கும் மேற்பயிற்சிகளுக்கும் வருகின்றனர். மாஸ்கோவிலிருந்து ருஷ்ய மொழிக்கான பாட முறையியல் நூல்களும் மற்ற துணை நூல்களும் இந்தியப் பல்கலைக் கழகங்களுக்கும் கல்லூரிகளுக்கும் அனுப்பப்படுகின்றன. இந்தியாவில் உள்ள ருஷ்ய மொழி நிபுணர்களுடனான ஒத்துழைப்பு மற்ற வழிகளிலும் வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது. உதாரணமாக இந்திய மாணவர்களுக்கான ருஷ்ய மொழிப் பாட நூல்களை உருவாக்குவதில் கூட்டு ஆசிரியர் குழுக்கள் ஈடுபடுகின்றன.

பல இந்தியப் பல்கலைக்கழகங்களில் ஒப்பந்தங்களின்படி சோவியத் ருஷ்ய மொழி ஆசிரியர்கள் பணி புரிகின்றனர்.

டில்லியில் ஜவகர்லால் நேரு பல்கலைக்கழகத்தின் கீழுள்ள ருஷ்ய ஆராய்ச்சி நிலையம் ருஷ்ய மொழியைப்

போதிக்கும் ஒரு முக்கிய மையமாகியுள்ளது. 1965இல் தோற்றுவிக்கப்பட்ட இது ருஷ்ய மொழி மற்றும் இலக்கியத் துறையில் பல ஆசிரியர்களையும் நிபுணர்களையும் உருவாக்கியுள்ளது. இங்கு நவீன பாட நூல்கள், வீடியோ சாதனங்கள், ஒலிப்பதிவுக் கருவிகள் முதலியன உள்ளன. இவை ருஷ்ய மொழியை விரைவாகவும் நன்கும் கற்க உதவுகின்றன. இங்கு மாணவர்கள் ருஷ்ய, சோவியத் இலக்கியம், வரலாற்றையும் கற்கின்றனர், சோவியத் வாழ்வின் பல்வேறு அம்சங்களைப் பற்றித் தெரிந்து கொள்கின்றனர்.

இந்தியாவில் ருஷ்ய மொழி மேன்மேலும் பிரபலமாகி வருவதைப் பற்றிக் கூறிய பூனா பல்கலைக்கழக நவீன ஐரோப்பிய மொழிகள் துறையின் தலைவர் டாக்டர் யோகேந்திர குமார் **சோவியத் லேண்ட்** இதழில் வெளியான கட்டுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: ''சோவியத் மக்களை நெருக்கமாக அறிந்து கொள்ளும் நாட்டம்தான் ருஷ்ய மொழியைப் பயிலுமாறு இந்தியர்களைத் தூண்டி விடும் முக்கியச் சக்தியாகும். மொழியும் கலாசாரமும் நெருங்கிய தொடர்புடையவை. ஒரு நாட்டு மக்களின் மொழியைக் கற்பது என்றால் அவர்களின் கலாசாரம், சிந்தனை, உலகக் கண்ணோட்டத்தைக் கற்பது என்று பொருள்'' * .

இந்திய மொழிகளைப் பயிலுவதன் மீது சோவியத் யூனியனில் உள்ள பெரும் அக்கறைக்கும் இந்த வார்த்தைகள் முழுக்கப் பொருந்தி வரும்.

ஒரு சில சோவியத் நகரங்களில் சில செகன்டரி பள்ளிகளிலேயே இந்தியோ உருது மொழியோ சொல்லித் தரப்படுகிறது. மாஸ்கோவில் உள்ள 19ஆவது போர்டிங் பள்ளி மிகவும் பிரபலமானது. 1984இல் இதற்கு இந்திரா காந்தியின் பெயர் சூட்டப்பட்டது. இங்கு ஒரு சில பாடங்கள் இந்தி மொழியில் போதிக்கப்படுகின்றன. மாஸ்கோவில் உள்ள இந்தியத் தூதரகப் பணியாளர்களும் இந்திய மாணவர்களும் சோவியத் நாட்டிற்கு வரும் இந்தியத் தூதுக் குழுக்களும் இப்பள்ளிக்கு அடிக்கடி வருகை தருகின்றனர். இப்பள்ளி மாணவர்கள் இந்திய இலக்கியப் படைப்புகளின் அடிப்படையில் அமெச்சூர்

* *Soviet Land*, September 1985, № 17, p. 36.

நாடகங்களை நடத்துகின்றனர், நாட்டுப் பாடல்களையும் கவிதைகளையும் இந்தி மொழியில் அரங்கேற்றுகின்றனர்.

ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் கல்லூரிதான் இந்திய மொழிகள், வரலாறு, கலாசாரம், சமூக வாழ்க்கை முதலியன போதிக்கப்படும் மிகப்பெரும் சோவியத் உயர் கல்விக் கூடமாகும். இங்குதான் இந்தியவியல் நிபுணர்களும் மற்ற கீழைய நிபுணர்களும் பயிற்றுவிக்கப்படுகின்றனர். இக்கல்லூரியில் உயர் தேர்ச்சி பெற்ற இந்திய மொழி வல்லுநர்களும், இந்திய இலக்கியம், வரலாறு, பொரு ளாதாரத்தைப் போதிக்கும் ஆசிரியர்களும் உள்ளனர். இவர்களில் பலர் அயல் நாடுகளில் பிரபலமானவர்கள். இங்கே இந்தியாவின் வளம் மிகு பாரம்பரியத்தையும் குறிப்பாக நவீன வளர்ச்சிக் கட்டத்தையும் பயிலுவதன் மீது முக்கியக் கவனம் செலுத்தப்படுகிறது. 1956இல், அதாவது இந்தியாவுடனும் மற்ற வளர்முக நாடுகளுடனும் சோவியத் யூனியனுக்கு உள்ள பன்முகத் தொடர்புகள் தீவிர வளர்ச்சியடைந்த ஒரு காலகட்டத்தில் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் கல்லூரி தோற்றுவிக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. திறமை மிக்க மொழிபெயர்ப் பாளர்கள், மொழி இயலர்கள், பொருளாதார நிபுணர்கள், வரலாற்று அறிஞர்கள், சமூகவியலர்களின் தேவை அதிகரித்தது. இவர்களின் அனுபவமும் ஞானமும் இந்தியா வுடனும் மற்ற விடுதலையடைந்த நாடுகளுடனும் சோவியத் யூனியனுக்கு உள்ள பன்முக ஒத்துழைப்பையும் நட்புறவையும் பலப்படுத்த உதவும். இக்கல்லூரியின் பட்டதாரிகள் சோவியத்-இந்திய உறவுகளின் பிரச்சினைகள் சம்பந்தமான கிட்டத்தட்ட எல்லா சோவியத் இலாக்காக்கள், ஸ்தா பனங்களிலும் பணியாற்றுவதில் வியப்பேதும் இல்லை. சோவியத் அயல் விவகாரத் துறை அமைச்சகம் உட்பட பல ஸ்தாபனங்கள், நிறுவனங்களுக்கான சர்வதேச நிபுணர் களைப் பயிற்றுவிக்கும் மாஸ்கோ அரசு சர்வதேச உறவுகள் கல்லூரியின் பாடத் திட்டத்தில் இந்தி, உருது, வங்க மொழி ஆகியவை முக்கிய இடத்தை வகிக்கின்றன. சோவியத்-இந்திய உறவுகளின் துறையில் நடைமுறைப் பணிக்கான தேர்ச்சி மிகு ஊழியர்களைப் பயிற்றுவிப்பதற்கு சோவியத் யூனியனில் எவ்வளவு பெரும் முக்கியத்துவம் தரப்படுகிறது என்பதற்கு இது தக்க சான்றாகும்.

லெனின்கிராத், தாஷ்கன்ட், தார்த்து பல்கலைக் கழகங்களிலும் மற்ற சில சோவியத் உயர் கல்விக் கூடங் களிலும் இந்திய மொழிப் பிரிவுகள் உள்ளன. இந்தியாவைப் பற்றிய விவரங்களிலும் இந்திய மொழிகளிலும் மேல் பயிற்சி பெற சிறந்த சோவியத் மாணவர்கள் இந்தியப் பல்கலைக்கழகங்களுக்கு அனுப்பப்படுகின்றனர். டில்லி, சென்னை, பம்பாய், கல்கத்தா பல்கலைக்கழகங்களில் சோவியத் மாணவர்களைக் காணலாம். இவர்கள் இந்தியர் களோடு சேர்ந்து பயிலுகின்றனர், தம் ஞானத்தைப் பகிர்ந்து கொள்கின்றனர், அவர்கள் ருஷ்ய மொழிப் பயில உதவுகின்றனர், இந்தியாவின் கடந்த காலம், நிகழ்காலம் பற்றிய தம் ஞானத்தை வளர்த்துக் கொள்கின்றனர்.

சோவியத் யூனியனில் மேன்மேலும் அதிகமான விஞ்ஞானி கள் இந்தியாவைப் பற்றிய பன்முக ஆராய்ச்சியில் ஈடு படுகின்றனர். சோவியத் விஞ்ஞானப் பேரவையைச் சேர்ந்த கீழைய ஆராய்ச்சிக் கல்லூரிதான் சோவியத் இந்தியவியலின் முக்கிய மையமாகும். இது பல நாடுகளில் பிரபலமானது. லெனின்கிராட், தாஷ்கன்ட், அஷ்ஹாபாத், துஷான்பே, திபிலீசி, ரீகா ஆகிய இடங்களில் இந்திய வரலாறு, கலாசாரம், பொருளாதாரம், தத்துவஞானம், இலக்கியம், மொழிகள் சம்பந்தமான ஆராய்ச்சிகளை நடத்தும் விஞ்ஞான ஆராய்ச்சி மையங்கள் உள்ளன. 1917ஆம் ஆண்டு மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சி வெற்றி பெறும் முன் ருஷ்ய இந்தியவியலர்களால் துவக்கப்பட்ட இந்திய ஆராய்ச்சியை சோவியத் விஞ்ஞானி கள் மார்க்சிய-லெனினியத் தத்துவத்தின் அடிப்படையில் பெரிதும் வளர்த்தனர். இவர்களுடைய ஆராய்ச்சிகளில் சுதந்திர இந்தியாவின் வளர்ச்சியில் இன்றைய கட்டத்தின் பிரச்சினைகளும் தேசிய விடுதலை இயக்க பிரச்சினைகளும் முக்கிய இடத்தை வகிக்கின்றன. நவீன இந்திய வர லாற்றின் பிரச்சினைகள் சம்பந்தமாகவும் இந்திய சமூக, பொருளாதார பிரச்சினைகள் சம்பந்தமாகவும் இ. எம். ரேய்ஸ் னெர், என். எம். கோல்த்பெர்க், அ. எம். தியாக்கவ், அ. எம். ஓசிப்பவ், வி. வி. பாலபுஷேவிச் போன்ற விஞ்ஞானி கள் பெரும் பணியாற்றியுள்ளனர். இவர்களை சோவியத் இந்தியவியலுக்கு அஸ்திவாரமிட்டவர்கள் என்று உரிமை யோடு கூறலாம். ஆர். அ. உலியானோவ்ஸ்கி, அ. இ. லெவ்

கோவ்ஸ்கி, ஜி. ஜி. கத்தோவ்ஸ்கி, கா. அ. அன்தோனவா, வி. பி. பாவ்லவ், எஸ். எம். மேல்மன், ஜி. கா. ஷிரோக்கவ், எல். பி. அலாயெவ், ஏ. என். கொமரோவ், அ. இ. சீச்செரவ், வி. ஜி. ரஸ்தியானிக்கவ், ஜி. எம். போன்காரத்-லேவின், ஏ. யா. லியுஸ்தேர்னிக் போன்றவர்கள் முதலில் கூறியவர் களின் பணியைத் தொடர்ந்தனர். இன்றைய இந்தியா வின் முக்கியப் பிரச்சினைகள் குறித்து அ. எம். மேல் னிக்கவ், எஸ். இ. தியுல்பானவ், எம். என். இகோரவா, தி. எஃப். திவியாத்கினா, எல். வி. ஷாப்பஷ்னிக்கவா போன்ற வர்கள் பல சுவாரசியமான, முக்கிய ஆராய்ச்சிகளை நடத்தியுள்ளனர். அ. ஏ. கிரனோவ்ஸ்கி, எஃப். என். நீலவ், அ. ஜி. வலோதின், எம். அ. பிலெஷோவா, ஏ. எஸ். யுர் லோவா, ஏ. அ. பிராகினா, ஏ. இ. மிரோனவா போன்ற பெரும் ஆராய்ச்சியாளர்கள் இன்று சோவியத் இந்திய வியலர் அணியில் அடங்குவர்.

சோவியத் இந்தியவியலர்களின் பல்லாண்டு பணியின் பயனாய் 1959-1969இல் இந்திய வரலாறு நான்கு தொகுதி களில் வெளிவந்தது. இதில் தொன்மைக்கால, மத்தியக் கால, புதிய மற்றும் நவீன இந்தியாவின் வரலாறு அடங்கியுள்ளது. இந்த அடிப்படை ஆராய்ச்சியில் இந்திய சமுதாய வளர்ச்சியில் ஏற்பட்ட முக்கிய மாற்றங்கள், வர்க்கங்கள் மற்ற சமூக குழுக்கள் தோன்றிய, சிதறுண்ட நிகழ்ச்சிப் போக்குகள், மக்கள் எழுச்சிகளின் வளர்ச்சி, தேசிய விடுதலை இயக்க எழுச்சி, இந்திய வரலாற்றின் பல்வேறு கட்டங்களில் நாட்டின் சமூகப்-பொருளாதாரக் கட்டமைப்பின் சிறப்பியல்புகள் முதலியன அடங்கியுள்ளன. இந்தியக் கலாசாரம், கலை மற்றும் இலக்கியம் பற்றிய பகுப்பாய்வின் மீது பெரும் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. சோவியத் கீழைய ஆராய்ச்சியில் கிழக்கத்திய நாடு ஒன்றின் தொன்மைக் காலம் முதல் நவீன காலம் வரையிலான வரலாற்று வளர்ச்சியைப் பற்றிய முதல் வெற்றிகரமான ஆராய்ச்சியாக இது அமைந்தது.

பின்னால் கா. அ. அன்தோனவா, ஜி. எம். போன்காரட்-லேவின், ஜி. ஜி. கத்தோவ்ஸ்கி ஆகியோர் எழுதிய சுருக்க மான இந்திய வரலாறு பன்முறை வெளிவந்தது.

இப்பதிப்புகள் சோவியத் வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. உலக வரலாற்று நிகழ்ச்சிப்

போக்கில் இந்தியா ஆற்றிய, ஆற்றி வரும் பங்கு, இரு நாடுகளுக்கும் இடையே அரசியல், பொருளாதார, கலாசார உறவுகள் வெற்றிகரமாக வளர்ந்து வருவது ஆகியவைதான் இதற்குக் காரணமாகும்.

இந்திய தேசிய விடுதலை இயக்கமும் பால கங்காதர திலகரின் நடவடிக்கையும் *(1958)*, **1857இல் இந்திய மக்கள் எழுச்சி** *(1957)* எனும் கட்டுரைத் தொகுப்பு வெளியானது சோவியத் இந்தியவியலின் வளர்ச்சியில் ஒரு முக்கிய மைல்கல்லாகும். மாபெரும் இந்தியத் தலைவர்களாகிய மகாத்மா காந்தி, ஜவகர்லால் நேருவின் அரசியல் கொள்கை யையும் உலகக் கண்ணோட்டத்தையும் ஆராய்வதன் மீது சோவியத் இந்தியவியலர்கள் கணிசமான கவனம் செலுத்துகின்றனர். இந்த விஷயத்தில் ஏ. என். கோமரோவ் மற்றும் அ. டி. லித்மனின் **மோகன்தாஸ் கரம்சந் காந்தியின் உலகக் கண்ணோட்டம்** (இது காந்தி நூற்றாண்டு விழாவின் போது வெளியிடப்பட்டது), **ஜவகர்லால் நேருவின் உலகக் கண்ணோட்டம்** *(1973)* எனும் கட்டுரைத் தொகுப்பு, ஒ. வி. மார்தீ ஷினின் **ஜவகர்லால் நேருவின் அரசியல் கண்ணோட்டம்** *(1981)* எனும் நூல் முதலியன குறிப்பிடத் தக்கவையாகும்.

60ஆம் ஆண்டுகளின் இரண்டாவது பாதியிலிருந்து சோவியத் இந்தியவியலர்கள் நவீன இந்தியாவின் சமூக-அரசியல் வளர்ச்சியின் சிக்கலான, முரண்பாடான நிகழ்ச்சிப் போக்குகள், கட்சி-அரசியல் போராட்டச் சிறப்பியல்புகள், சமூக-வர்க்க உறவுகளின் விசேஷ அம்சங்கள் முதலியவற்றின் மீது மேன்மேலும் அதிகக் கவனம் செலுத்துகின்றனர். இந்திய தேசிய காங்கிரஸ் சம்பந்தமான தி. எஃப். திவியாத் கினா மற்றும் அ. இ. ரெகீனின் ஆகியோரின் ஆராய்ச்சிகள் (இவை முறையே 1970இலும் 1977இலும் வெளிவந்தன) வாசகர்களிடையே பேரார்வத்தை ஏற்படுத்தின. அதே போல் இந்திய கிராமப் பகுதியில் வர்க்கப் போராட்டம், சமூக 'உறவுகளைப் பற்றிய ஆராய்ச்சிகள், இந்திய எதிர்கட்சிகளைப் பற்றிய ஆராய்ச்சிகள், மேற்கு வங்கம், உத்திர பிரதேசம், நாகலாந்து மாநிலங்களின் சமூக-அரசியல் பிரச்சினைகள் பற்றிய ஆராய்ச்சிகள் (இவை 60—80ஆம் ஆண்டுகளில் வெளிவந்தன) முதலியவையும் சுவாரசியமானவை. சர்வதேச அரங்கில் இந்தியாவின் பங்கு அதிகரித்துள்ளது, கூட்டுச் சேரா கருத்தமைப்பு

உருவாவதன் மீதும் இதன் நடைமுறை நிறைவேற்றத்தின் மீதும் இந்தியாவின் செல்வாக்கு ஆகியவற்றைப் பற்றி யூ. பி. நசேன்கோ, ஜி. பி. கரோஷ்கோ, தி. எல். ஷவுமியான் போன்ற சோவியத் விஞ்ஞானிகள் ஆராய்கின்றனர்.

சோவியத்-இந்திய உறவுகளின் கடந்த காலம் மற்றும் நிகழ்காலம் பற்றிய படைப்புகள் இந்தியவியல் ஆராய்ச்சி களில் கணிசமான இடத்தை வகிக்கின்றன. லெனின் கிராடைச் சேர்ந்த பிரபல இந்தியவியலர் ஏ. யா. லியுஸ் தேர்னிக் இத்துறையில் அடிப்படை ஆராய்ச்சிகளை நடத்தி யுள்ளார்.

இந்தியத் தத்துவஞான-மத முறைகள், போதனைகள், மாபெரும் இந்திய சிந்தனையாளர்களின் வளம் மிகு ஆன்மீக செல்வம் முதலியன சோவியத் இந்தியவியலர் களைப் பெரிதும் கவருகின்றன. இந்தியத் தத்துவஞானத்தின் சாராம்சத்தை ஆழ்ந்து ஆராய்வது மட்டும் சோவியத் விஞ்ஞானிகளின் நோக்கமல்ல. இந்திய ஆன்மீக கலாசாரத் தின் பொக்கிஷங்களை, குறிப்பாக அதிகம் ஆராயப்படாத புதிய மற்றும் நவீன வரலாற்றுக் கட்டத்தை சேர்ந்தவற்றை பரவலான சோவியத் மக்களுக்கு எடுத்துச் சொல்வதும் இவர்களின் நோக்கமாகும். இந்த விஷயத்தில் பிரபல சோவியத் இந்தியவியலராகிய அ. டி. லித்மன **சோவியத் லேண்ட்** நிருபருக்கு அளித்த பேட்டியில் கூறியது குறிப் பிடத்தக்கது. **நவீன இந்தியத் தத்துவஞானம்** உட்பட இந்தியத் தத்துவஞான சிந்தனை சம்பந்தமாக இவர் பல கட்டுரைகளையும் நூல்களையும் , எழுதியுள்ளார். மேற்கூறிய நூலை எழுதும்படி தன்னைத் தூண்டிய அம்சம் எது என்ற கேள்விக்குப் பதிலளிக்கையில் இவர் பின்வருமாறு கூறினார்: ''**தத்துவஞான வரலாற்று விரிவுரை கள்** எனும் பெயரில் வெளிவந்த மாபெரும் ஜெர்மானியத் தத்துவஞானி ஹெகலின் நூல்தான் இந்தியத் தத்துவஞான ஆராய்ச்சியில் இறங்குமாறு என்னைத் தூண்டிய நேரடி அம்சமாகும். தத்துவஞான வளர்ச்சியின் உலக நிகழ்ச்சிப் போக்கிலிருந்து ஹெகல் இந்தியத் தத்துவஞானத்தைக் கிட்டத்தட்ட விலக்கியிருந்தது என்னை வியப்பில் ஆழ்த் தியது. ஏதோ இந்தியர்களுக்கு சொந்த தத்துவஞானமே இல்லையென இவர் கருதினார். இவருடைய கருத்துப்படி இந்தியர்களிடம் மத முறைகள் மட்டுமே இருந்தன.

இக்கருத்தைப் பற்றி நான் பெரிதும் சந்தேகப்பட்டேன், விஞ்ஞான பகுப்பாய்வின் தனியான ஆராய்ச்சிப் பொருளாக இந்தியத் தத்துவஞானத்தை ஆராய முடிவு செய்தேன்.'' *

இந்திய நாகரிகத்தின் வளர்ச்சி மற்றும் உலக கலா சாரப் பொக்கிஷத்தில் இதன் மிகப் பெரும் பங்கு ஆகிய வற்றைப் பற்றிய பாரபட்சமற்ற சித்திரத்தைத் தரும் முயற்சிதான் சோவியத் இந்தியவியலின் சிறப்பு அம்சங்களில் ஒன்று எனக் கூறலாம். இந்தியாவின் மீது சோவியத் இந்தியவியலர்களுக்கு உள்ள ஆழ்ந்த பிடிப்பு, இந்திய மக்களின் மீது உள்ள அன்பு, பெரும் மதிப்பு ஆகியவையும் குறிப்பிடத் தக்கவையாகும். இது சோவியத் பேரவை விஞ்ஞானி அ. பி. பராணிக்கவிற்கு முற்றிலும் பொருந்தி வரும். சோவியத் யூனியனில் இந்திய மொழிகளைச் சொல்லித் தருவதில் ஏற்பட்ட வளர்ச்சியில் இவருக்குப் பெரும் பங்குண்டு. சோவியத் யூனியனில் முதன்முதலாக வெளிவந்த இந்தி இலக்கண நூல் மற்றும் துளசிதாசரின் ராமயண மொழிபெயர்ப்பு ஆகியவற்றின் ஆசிரியர் இவர் தான். இவர் தனக்குப் பின் பல திறமை மிகு இந்தியவியலர் களையும் மொழியியல் வல்லுநர்களையும் விட்டுச் சென்றார்; இவர்கள் சோவியத் நாட்டில் இந்தி, மற்ற இந்திய மொழிகளைச் சொல்லித் தருவதில் பெரும் பங்காற்றினர்.

சுதந்திர இந்தியாவின் சமூக-பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகள் குறித்த ஆராய்ச்சிகள் சோவியத் கிழக்கத்திய இயலில் முக்கிய இடத்தை வகிக்கின்றன. இந்த ஆராய்ச்சி களின் லட்சியம் ஒரு புறம், வளர்முக உலகின் மிகப் பெரும் நாடுகளில் ஒன்றாகிய இந்தியாவின் பொருளாதார மற்றும் சமூக பரிணாம வளர்ச்சியின் முக்கிய நியதிகளை யும் சிறப்பியல்புகளையும் சோவியத் மக்களுக்கு எடுத்துச் செல்வதும், மறு புறம், சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் தேசியப் பொருளாதாரத்தில் ஏற்படும் மாற்றங்களைக் கணக்கில் கொண்டு இரு நாடுகளுக்கும் இடையிலான பரஸ்பர அனுகூலமுள்ள பொருளாதார ஒத்துழைப்பை மேற்கொண்டு வளர்ப்பதற்கான விஞ்ஞான ரீதியான பாதைகளை கண்டுபிடிப்பதும் ஆகும். இந்தியா சுதந்திரமடைந்த பின் பொருளாதார வளர்ச்சியில் இது பரவலான, பல அம்சங்களில் ஈடு இணையற்ற அனுபவத்தை

* *Soviet Land*, December 1983, № 23, p. 42.

அடைந்துள்ளது எனும் அம்சம்தான் இந்தியாவின் மீது சோவியத் இந்தியவியலர்கள், பொருளாதார அறிஞர்கள், சமூக விஞ்ஞானிகள் ஆகியோர் பேரார்வம் காட்ட முக்கியக் காரணமாகும். இத்துறையில் ஆராய்ச்சிகளை மேற்கொண்டால் அவை மொத்தமாக, விடுதலையடைந்த நாடுகளின் விஷயத்தில் குறிப்பிட்ட வளர்ச்சி நியதிகளை நிர்ணயிக்கும் வாய்ப்பைத் தரும்.

இந்தியாவில் முதலாளித்துவ உறவுகளின் தோற்றத்தையும், கிராமத்திலும் நகரத்திலும் முதலாளித்துவ வளர்ச்சியின் சிறப்பியல்புகளையும் ஆராய்வதன் மீது இந்தியவியலர்கள், பொருளாதார நிபுணர்களின் படைப்புகளில் கணிசமான கவனம் செலுத்தப்படுகிறது. இவற்றில் அ. கி. லெவ்கோவ்ஸ்கியின் **இந்தியாவில் முதலாளித்துவ வளர்ச்சியின் சிறப்பியல்புகள்** *(1963)*, வி. இ. பாவ்லவின் **இந்திய பூர்ஷ்வாவின் தோற்றம்** *(1958)*, எஸ். எம். மேல்மனின் **இந்தியப் பொருளாதாரத்தில் அன்னிய ஏகபோக மூலதனம்** *(1959)*, அ. இ. சீச்செரவின் **பிரிட்டன் இந்தியாவைக் கைப்பற்றும் முன் இந்தியப் பொருளாதார வளர்ச்சி** *(1965)*, ஜி. ஜி. கத்தோவ்ஸ்கியின் **இந்தியாவில் விவசாய சீர்திருத்தங்கள்** *(1959)*, வி. ஜி. ரஸ்தியானிக்கவின் **பல் அமைப்பு சமுதாயத்தில் விவசாயத் துறையின் பரிணாம வளர்ச்சி** *(1973)* என்ற நூல்கள் முக்கியமானவை.

முதலாளித்துவ நாடுகளுடனும் சோஷலிச நாடுகளுடனும் இந்தியாவின் பொருளாதார உறவுகளைப் பற்றிய ஆராய்ச்சியும் இந்திய அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கை பற்றிய ஆராய்ச்சியும் கணிசமான அளவு வளர்ச்சியடைந்துள்ளன. வி. இ. பாவ்லவ் எழுதிய **ஏகாதிபத்தியமும் இந்தியாவின் பொருளாதார சுதந்திரமும்** *(1962)*, ஜி. கா. ஷிரோக்கவ் எழுதிய **இந்தியாவைத் தொழிற்துறைமயப்படுத்துதல்** *(1971)*, எல். இ. ரேய்ஸ்னெர் மற்றும் ஜி. கா. ஷிரோக்கவ் எழுதிய **இந்தியாவில் திட்டமிடுதல்** *(1966)*, எம். என். ஸ்தாசவின் **இந்தியாவும் சோஷலிச நாடுகளும்** *(1980)* ஆகிய நூல்களில் மேற்கூறிய பிரச்சினைகள் ஆராயப்பட்டுள்ளன.

இந்தியாவின் முன் நிற்கும் மற்ற பல முக்கிய பிரச்சினைகளும் சோவியத் பொருளாதார நிபுணர்கள், சமூகவியலர்களால் ஆராயப்படுகின்றன. பின்தங்கிய நிலையை அகற்றும் வழிகள், நிதி திரட்சி வழிகள், அரசுத் துறையின்

செயல்வன்மையை உயர்த்தும் முறைகள், பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக்கு நிதி உதவி வழங்குவது போன்ற பிரச்சினைகள் இவற்றில் அடங்கும். நிச்சயமாக இப்பட்டியலைத் தொடரலாம். ஆனால் இதுவரை கூறியவையே சோவியத் இந்தியவியலர்கள், பொருளாதார நிபுணர்களின் அக்கறைகள் எவ்வளவு பரவலானவை, சோவியத் யூனியனில் இந்தியவியல் ஆராய்ச்சிகள் எந்த மட்டத்தை அடைந்துள்ளன என்பதற்குச் சான்று பகர்கின்றன.

விஞ்ஞான வட்டங்களில் மட்டுமின்றி, பரவலான சோவியத் மக்களின் மத்தியிலும் இந்த ஆராய்ச்சிகள், இவற்றின் பயன்கள் மீது கவனம் திரும்பியுள்ளது. எனவே தான் **இந்தியா** எனும் ஆண்டுமலரை வெளியிடுவதென 1980இல் சோவியத் விஞ்ஞானப் பேரவை முடிவு செய்தது. இந்திய வரலாறு, பொருளாதாரம், சமூகவியல், அரசியல், கலாசாரத் துறைகளில் சோவியத் விஞ்ஞானிகள், நிபுணர்களின் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இந்த ஆண்டு மலரில் இந்திய வாழ்க்கையின் பல்வேறு அம்சங்கள், வரலாறு, அதன் சுதந்திர வளர்ச்சியின் சாதனைகள் மற்றும் வாய்ப்புகள், சோவியத்-இந்திய உறவுகளின் பிரச்சினைகள் ஆகியவற்றைப் பற்றி பாரபட்சமற்ற வகையில் சுவாரசியமான கட்டுரைகள், விவரங்கள் வெளிவருவதால் இதற்கு சோவியத் வாசகர்களின் மத்தியில் பரவலான அங்கீகாரமும் செல்வாக்கும் கிடைத்துள்ளன.

சோவியத் விஞ்ஞானிகள் தம் ஆராய்ச்சிகளின் முடிவுகளையும் அனுபவத்தையும் பரவலான வகையில் இந்தியர்களுடன் பகிர்ந்து கொள்கின்றனர். டில்லியில் உள்ள ஜவகர்லால் நேரு பல்கலைக்கழகத்துடனும் பொருளாதார வளர்ச்சி நிலையத்துடனும் இந்திய தேசிய இலக்கியப் பேரவையுடனும் சோவியத் விஞ்ஞானிகளுக்கு நீண்ட காலமாகவே நல்ல தொடர்புகள் நிலவுகின்றன. சோவியத் விஞ்ஞான ஆராய்ச்சி மையங்களுக்கும் பூனாவில் உள்ள கோகலே அரசியல், பொருளாதார நிலையம், அஹமதாபாதில் உள்ள சர்தார் பட்டேல் கேந்திரம், மற்ற இந்திய ஆராய்ச்சி ஸ்தாபனங்கள் ஆகியவற்றிற்கும் இடையிலான ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது. ஒரு சில ஆண்டுகளுக்கு முன் சமூக விஞ்ஞான ஒத்துழைப்பு கூட்டு சோவியத்-இந்தியக் கமிஷன் தோற்றுவிக்கப்பட்டது.

இரு நாடுகளின் விஞ்ஞானிகளுக்கும் இடையிலான பரஸ்பர அனுகூலமான தொடர்புகளை வளர்த்து வலுப்படுத்த இது பெரிதும் உதவுகிறது. கூட்டு கருத்தரங்குகளுக்கு ஏற்பாடு செய்வதில் இது பெரும் பணியாற்றுகிறது. இவை முறையாக இந்தியாவிலும் சோவியத் யூனியனிலும் நடைபெறுகின்றன.

1970இல் இரு நாடுகளின் விஞ்ஞானிகளின் கூட்டு உழைப்பின் பயனாய் **சோவியத் யூனியனும் இந்தியாவும்** எனும் ஒரு பெரும் நூல் வெளிவந்தது. அடுத்து, சோவியத் மற்றும் இந்திய இலக்கியப் படைப்புகள் அடங்கிய பல் தொகுதி நூல்வரிசையை வெளியிட திட்டமிடப்பட்டுள்ளது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே கலாசார, விஞ்ஞான, தொழில்நுட்பத் துறைகளில் தொடர்புகள் தீவிரமாக வளர்ச்சியடைந்ததால் இதற்கேற்ற உடன்படிக்கையைச் செய்து கொள்ளும் ஆலோசனை முன்வைக்கப்பட்டது. 1960 பிப்ரவரி 12இல் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே கலாசார, விஞ்ஞான, தொழில்நுட்ப ஒத்துழைப்பு பற்றிய உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. இதன் அடிப்படையில் கலாசாரம், விஞ்ஞானம், கல்வி ஆகிய துறைகளில் பரிமாற்றங்கள் பற்றிய இரண்டாண்டு செயல்திட்டங்கள் உருவாக்கப்படுகின்றன. கலைக் குழுக்கள், கலைஞர்களின் பரஸ்பரப் பயணங்கள், கண்காட்சிகளுக்கு ஏற்பாடு செய்வது, கூட்டு விஞ்ஞான செயல்திட்டங்களை நிறைவேற்றுவது, ஆராய்ச்சி மாணவர்கள், பயிற்சியாளர்களின் பரிமாற்றம் முதலியன இவற்றிலடங்கும். திரைப்படத் துறை, வானொலி, தொலைக் காட்சி, நூல் வெளியீடு ஆகிய துறைகளில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பு வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது. டில்லியில் நடைபெறும் சர்வதேசப் புத்தக சந்தையில் சோவியத் பதிப்பகங்களும் மாஸ்கோ சர்வதேசப் புத்தக சந்தையில் இந்தியப் பதிப்பகங்களும் பங்கேற்பது நல்ல பழக்கமாகியுள்ளது. இச்சந்தைகள் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை நடக்கின்றன.

இந்தியா சுதந்திரமடைந்ததன் 30ஆவது ஆண்டு விழாவையொட்டி 1977இல் சோவியத் யூனியனில் நடைபெற்ற இந்திய கலாசார விழாவும் மாபெரும் அக்டோபர்

சோஷலிசப் புரட்சியின் 60ஆவது ஆண்டு நிறைவை ஒட்டி இந்தியாவில் நடைபெற்ற சோவியத் கலாசார விழாவும் இரு நாடுகளுக்கும் இடையிலான கலாசாரத் தொடர்புகளின் வளர்ச்சியில் முக்கிய மைல் கற்களாக அமைந்தன.

கலாசாரம், விஞ்ஞானம், மற்ற துறைகளில் நிலவும் தொடர்புகள் சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் முக்கிய அங்கமாக விளங்குவதை மேற்கூறிய விஷயங்கள் ஆணித் தரமாக மெய்ப்பிக்கின்றன. எனவே 1985 மே மாதம் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி சோவியத் யூனி யனுக்கு வருகை தந்த போது, பயண முடிவில் வெளியான சோவியத்-இந்தியக் கூட்டு அறிக்கையில் இரு தரப்பாரும் கலாசாரம், விஞ்ஞானம், உடல்நலப் பாதுகாப்பு, கல்வி, தகவல் ஒலிபரப்பு, உலாப்பயணம், விளையாட்டு ஆகிய துறைகளில் தம்மிடையே உள்ள ஒத்துழைப்பை வளர்த்து வலுப்படுத்தத் தயாராக இருப்பதாக அறிவித்தது முற்றி லும் இயற்கையே.

1987—1988ஆம் ஆண்டுகளில் சோவியத் யூனியனிலும் இந் தியாவிலும் நடைபெறும் கலை விழாக்கள் இரு நாடுகளின் கலாசார வாழ்விலும் முக்கியப் பங்காற்றும். இவை அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் 70ஆம் ஆண்டு நிறைவிற்கும் இந்தியச் சுதந்திர தினத்தின் 40ஆம் ஆண்டு நிறைவிற்கும் அர்ப் பணிக்கப்படும். இவ்விழாக்களின் வரம்புகளுக்குள் நடைபெறும் ஏராளமான கண்காட்சிகள், கலைநிகழ்ச்சிகள், மற்ற நிகழ்ச்சி களின் மூலம் எல்லா இந்திய மாநிலத் தலைநகரங்களிலும் சோவியத் யூனியனின் குடியரசுகளின் தலைநகரங்களிலும் வாழும் மக்கள் இரு நாடுகளின் கலை, கலாசாரம், விஞ்ஞான-தொழில்நுட்ப சாதனைகளைப் பற்றி அறியலாம். மி. செ. கர்பச் சோவும் ராஜீவ் காந்தியும் கலைவிழா கமிட்டிகளின் கௌரவத் தலைவர்களாக இருப்பார்கள்.

நம்மிரு நாடுகளின் மக்களுக்கும் இடையிலான நட்புறவை யும் பரஸ்பர மன ஒற்றுமையையும் வளர்த்து வலுப் படுத்துவதில் சமூக நல ஸ்தாபனங்கள் முக்கியப் பங்காற்று கின்றன. 1958இல் தோற்றுவிக்கப்பட்ட சோவியத்-இந்திய நட்புறவுக் கழகம், 1952 இலிருந்து இயங்கி வரும் இந்திய-சோவியத் கலாசாரக் கழகம் (இஸ்கஸ்) மற்றும் 1981இல் புனரமைக்கப்பட்ட சோவியத் நண்பர்கள் கழகம் முதலியன

இவற்றில் குறிப்பிடத்தக்கவை ஆகும். இந்த ஸ்தாபனங்களின் பன்முக நடவடிக்கைகள் சோவியத் மற்றும் இந்திய அரசு, அரசியல் தலைவர்கள் எந்த லட்சியங்களுக்காகப் பாடுபடுகின்றனரோ அவற்றை வளர்த்து, வலுப்படுத்துகின்றன. இவை உயர்வான பணியாற்றுகின்றன, நட்புணர்வும் நல்லெண்ணமும் பரவலான மக்கள் திரளினரிடையே உருவாக உதவுகின்றன, இரு நாடுகளின் மக்களுக்கும் இடையில் உள்ள நம்பிக்கையையும் பரஸ்பர மன ஒற்றுமையையும் வலுப்படுத்துகின்றன.

இந்தியக் குடியரசு தினம், சுதந்திர தினம், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையேயான சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் கையெழுத்தானதன் ஆண்டு நிறைவு ஆகியவற்றிற்கு அர்ப்பணிக்கப்பட்ட சோவியத்-இந்திய நட்புறவு மாத விழாக்களும் வார விழாக்களும் இரு நாடுகளிலும் பரவலாகக் கொண்டாடப்படுகின்றன. நட்புறவுக் கழகங்களின் மூலம் கலைஞர்கள், பெண்கள், இளைஞர்கள், விளையாட்டு வீரர்கள், தொழிற்சங்க ஊழியர்களின் தூதுக்குழுக்கள் பெருமளவில் பரஸ்பரம் பயணம் செய்கின்றன. மாஸ்கோ — டில்லி, லெனின்கிராட் — பம்பாய், வோல்காகிராத் — சென்னை, இவானவோ — அஹமதாபாத், தாஷ்கன்ட் — பாட்டியாலா ஆகிய சோதர நகரங்களின் உறவுகளை வளர்க்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

இந்திய-சோவியத் கலாசார கழகத்தைத் தோற்றுவித்த டாக்டர் பாலிக், சய்ஃபுதீன் கிச்சுலு, சாஹிப் சிங் சோகே ஆகியோர் சோவியத்-இந்திய நட்புறவை வளர்ப்பதில் பெரும் பணியாற்றினர். கே. பி. எஸ். மேனன் நீண்ட காலமாக இஸ்கஸ் தலைவர் பதவியிலிருந்தார். இஸ்கஸ் தலைவர்களாகிய கிருஷ்ண அய்யர், டி. ஏ. தேசாய், லித்தோ கோஷ், பிரபல சமூக நலத் தொண்டர் அருணா ஆசப் அலி, சோவியத் நண்பர்கள் கழகத்தின் முதல் தலைவர் நூருல் ஹசன், இவருக்குப் பின் இப்பதவிக்கு வந்த வி. பி. சிவசங்கர் ஆகியோர் சோவியத் நாட்டில் பிரபலமானவர்கள். இவர்கள் சோவியத், இந்திய மக்களுக்கு இடையிலான தொடர்புகளை வளர்ப்பதில் பெரும் பணியாற்றினர்.

சோவியத்-இந்திய நட்புறவுக் கழகத்தின் நடவடிக்கை

இடையறாது விரிந்து, பரந்து வருகிறது. இது சோவியத் நாட்டின் மிகப் பெரும் பொதுஜன சங்கங்களில் ஒன்றாகும். பிரபல சமூக நலப் பிரமுகர்கள், அரசுப் பிரமுகர்கள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள், மற்ற அறிவுத் துறையினர், ஏராளமான தொழிலாளர்கள், கூட்டுப் பண்ணை விவசாயிகள் முதலானோர் இதில் உறுப்பினர்களாயுள்ளனர். இதற்கு 20க்கும் மேற்பட்ட குடியரசு, மாவட்ட, நகரக் கிளைகளும் சுமார் 350 அடிமட்ட ஸ்தாபனங்களும் உள்ளன. இவை இரு நாடுகளின் மக்களுக்கும் இடையிலான நட்புறவு, பரஸ்பர மன ஒற்றுமை, பன்முக ஒத்துழைப்பை மேலும் வளர்க்கப் பாடுபடுகின்றன.

நம்மிடையேயுள்ள நட்புறவு கோடிக்கணக்கான சோவியத், இந்திய மக்களின் இதயங்களின் ஊடாகச் செல்கிறது. இதனால் இந்த நட்பின் எதிர்காலத்தை நாம் உறுதியோடு பார்க்க முடியும்.

* * *

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கும் இடையே ராஜதந்திர உறவுகள் நிலைநாட்டப்பட்டு 40 ஆண்டுகள் உருண்டோடி விட்டன. இக்காலகட்டத்தில் சோவியத்-இந்திய நட்புறவு எனும் ஒரு அற்புதமான கட்டிடம் எழுந்துள்ளது. 1971ஆம் ஆண்டு செய்து கொள்ளப்பட்ட சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தின் அடிப்படையில் இந்த கட்டிடம் இரு நாடுகளின் மக்களுக்கும் உலக சமாதானத்திற்கும் சர்வதேசப் பாதுகாப்பிற்கும் சேவை புரிகிறது. 40 ஆண்டுகள் என்பது வரலாற்று வளர்ச்சியில் ஒப்பீட்டளவில் குறுகிய காலகட்டமாகும். ஆனால் இந்தக் காலகட்டத்தில் சோவியத்-இந்திய உறவுகள் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளன. வரலாற்று வளர்ச்சியில், வேறுபட்ட சமூக அமைப்புகளையுடைய இரண்டு அரசுகளுக்கிடையே உறவுகளில் இதற்கு இணையானதைக் கண்டுபிடிப்பது கடினம்.

இரு நாட்டு மக்களின் நலன்களுக்காக, உலகம் முழுவதும் சமாதானத்தைப் பேணிக் காப்பதற்காக நட்புறவையும் பன்முகத் தொடர்புகளையும் வளர்த்து வலுப்படுத்த இந்திய நண்பர்களோடு சேர்ந்து முன் போன்றே தொடர்ந்து பாடுபட சோவியத் மக்கள் தயார்.

**விற்பனையாளர்கள்**
**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,*
*சென்னை — 600098*

**ஷோ-ரூம்**

*136, அண்ணாசாலை, சென்னை — 600002*

**கிளைகள்**

*80, மேலக் கோபுர வீதி, மதுரை — 625001*
*3—4, நேரு ஸ்டேடியம், கோயம்பத்தூர் — 641018*
*42/7, சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி — 620008*
*செர்ரி ரோடு, சேலம் — 636001*

**விற்பனை நிலையங்கள்**

*3-22-75-D, மதுரை சாலை;*
*திருநெல்வேலி ஜங்ஷன் — 627001*
*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*
*சேரிங் கிராஸ், உதகமண்டலம் — 643001*
*நகராட்சி அலுவலகம் எதிரில், திண்டுக்கல் — 624001*